# திருக்குறளின் உட்கிடை
# சைவ சித்தாந்தமே

'சித்தாந்த வித்தகர்'
க. வச்சிரவேல் முதலியார்

வெளியீடு
சைவ சித்தாந்த மன்றம்
244, திருவள்ளுவர் தெரு
ஆழ்வார்நகர், மதுரை - 625 019.

முதற்பதிப்பு : ஆகச்டு, 1953
2ஆம் பதிப்பு : சனவரி, 1979
திருத்திய 3ஆம் பதிப்பு : திசம்பர், 2000

விலை : ரூ. 50

# THIRUKKURALIN UTKIDAI SAIVA SIDDHANTHAME

By

'Siddhanta Vithakar'
K. VAJRAVEL MUDALIAR, B.A., L.T.,

Published by:
Saiva Siddhanta Mandram
244, Thiruvalluvar Street
Alwar Nagar
Madurai - 625 019. (Phone : 859210)

Amuthachakam, Madurai - 625 010. Ph : 782029

# பதிப்புரை

*“வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து*
*வான்புகழ் கொண்ட தமிழ்நாடு!”*

என்றார் அமரகவி பாரதியார். இம் மன்பதை உய்யும் பொருட்டு ஒப்பிலா ஒரு நூலை அளித்த பெருமை வள்ளுவருக்கு உண்டு! எச் சமயத்தவரும் போற்றுமாறு திருக்குறள் நூலைத் தந்தமையால், அவர் ‘வான்புகழ் வள்ளுவர்’ எனப்பட்டார்!

‘சைவசமயம் மிகமிகப் பழமையானது’ என்பது ஆராய்ச்சியாளர்கள் கண்ட முடிபு. பண்டைத் தமிழ் இலக்கண நூலாம் தொல்காப்பியத்திலும், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு முதலான சங்க இலக்கியத்திலும் சைவ சித்தாந்தக் கருத்துக்களைக் காண்டல் கூடும்; அவ்வகையில் திருக்குறளிலும் அத்தகைய கருத்துக்கள் உள்ளன என்பதும் மறுக்கமுடியாத உண்மை.

‘சைவ சித்தாந்த வித்தகர்’ அமரர் க. வச்சிரவேல் முதலியார் அவர்கள் எழுதிய ‘திருக்குறளின் உட்கிடை சைவசித்தாந்தமே’ எனும் இந்நூல், அளவை முறையில் ஆராய்ந்து எழுதப்பட்ட ஓர் அரிய கருவூலம்.

‘சைவநெறி’ பண்டைத் தமிழர் கைக்கொண்ட – வாழ்வுக்கு உகந்த உயர்நெறி. அதனாற்றான் மேலைநாட்டுக் கிறித்துவப் பாதிரியாராம் டாக்டர் ஜி.யு. போப் ஐயர் அவர்கள், சைவ நூலான திருவாசகத்தையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து அருளினாராதல் வேண்டும்!

‘சைவநெறியை ஒவ்வொருவரும் தம் வாழ்வில் பின்பற்றொழுக வேண்டும்’ எனும் குறிக்கோளுடன் மதுரை மாநகரில் நிறுவப்பட்டது ‘சைவ சித்தாந்த மன்றம்’. **தமிழவேள் பி. டி. இராசன்** அவர்களின் அருமந்த மகனாரும், தமிழகச் சட்டப் பேரவைத் தலைவர் **மாண்புமிகு பி.டி.ஆர். பழநிவேல்ராசன் அவர்களின்** அருமைத் தமையனாரும், தமிழ் இன்னிசை ஏந்தலுமான – பொறியர் திரு. **பி.டி.ஆர். கமலத் தியாகராசன், பி.இ., அவர்களைத் தலைவராகக் கொண்டு, இம்மன்றம் செயலாற்றிவருகின்றது.**

இம்மன்றத்தின் முதல் வெளியீடாகத் 'திருக்குறளின் உட்கிடை சைவசித்தாந்தமே' எனும் இந்நூலினை வெளியிடுவதில் பெருமையுறுகின்றோம். இதனை வெளியிட இசைவு தந்த, க. வச்சிரவேல்முதலியாரவர்களின் துணைவியார் திருமதி வ. ஞானாம்பாள் அவர்கட்கு எங்கள் மனங்கனிந்த நன்றி. இந்நூல் அச்சிடப் பொருளுதவிபுரிந்த மன்ற உறுப்பினர்கட்கும், இது வெளிவரப் பெரிதும் துணைபுரிந்த செயற்குழு உறுப்பினர்கட்கும், அச்சுப்படிவம் ஒப்புநோக்கித் தந்த முனைவர் திரு. ச. சாம்பசிவனார், 'நூலாசிரியரின் வாழ்க்கை வரலாறு' எழுதித்தந்த முனைவர் திரு. ச. கங்காதரன், நன்முறையில் மிகக் குறுகிய காலத்தில் அச்சேற்றி வெளிக்கொணர்ந்த மதுரை அமுதச்சகத்தார் ஆகிய அனைவர்க்கும் எங்கள் நன்றி.

இந்நூலினைத் தமிழ்ப் பெருமக்கள் வாங்கி ஆதரிக்குமாறு அன்புடன் வேண்டுகின்றோம்.

இங்ஙனம்

**சைவ சித்தாந்த மன்றத்தினர்.**

# முனைவர் தமிழண்ணலின் மதிப்புரை

(2ஆம் பதிப்பு)

இன்றைய தமிழகத்தில் சிவநெறி விளக்கும் மெய்ந்நெறியாளராகத் திகழ்பவர்களில் குறிப்பிடத்தக்கார் மிகச் சிலரே என யாவரும் அறிவர். அவருள்ளும் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவர் க. வச்சிரவேல் முதலியார் ஆவர்.

இந்நூலில் சிவநெறி அடிப்படைகளும் பிறநெறி அடிப்படைகளும் செவ்வனே விளக்கப்பெற்றுள்ளன. விவாத முறையில் ஒவ்வொன்றையும் ஆராய்ந்து ஒரு முடிவுக்கு இட்டுச் செல்லும் ஆராய்ச்சி நெறிக்காக ஒரு முறையும், தமிழர்களின் பழஞ் சமயமாகிய சிவநெறியின் அடிப்படைகளைப் புரிந்து கொள்வதற்காகப் பிறிதொரு முறையும், உலகப் பொது மறையாகிய அப்பழந்தமிழ் நூலில் தமிழர்க்குரிய நாகரிகப் பண்பாட்டு அடிப்படைக்கூறுகள் அடிநாதமாய்க் கிடப்பது முரணாகாது என உணர்தற்காக ஒரு முறையும் எனப் பலமுறை கற்கத் தகுவது இந்நூல்.

திருக்குறள் 'பொது மறை' என்பதை ஏற்று, அதன் உட்கிடையாகப் பழந்தமிழர் போற்றிய, இந் நாட்டிற்குரிய மெய்ந்நெறியும் ஒழுக்க நெறியும் அமைந்துள என விவாதிக்கும் இந்நூல் தத்துவவழி ஆய்வாளர்க்குப் பெரு விருந்தாகும்.

இத்தகையதொரு சிந்தனையைத் தூண்டும் நூலைப் படைத்தளித்தமைக்காகச் சிவநெறிச் சான்றோர் க. வச்சிரவேல் முதலியார் அவர்களுக்குத் தமிழுலகம் நன்றி பாராட்டுகிறது.

மதுரை 10–1–1979.

**தமிழண்ணல்**

# சித்தாந்த வித்தகர்
# ச. அருணைவடிவேலு முதலியாரின்
# கருத்துரை
(முதற் பதிப்பு)

இவ்வாசிரியர் சிலர்போல, திருக்குறளும் சைவசித்தாந்தமும் எனப் பெயரிட்டுச் சில குறட்பாக்களுக்கு நேரான சில சைவசித்தாந்தக் கொள்கைகளையும் சில சைவ நூற்பாடல்களையும் எடுத்துக்காட்டிவிட்டுத் 'திருக்குறள் சைவ சித்தாந்த நூலே' என முடிபு கட்டி விடாது, 'திருக்குறள் பொது மறையே! ஆயினும் அது சைவ சித்தாந்த நோக்குடையது' என்னும் கருத்துப்பட, 'திருக்குறளின் உட்கிடை சைவசித்தாந்தமே' எனப் பெயரிட்டு அந்நூலின் குறிப்புப் பொருள்களை மிகமிக நுணுகி ஆராய்ந்து நூலை ஆக்கியிருத்தல் இவர்தம் உண்மை ஆராய்ச்சி முறையையும் திறனையும் விளக்கும்.

சைவசித்தாந்த நூல்களிற் பழகினும் பல்கால் தெரியலாகாத சித்தாந்த நுண்பொருள்கள் பலவற்றை இந்நூலால் எளிதின் உணரலாகும். சித்தாந்த நூற்குறியீட்டுச் சொற்களில் வடசொல்லாக உள்ள பல சொற்கள் இந் நூலில் தமிழ்ச் சொற்களாக்கப்பட்டிருக்கின்றன.

திருக்குறள் சைவ சித்தாந்தத்தையே அடிப்படையாகக் கொண்டது என்பதற்கு ஆசிரியர் இந்நூலின் நடுவிலும் முடிவிலும் ஒரு சிறந்த காரணத்தைக் காட்டியுள்ளார். அது 'சித்தாந்த சைவ நெறி, தமிழ்ச் சான்றோர் சென்ற நெறியாகும்' என்பதே! தமிழ்ச் சான்றோர் சென்ற நெறி சித்தாந்த சைவ நெறியாகவே, திருவள்ளுவர் சென்ற நெறியும் அதுவாவதல்லது வேறொன்றாகாதென்பது அவரது முடிபு. அம் முடிபு நேரிய முடிபேயாம்.

சி. அருணை வடிவேலு முதலியார்

16 – 9 – 1953.

# 'சித்தாந்த வித்தகர்'

## க. வச்சிரவேலனார்

*முனைவர் ச. கங்காதரன்*

சான்றோர் உடைய தொண்டை நாட்டின் தலைநகராகத் திகழும் காஞ்சிமாநகர் முத்தி தரும் தலங்கள் ஏழனுள் முக்கியமாகக் கருதப்பெறுகிறது. 'கலிகெழு காஞ்சி' என்று சங்க இலக்கியத்தில் புகழப்பெற்றது. காசியை விட ஒரு இன்ஞ் (ஞ்) சிறந்தது காஞ்சி என்று திருமுருக கிருபானந்தவாரியார் அவர்களால் புகழப்பெற்றது. இத்தகு காஞ்சி மாநகரில் சைவப்புகழ் நிரம்பிய சைவக் குடியில் 24–5–1906ல் திருமிகு. க. வச்சிரவேலனார் அவர்கள் தோன்றினார்கள்.

காஞ்சிபுரம் பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளியில் கற்றுப் பின் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் 1929ல் பி. ஏ. பட்டம் பெற்றார். 1932ல் எல்.டி. பட்டம் பெற்றார். 1930ல் இருந்து 1960 வரை காஞ்சி பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளியில் உதவி ஆசிரியராக இருந்து, பின் அதன் தலைமை ஆசிரியராக 6 ஆண்டுகள் பணி செய்து, 1966ல் ஓய்வு பெற்றார். 1964ல் 'நல்லாசிரியர்' எனக் குடியரசுத் தலைவர் விருது பெற்றார்.

1923ல் முறையாகத் திருப்பாதிரிப்புலியூர் திருப்பெருந்திரு. ஞானியார் சுவாமிகளிடம் சிவஞான போதச் சிற்றுரையைக் காஞ்சிபுரத்தில் கேட்கத் தொடங்கிச் சொந்த முயற்சியாலும் பெரியவர்கள் கூட்டுறவாலும் சைவ சாத்திரங்களிலும் இலக்கியங்களிலும் பயின்று, மேன்மை அடைந்தார்.

1944 நவம்பர் முதல் 1946 சூன்வரை திருவாவடுதுறை, தருமபுரம் ஆதீனங்களால் மயிலாடுதுறையில் நடத்தப்பெற்ற மெய்கண்டார் கல்லூரியில் முதல்வராகப் பணி செய்தார். எல்லா ஆதீனங்களுடனும், சென்னை சைவசித்தாந்தப் பெருமன்றத்துடனும், நெருங்கிய தொடர்புடையவராய்த் திகழ்ந்தார். 1969 முதல் 1975 செப்டம்பர் வரை திருவாவடுதுறை ஆதீன வித்துவானாக இருந்து, திருமடத்தின் பல்வகை சாத்திரப்பணிகளுக்கும் உறுதுணையாக இருந்தார். 1975 செப்டம்பர் 29ஆம் தேதியில் இருந்து 1981 ஆம் ஆண்டு வரை மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் சைவ சித்தாந்தத் தத்துவத் துறையின் தனி அலுவலராகப் (Special Officer) பணி செய்து பல்கலைக் கழகப் பணிக்கு அணி செய்தார்.

திரு. க. வச்சிரவேலனார் கலந்துகொண்ட சைவசித்தாந்த மாநாடுகள் பல. அவரிடம் பயின்று பழகிய மாணவர்கள் பலர். அவர்களுள் அண்மையில் சிவபிரான் திருவடி அடைந்த குன்றக்குடி அடிகளார் முக்கியமானவர். தம் ஆசிரியர் திரு. க.வ. அவர்கட்காகக் குன்றக்குடி அடிகளார், தருமபுரத்தில் மாணவராக இருந்தபோது, திருமடத்தின் நடைமுறைகளையும் மீறி, தம் ஆசிரியருக்கு மரியாதை செய்தது, அதற்காக அடிகளார் பட்ட துன்பங்கள் ஆகியவற்றை, திரு. பொன்னீலன் அவர்கள் அடிகளாரின் வரலாற்று நூலில் குறிக்கிறார்.

தமிழரின் வாழ்வியல் சட்டத்தைத் திருக்குறள் நமக்கு அளிக்கிறது. திருக்குறள் பொதுமறை என்பதை ஏற்று, அதன் உட்கிடையாகப் பழந்தமிழர் போற்றிய, இந்நாட்டிற்குரிய மெய்ந்நெறியும் ஒழுக்கநெறியும் அமைந்துள்ளன எனும் கருத்தை, 'திருக்குறளின் உட்கிடை சைவசித்தாந்தமே' எனும் தலைப்பில் 1951ல் சீகாழிப்பதியில் பிரமபுரீசர் திருக்கோயிலில் சொற்பொழிவு வடிவில் திரு. க.வ. அவர்கள் வெளியிட்டார். இதனை அறிந்த மதுரை ஆதீன கர்த்தர் (தற்போது இருப்பவர்க்கு முன்இருந்த சீர் வளர் சீர் சோம சுந்தர தேசிகர்) 1953ல் 'திருக்குறளின் உட்கிடை சைவசித்தாந்தமே' எனும் நூலை முதல் பதிப்பாக வெளியிட்டார். முனைவர். தமிழண்ணல் அவர்கள் முயற்சியால் இந்நூல் 4–1–1979ல் இரண்டாம் பதிப்பாகச் சில மாற்றங்களுடன் வெளியிடப்பட்டது. இந்நூலில் சிவநெறி அடிப்படைகளும் பிறநெறி அடிப்படைகளும் செவ்வனே விளக்கப் பெற்றுள்ளன. 'விவாத முறையில் ஒவ்வொன்றையும் ஆய்ந்து ஒரு முடிவுக்கு இட்டுச் செல்லும் ஆராய்ச்சி நெறிக்காக ஒரு முறையும், தமிழர்களின் பழஞ்சமயமாகிய சிவநெறியின் அடிப்படைகளைப் புரிந்து கொள்வதற்காக ஒரு முறையும், உலகப் பொதுமறையாகிய அப்பழந்தமிழ் நூலில் தமிழர்க்குரிய நாகரிகப் பண்பாட்டு அடிப்படைக் கூறுகள் அடிநாதமாய்க் கிடப்பது முரணாகாது என உணர்தற்காக ஒரு முறையும் எனப் பன்முறை கற்கத் தகுவது இந்நூல்" என முனைவர் தமிழண்ணல் அவர்கள் இந்நூலின் மதிப்புரையில் கூறுகிறார். "சைவ சித்தாந்த நூல்களில் பழகினும் பல்கால் தெரியலாகாத் சித்தாந்த நுண்பொருள்கள் பலவற்றை இந்நூலால் எளிது உணரலாகும். சித்தாந்த நூற்குறியீட்டுச் சொற்களில் வடசொற்களாக உள்ள பல சொற்கள் இந்நூலில் தமிழ்ச்சொற்களாகப் பட்டிருக்கின்றன" என மகாவித்துவான் திரு. சி. அருணைவடிவேலு முதலியார் கருத்துரை அளிக்கிறார்.

திரு. க. வ. அவர்கள் நிறைந்த தமிழ்ப்பற்று மிக்கவர்கள். சிவஞானபோதம் தனித்தமிழ்நூல் எனும் கருத்துடையவர்கள். சிவஞானபோதத்தின் தனித்தன்மையை நிலைநாட்டுதற்கு இந்திய தத்துவப் பின்னணியில்

பார்க்கவேண்டும், அதற்கு வடமொழியில் உள்ள சாத்திர நூல்களைப் பயிலுதல் அவசியம். வடமொழி நூல்களைப் பயிலும் போதும் தமிழ் மரபை நாம் மனத்தில் நிலைநிறுத்திக் கொண்டு பயிலவேண்டும் என்னும் நினைவுடையவர்கள் நம் சித்தாந்த கலைச் செல்வர். திரு. அருணைவடிவேலு முதலியார் அவர்கள் திரு. க. வ. அவர்கள் வடமொழியில் உள்ள குறியீட்டுச் சொற்களுக்கு நேரான தமிழ்ச் சொற்கள் கண்டவர்களில் முதன்மையானவர் எனக் கூறுவர். 'சத்' என்ற வடமொழிச் சொல்லுக்குச் 'செம்பொருள்' என்பது நேர்தமிழ்ச் சொல் என்பது திரு. க. வ. அவர்களின் கொடை.

திரு. க. வ. அவர்கள் அஞ்சாமையை இயல்பாக உடையவர். சிறந்த பேச்சாளர். பொதுக்கூட்டத்தில் ஒருமுறை மாணவர்கட்கு உரையாற்றும்போது திருக்குறள், தேவாரம், திருவாசகம் போன்ற நூல்களைப் படித்து, வாழ்வைச் செம்மைப்படுத்திக் கொள்ளவேண்டும் என்று கூறினார். அதே மேடையில் இருந்த அப்போதைய சட்டமன்ற உறுப்பினர், இராசகோபால், 'திருக்குறள் மட்டும் போதும் தேவார திருவாசகங்கள் தேவையில்லை' என்று கூறி, அவர் வெளியே செல்ல முற்பட்டார். அவரைச் சிறிதுநேரம் இருக்க வைத்து, தேவார, திருவாசகம் எவ்வாறு திருக்குறளின் தருக்க இயல் விளக்கமாக அமைகின்றன என்பதை மாணவர்கள் மனங்கொள்ளும் வகையில் திரு. க. வ. அவர்கள் விளக்கினார். இதைக்கேட்டுக் கொண்டிருந்த அன்பர் ஒருவர் முதல் அமைச்சராக இருந்த அண்ணாவிடம் கூறியபோது, திரு. க. வ. போன்ற பெரியவர்களின் பேச்சுக்கு மறுப்புத் தெரிவிப்பது நல்லதல்ல என்று அவர் கூறினார்.

அண்ணாவால்தான் காஞ்சிநகர் பெருமைபெறுகிறது என்று சிலர் கூறியபோது, திக்நாகர், தருமபாலர், பரிமேலழகர் போன்ற பல அறிஞர்களைப் பழங்காலத்தில் உடையது. அத்துடன் தான் மட்டும் அல்லாமல் திரு. க. வ., திரு. சி. அருணைவடிவேலு முதலியார் முதலிய பெருமக்களால் தற்போதும் காஞ்சிநகர் பெருமை பெற்றுக் கொண்டிருக்கிறது என்றும் அண்ணா அவர்கள் கூறினார்கள்.

திரு. க. வ. அவர்கள் உண்மையான பத்தி தேவை என்று வற்புறுத்தும் அதே நேரத்தில் விஞ்ஞான உண்மைகளை மதிக்கும் பத்தியே சிறந்தது என்ற கருத்துமுடையவர். திருவாவடுதுறை மடத்தில் தங்கியிருந்தபோது வேம்பு ஒன்று அசாதாரணமாக இருக்கிறது, இதை வழிபட வேண்டும் என்று விரும்பி, சிலர் வழிபாடுகள் நடத்த முற்பட்டபோது, இது நோயுள்ள மரம், இதை வழிபட வேண்டிய அவசியம் இல்லை; 'ஞானம் ஈசன்பால் அன்பே என்றனர் ஞானம் உண்டார்' என்று பத்தியின் உண்மையான தன்மையை விளக்கினார்.

காசிப்பல்கலைக் கழகத்திலும் அலகாபாத் பல்கலைக் கழகத்திலும் திரு. க.

வ. அவர்களின் பேச்சு வடமொழி அறிஞர்களையும் கவர்ந்தது என்று அப்போது காசியில் தத்துவத்துறையில் பணியாற்றிய அமரர் டாக்டர். சிவராமன் கூறியுள்ளார். திருவருட்பயன் எனும் சாத்திரநூலுக்குப் பொழிப்புரையை இலங்கையில் தம் சொற்பொழிவு நிகழ்ச்சிகளுக்கிடையில் மூன்றே நாள்களில் திரு. க. வ. அவர்கள் எழுத, சான்றோர்கள் இலங்கையில் வெளியிட்டனர். பிறகு நிரம்ப அழகிய தேசிகர் உரை திரு. க. வ. அவர்கள் குறிப்புரையுடன் திருவாவடுதுறை ஆதீனச் சார்பாக இரண்டாம் பதிப்பாக வெளியிடப்பட்டது.

திருவுந்தியார் மூலப்பதிப்பு முதன்முதல் 1866ல் திரிசிரபுரம் மதுரை நாயகம் பிள்ளையால் சென்னை இலைசியம் அச்சகத்தால் வெளியிடப்பட்டது. தில்லைச் சிற்றம்பலவனார் என்னும் சிவப்பிரகாசர் உரை கொ. சண்முகசுந்தர முதலியாரால் 1874ல் வெளியிடப்பட்டது. காஞ்சி ஆலால சுந்தரம்பிள்ளை இலக்கணம் முத்துக்குமாரசாமித் தம்பிரான் ஆகியவர்கள் தனித்தனியே இந்நூலுக்கு உரைவரைந்தனர். காலத்தால் முந்தியதாகிய பொழிப்புரை 1940ல் சைவசித்தாந்தப் பெருமன்றத்தால் வெளியிடப்பட்டது. இவ்வுரைகளை ஆய்ந்து திருவுந்தியாருக்கு திரு. க. வ. அவர்கள் எழுதிய உரை சைவசித்தாந்தப் பெருமன்றத்தினரால் வெளியிடப்பட்டது. திரு. க. வ. அவர்களின் பதிப்பு நூல் முழுமையும் பின்வந்த மெய்கண்ட பொருட் பாகுபாட்டினுள் திருவுந்தியாரை அமைத்து விளக்கும் சிறப்புடையது.

திருமந்திரம் 9ஆம் தந்திரத்து விளக்கவுரை திரு. க. வ. அவர்களால் திருவாவடுதுறை ஆதீன வெளியீடாக வெளியிடப்பட்டது. இந்நூலில் சைவசித்தாந்த உண்மைகளை நடைமுறை வாழ்வில் கடைப்பிடிக்க வேண்டியதன் அவசியத்தை உணர்த்துகிறார். சைவம் என்ற பழநி தேவத்தானம் வெளியிட்ட நூலும் (சைவமும் வைணவமும் என்ற தொகுப்பில் முற்பகுதி). திருக்குற்றாலத் தல புராண உரையும் இவர்தம் சைவசித்தாந்த நுண்மாண் நுழைபுலத்தைக் காட்டும். முனைவர். மு. வ. அவர்கள் சென்னைப் பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறைத் தலைவராக இருந்தபோது சொர்ணாம்பாள் அறக்கட்டளைச் சொற்பொழிவு திரு. க. வ. அவர்களால் நிகழ்த்தப்பட்டது. இது பின்னர் 'திருக்குறள் துலக்கும் ஒழுக்கநெறி' என்னும் தலைப்பில் திரு. நா. ப. தணிகை அரசு அவர்கள் முயற்சியால் வெளியிடப்பட்டது.

மதுரையில் திரு. க. வ. அவர்கள் வாழ்ந்தபோது அவருடன் நெருங்கிப் பழகும் பேறு அடியேனுக்குக் கிட்டியது. பல மன்றங்கள் அவர் புலமையைத் தங்கள் நிகழ்ச்சிகள் மூலம் பணிகொண்டன. பொருளை வேண்டாது, அமைப்பாளர் விரும்பிக் கொடுக்கும் தொகையை மனமுவந்து பெற்றுக்கொள்ளும் பழக்கம்

உடையவர் திரு. க. வ. அவர்கள். 1979ல் திருவாவடுதுறை ஆதீனமும் மதுரை காமராசர் பல்கலைக்கழகமும் இணைந்து வேனில் வகுப்பு நடத்தின. அவ்வகுப்பில் திரு. க. வ. அவர்கள் கல்லூரி, உயர்நிலைப்பள்ளி ஆசிரியர்கட்காகத் திருவருட்பயன், சில தேவார திருப்பதிகங்கள் ஆகியவற்றை விளக்கி உரையாற்றினார்.

மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் பல்கலைக் கழக மானியக் குழுவின் ஆதரவால் மூன்று வார வேனில் வகுப்பு திரு. க. வ. அவர்கள் தனி அலுவலராக இருந்த போது நடத்தப்பட்டது. இவ் வகுப்பில் திரு. வச்சிரவேலர் அவர்கள் இயக்குநராக இருந்து பேராசிரியர் வெள்ளைவாரணனார், திரு. ந. இரா. முருகவேள், ஈழ நாட்டுத் தத்துவப் பேராசிரியர் டாக்டர் இராமகிருஷ்ணன் ஆகியவர்களைக் கொண்டு சிவஞானபாடியம் சிறப்பாக நடத்தியமை குறிப்பிடத்தக்கது. தென்னகத்தின் பல பகுதிகளிலிருந்து அறிஞர்கள் இவ் வகுப்பில் கலந்து பயன் பெற்றனர்.

சிவஞான மாபாடியத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தது இவரது நிலைத்த பெரும்பணியாகும். இந்நூல் மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தால் 1985 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. சிவஞான மாபாடியத்தின் பொருள் நிலையைத் தெரிந்து கொள்ள இந்நூல் ஒரு பேருதவியாகும். சைவ சித்தாந்தப் புலமை, தருக்க இயல்வன்மை, இந்திய தத்துவ நூலறிவு, இலக்கண நுட்பம், வடமொழி நூலறிவு முதலியவற்றை இந்நூலில் கண்டு மகிழலாம்.

பல திருமடங்களில் ஆதீன வித்துவானாகவும், சித்தாந்தக் கலைச் செல்வராகவும் திகழ்ந்த திரு. க. வச்சிரவேலனார் அவர்கள் 10 – 3– 1989ல் இவ்வுலக வாழ்வை நீத்து, சிவபெருமான் திருவடியில் நண்ணரிய சிவானந்த வாழ்வைப் பெற்றார்.

திருச்சிற்றம்பலம்.

# நூலாசிரியரின் முன்னுரை

(2ஆம் பதிப்பு)

ஒழுக்கநெறி, மெய்ந்நெறி என்னும் இரண்டும் மக்கள் அறிந்து பின்பற்றுதற்கு உரியவை. இவை இரண்டனையும் ஒருங்கிணைத்து உணர்த்தும் நூல் திருக்குறள் ஒன்றே. இது தமிழ் மரபு, பண்பாடு, நாகரிகம் என்பவற்றின் உரையாணியாகத் திகழ்வது.

தமிழ் மக்களின் பொது மறையாக உள்ள இவ் அருமந்த நூலை, எல்லாச் சமயத்தவரும் தத்தம் நூல் எனக் கொண்டே பாராட்டுவர். அவ்வகையில் சிவநெறியினரும் தமக்கு உரிய நூலே எனப் பாராட்டுவதில் குற்றம் இல்லை. இக்கருத்துப் பற்றி நல்லிசைப் புலமை வாய்ந்த மெல்லியலார் ஒளவை மூதாட்டியார்,

*"தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்*
*மூவர் தமிழும் முனிமொழியும் – கோவை*
*திருவா சகமும் திருமூலர் சொல்லும்*
*ஒருவா சகம்என் றுணர்"*

எனத் தாம் அருளிச் செய்த நல்வழியில் முடிநிலை உறுதிமொழியாக அருளிச் செய்கிறார்.

இக்கருத்துப் பற்றி அளவை முறையின் ஆராய்ந்து, 'திருக்குறளின் உட்கிடை சைவ சித்தாந்தமே' என நிறுவும் நூல் இது. இந்நூற்பொருள் முதற்கண் 1951–ல் சீகாழிப் பதியில் பிரமபுரீசர் திருக்கோயிலில் சொற்பொழிவு வடிவில் வெளியிடப்பட்டது. பின்னர் 1953–ல் முதற்பதிப்பாக வெளியிடப்பட்டது. இப்போது சில சிறு மாற்றங்களுடன் இரண்டாம் பதிப்பாக வெளியிடப்படுகிறது.

இதில் செய்ய வேண்டிய சில மாற்றங்களை அறிவித்தும், இதற்குத் தக்க மதிப்புரை ஒன்றினை எழுதி உதவியும், பல வகையில் உறுதுணையாக நின்ற

அஞ்சல்வழிக் கல்வித்துறைத் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் தமிழண்ணல் அவர்களுக்குப் பெரிதும் கடப்பாடு உடையேன். இவ்வுரைநடை நூலில் வரும் அருஞ்சொற்களைத் தேர்ந்தெடுத்து அகர வரிசைப் படுத்தி உதவிய டாக்டர் இரா. மோகன் அவர்களுக்கும் அச்சுப்படிகளைப் பொறுப்புடன் பார்த்துதவிய உயர்திரு க. நாராயணன் அவர்களுக்கும் என்னுடைய நன்றி உரியது.

சைவசித்தாந்தத் தத்துவத்துறை,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை – 625 021, 4 – 1 – 1979

இங்ஙனம்,
**க.வச்சிரவேல் முதலியார்**
தனி அலுவலர்

உ

நமச்சிவாய வாழ்க

பெறுதல்

அமைப்பாளர்கள்
சைவ சித்தாந்த மன்றம்
மதுரை.

என் கணவர் திரு. க. வச்சிரவேலு முதலியார் அவர்கள் எழுதிய "திருக்குறளின் உட்கிடை சைவ சித்தாந்தமே" என்ற நூல் இராயல்டி முறையில் இந்த ஒரு பதிப்பு மட்டும் வெளியிடுவதற்குச் சைவ சித்தாந்த மன்றத்துக்கு இதன் மூலம் எனது இசைவைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

(ஒ—ம்.) வ. ஞானாம்பாள்
22, அனந்தோசி தெரு
பிள்ளையார் பாளையம்
காஞ்சிபுரம் – 631 501.

# பொருட்குறிப்பு

பக்கம்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருக்குறளின் உட்கிடை சைவசித்தாந்தமே

## முன்னுரை

### *திருக்குறளின் பொதுமை*

திருக்குறள் உலகப் பெருநூல்களுள் ஒன்று ; தமிழ்ப் பெருமக்களின் பொதுமறை. மக்கள் உறுதி உணர்ந்து உய்தற்கு, இன்றியமையாது வேண்டப்படும் அடிப்படை உண்மைகளையும், வாழ்க்கையின் குறிக்கோளையும் இனிது விளக்கி, ஒழுக்கநெறியினை இழுக்கின்றி எடுத்துரைப்பது.

இதனைத் தமிழ்மொழியைக் கருவியாகக் கொண்டு தத்தம் கொள்கைகளைப் பரப்பலுற்ற பல சமயத்தவரும் "எம் நூல்", "எம் நூல்" என்றே போற்றி இதனுட் சில பல மேற்கோள்களை எடுத்து ஆண்டுவந்துள்ளனர். ஆயினும், ஒன்றோடொன்று முரணுவனவாயுள்ள பல கருத்துக்களும் உலகப் பெருநூல் அளித்த ஆசிரியர், தெய்வப்புலமைத் திருவள்ளுவர்க்கு உடன்பாடாக, அல்லது முடிந்த முடிபாக, இருத்தல் இயலாது. என்னை? திருக்குறளைப் போற்றி உரைப்போருள், கடவுள் உண்டென்பாரும் உளர், இன்றென்பாரும் உளர்! இருவினையும், வினைப்பயனும், மறுபிறப்பும் உள எனக் கொள்வாரும் உளர்; அவற்றை இல என்பாரும் உளர்! இன்னும் இங்ஙனம் முரணும் பலதிறத்தினர் உளர். இப் பல திறத்தவர் முடிபுகளுக்கும் திருக்குறள் இடந்தரும் எனின், அது நுண்ணுணர்வில்லார் கூற்றேயாய் முடியும்.

### *கடவுள் உண்மையும் கடவுள் வழிபாடும்*

நூலின்கண் நுழைந்து நோக்கின், தொடக்கத்திற்றானே,

*"அகர முதல எழுத்தெல்லாம்; ஆதி*
*பகவன் முதற்றே உலகு"*

என்னும் பாட்டு உளது. இதன் பொருள் யாது? "எழுத்தின் வகைகளெல்லாம் ஆதி அகரம் காரணமாக இயக்கத்தையுடையன; அஃதேபோல், உயிரும் உயிரல் பொருளும் எனப்படும் உலகத்தொகுதியும் ஆதிபகவன் காரணமாகத் தொழிற்படுதலை உடையது' என்பது. இதனால், "இம் மலை, தீ உடையது, புகையுடைமையால்; யாண்டு யாண்டுப் புகை, ஆண்டு ஆண்டுத் தீ, அடுக்களை போல," எனக் கூறப்படும் கருதலளவை வாய்பாட்டின் வைத்து, "(தொழிற்படும்) உலகு, அத் தொழிற்பாட்டிற்குக் காரணமாக (அருவாய், உணர்வாயுள்ள) ஆதி பகவனை உடையது; யாது யாது தொழிற்பாடு உடையது, அது, அது அத் தொழிற்பாட்டிற்குக் காரணமாய், அருவாயுள்ள தோன்றலை உடைத்தாம். புறத்திசைத் தெழுதலும் எழுதப்படுதலும் ஆகிய இயக்கத்தையுடைய எழுத்தின் வகைகள் அவ்வியக்கத்திற்குக் காரணமாக ஆதி அகரம் எனப்படும் (அருவாய், உணர்வாயுள்ள) நாதத்தை உடையவாதல்போல" எனக் கடவுள் உண்மைக்கு அளவை கூறியவாறாயிற்று. இன்னும் அவர் இவ்வளவின் நில்லாது,

*"கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்*
*நற்றாள் தொழாஅர் எனின்"*

எனக் 'கல்வியறிவின் பயனாவது கடவுளடி தொழுதலே' எனவும்,

*"கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்*
*தாளை வணங்காத் தலை"*

எனத் "தலை முதலிய உறுப்புக்கள் முதல்வனை வணங்குதல் முதலியன செய்யாதபொழுது, காணாத கண்போல, கேளாத செவிபோல, மற்றும் தம் தம் புலன்களைக் கொள்ளாத பிற பொறிகள்போலப் பயனற்றவையாய்க் குற்றமுடையவாம்" எனவும் கூறுகின்றார்.

இவற்றைப் பொருட்படுத்தி உணரும் ஒருவன், வள்ளுவா வழியைக் கடைப்பிடிப்போனாயின், கடவுளை இல்பொருளென மயங்கும் மருட்கையோ, அன்றி அஃது இல் பொருளோ உள்பொருளோ எனத் தடுமாறி நிற்கும் ஐயமோ உடையனாதல் எங்ஙனம் கூடும்! மற்று அவன் 'கடவுள் உள்பொருளே, அது வழிபடற்பாலது' என்னும் தெளிவுணர்வன்றே உடையனாவன்! ஆயினும், இக்காலத்துப் பேச்சு மேடைகளில் ஏறி நின்று, திருவள்ளுவரையும் அவர் தம் நூலையும் புகழ்ந்து பேசி, அதே மூச்சில், "கடவுள் இருந்தால் இருக்கட்டும்; அவருக்கு நாம் வணக்கம் செலுத்துதல் வேண்டுமா? நம் வணக்கத்தால், வழிபாட்டால், பூசையால், வாழ்த்தால் அவருக்கு ஆவது என்ன? அன்றி அவற்றால் நமக்குத்தான் ஆவது என்னே? கடவுளைக் கும்பிட்டுக் கூத்தாடுதல்

வேண்டுமோ?" எனக் கரைவாரை யாம் காண்கின்றோம். இன்னோரை யாம் என்னென்று கொள்வது? அறியாமை உடையோர் என்று கொள்வதா? அன்றிக் கரவுடையோர் என்று கொள்வதா? இரண்டுமன்றி உள்ளச்சார்பும் உள்ளத் தடிப்பும் காரணமாக இவ்வாறு பொறுப்பின்றிப் பிதற்றுகின்றனர் என்று கொள்வதா? இன்னோர் கருத்துக்களுக்கும், உரைகளுக்கும் திருக்குறள் இடந்தரும் என எவ்வாறு இயம்புதல் கூடும்?

திருவள்ளுவர் அறத்துப்பாலைக் கூறப்புகுமுன், பாயிரமாக நான்கு அதிகாரங்களைக் கூறுகின்றார்; அவற்றுள் முதலாவது கடவுள் வாழ்த்து என்னும் அதிகாரம். இவ்வதிகாரத்தால், "முதற்பொருளாகிய கடவுள், மக்கள் இதனைச் செய்க! இதனைச் செய்யாதொழிக! எனத் திருவுள்ளத்துக் கொள்ளும் ஆணையே அறமாவது; ஆகலின், அறத்தை உள்ளவாறு உணர்ந்து அதன் வழிநின்று பயன் கொள்ள விழைவார் கடவுள் உண்மைக் கொள்கையும், கடவுள் வழிபாடும் உடையராதல் வேண்டும்" என்னும் அடிப்படையுண்மையினை விளக்கியுள்ளார். இதனை, அமைந்து உணர்வோர் கடவுளுண்மைக் கொள்கையினையும், கடவுள் வழிபாட்டினையும் உயிர்க்கு உறுதியெனக் கொள்வர். இஃது இங்ஙனமாக, கடவுள் வழிபாட்டினை இகழ்வோர் இவ்வருமந்த பெருநூலைத் தமக்கு உறுதிதேற்றும் நூலெனப்பேசுதல் நாடகமாத்திரையாய் முடிவதன்றி உண்மையாகாதின்றே!

## *பால்வரை தெய்வம்*

இனித் திருவள்ளுவர்க்கு, "உயிர் இவ்வுடம்பிற்கு வேறாய் உள்ளதென்பதும், அது தான் செய்யும் வினைக்கீடாக வேறு வேறு பிறப்புக்களுட் புகுந்து உழன்று வரும்" என்பதும் கருத்தாம். அவர்,

*"குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே*
*உடம்போ டுயிரிடை நட்பு"*

என்கின்றார். இதனால், புள் (பறவை) குடம்பை (கூடு அல்லது முட்டை)யின் வேறாயினாற்போல, உயிர் எனப்படுவது உடம்பின் வேறாயுள்ளதென்பது தெரிகின்றது. அன்றியும்,

*"உறங்கு வதுபோலும் சாக்கா டுறங்கி*
*விழிப்பது போலும் பிறப்பு"*

என்கின்றார். இதனால், "உறங்குதலும் விழித்தலும் ஒருவனுக்கு இயல்பாய்க் கடிதின் மாறி மாறி வருதல் போல, உயிர்கட்குச் சாக்காடும் மீளப் பிறத்தலும் இயல்பாய்க் கடிதின் மாறி மாறி வரும்" என, மறு பிறப்புண்மை பெறப்படும். இத்

திருக்குறள்கள், 'உடம்பிற்கு வேறாய் உயிர் என ஒன்று இல்லை' என்போர் கருத்துக்கும், மறு பிறப்பு உண்மை கொள்ளாத கிறித்துவம், இஸ்லாம் முதலிய சமயத்தினர் கொள்கைக்கும் அரண் ஆவது எப்படி? அவர்தாம் இவற்றைப் பிரமாணம் என முழு மனத்துடன் எங்ஙனம் பேசுதல் கூடும்?

இன்னும்,

"*வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி*
*தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது*"

என்பது வள்ளுவர் வாய்மொழி. இதனாலும், 'இருள்சேர் இருவினை' எனக் 'கடவுள் வாழ்த்து' அதிகாரத்துக் கூறியதனாலும், உயிர்கட்கு 'இருவினை' என்னும் தொடக்கு உண்டென்பதும், முன் முன் செய்த வினை பின் பின் பிறப்புக்களினும் பயன் தரும் என்பதும், அப் பயனை வகுத்து வினையைச் செய்த உயிர்க்கு முதல்வன் ஊட்டுவான் என்பதும் தெளிவாக விளங்கும்.

இப் பாட்டுக்கள், "வினைப்பயனே இல்லை" என்பார்க்கும், "வினைப்பயன் உண்டு; ஆயினும் அதனை வினை தானே உருக்கொண்டு வந்து ஊட்டுமேயன்றி, அதற்கு வேறாய், அதனை வகுத்து உயிர்களுக்குக் கூட்டும் ஒரு முதற்பொருள் வேண்டா" என்பார்க்கும் அரணாவது எங்ஙனம்?

## *திருக்குறள் முடிபுகள்*

இவற்றால் நமக்கு விளங்குவது என்ன? "திருக்குறள் பல திறப்பட்ட கொள்கையினையுடைய பலரானும் கொள்ளப் படுவதே! ஆயினும், அஃது அவர் கொள்ளும் கொள்கைகள் எல்லாவற்றிற்கும் இடந்தராது" என்பது.

இதனாலன்றோ தேனீக்குடிக்கீரனார் என்னும் புலவர்,

"*பொய்ப்பால பொய்யேயாய்ப் போயின; பொய் அல்லாத*
*மெய்ப்பால மெய்யாய் விளங்கினவே – முப்பாலில்*
*தெய்வத் திருவள் ளுவர்செப் பியகுறளால்*
*வைய்த்து வாழ்வார் மனத்து*"

என்றார்!

கடவுளும் மறுபிறப்பும், வினைப்பயனும் முதலாக உள்ளவற்றை உளவென்பார் கூற்றே மெய்யாக, அவை தாம் இல என்பார் கூற்றுப் பொய்யேயாய்ப் போதல் மேற் சுட்டியவாறு நூலினுள் நுழைந்து காண்பார்க்கு எளிதின் விளங்கும். இங்ஙனம் மேலும் பகுத்து உணரலாகும்.

இனி, இங்ஙனமாயின்,

*“ஒன்றே பொருளெனின் வேறென்ப; வேறெனின்*
*அன்றென்ப ஆறு சமயத்தார் – நன்றென*
*எப்பா லவரும் இயைபவே வள்ளுவனார்*
*முப்பால் மொழிந்த மொழி”*

என்ற கல்லாடனார் கருத்து யாதோ எனின், திருக்குறள், முடிந்த உண்மைகளை எப்பாலவரும் இயைந்து கொள்ளும்படி நயம்பட அமைத்துக் கூறுகின்ற தென்பதேயாம். இது திருக்குறளின் தனிச் சிறப்பு என்று உணர்தற்பாலது.

## சித்தாந்த சைவரின் உரிமை

திருக்குறளின் உண்மை நோக்கை உணர விரும்புவோர் கருதுதற்குரியது ஒன்று உண்டு: திருக்குறளை யாவரும் தம் தம் நூலெனப் பொதுப்படக் கூறிக் கொள்கின்றனர். எனினும், அவருள் எத்துணைப் பேர் திருக்குறள் முழுவதையும் பிரமாணமாகக்கொண்டு, அதனுள் எப்பகுதியினையும் நலிந்தோ வலிந்தோ பொருள் கொள்ளாமல் செம்பாகமாகப் பொருள் கொள்வோர்? சிலர் சிற்சில குறள்களின் செம்பொருளைக் கொள்ளமாட்டாராய் இடர்ப்பட்டு, அதன் முடிபினை நழுவ விடுவர்; அன்றி வலிந்தும் நலிந்தும் பொருள் கொள்ளத் துணிவர். வேறு சிலர் காரணமின்றிப் பாடங்களை மாற்றுவர்; மற்றுஞ் சிலர் சில பாட்டுக்களையோ, அப் பாட்டுக்களைக் கொண்டுள்ள அதிகாரங்களையோ திருவள்ளுவர் இயற்றவில்லை என்பர். இன்னும் சிலர், தமிழ் இலக்கியங்களின் மரபுபற்றி எளிதின் விளங்கும் என்னும் கருத்தால் ஆண்டாண்டுக் குறிப்பாகச் சுட்டப்பட்ட வரலாறுகள் முதலியவற்றைத் தமிழ்ப் பெருவழக்குப் பற்றிக் கொள்ளாமல், பிற வழக்குப் பற்றிப் புனைந்துரைப்பர். இவ்வாறெல்லாம் இடர்ப்பாடின்றிப் பாட்டுக்களின் செம்பொருள் குறிப்புப் பொருள்களைக் கைக்கொண்டு, இயைபு, பொருந்துமாறு என்று இன்னவற்றால் நூலின் நுட்பம் உணர்ந்து நூல் முழுவதும் பிரமாணமெனப் பேணி வந்துள்ள மக்கள் யார் என எண்ணிப் பார்க்கின், அவர் சித்தாந்த சைவராக இருத்தல் கண்கூடு. இதனாற்றான், உள்ளச்சார்பு பற்றாது, இந்நூலை ஆய்ந்துணர்ந்த அறிஞர்கள் இதன்கண் உள்ள அடிப்படையுண்மைகளும் முடிபுகளும் சித்தாந்த சைவத்துட் கொள்ளப்படும் அடிப்படை உண்மைகளும் முடிபுகளுமாக உள்ளன என்பாராயினர்.

## ஆராய்ச்சியாளர் கருத்து

எடுத்துக் காட்டாக, டாக்டர் ஜி.யு. போப்பு அவர்கள் “திருக்குறளின்கண் விளக்கப்படும் ஒழுக்க நெறி பதி, பசு, பாசம் என்னும் முப்பொருளுண்மையை

அடிப்படையாகக் கொண்டது'' என்னுந் துணிபு உடையவராயிருந்தார் எனத் தெரிகின்றது. திரு. ஜே. எம். நல்லசாமி பிள்ளை அவர்கள் திருக்குறளில் வரும் 'மெய்யுணர்தல்' என்னும் அதிகாரத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கும் ஒரு கட்டுரையில், "டாக்டர் ஜி.யு. போப்பு, திருக்குறள் நுதலும் அறம் என்னும் ஒரு சிறு விரிவுரையில் "திருவள்ளுவர் தாம் கூறும் அறநெறியை மாண்புடைய முப்பொருள் உண்மையை அடியாகக் கொண்டு வகுத்துள்ளார்'' என மேற்கொள்ளுகிறார்; உண்மையில், திருவள்ளுவர் கொள்கை புத்தர் சமணர் கொள்கைகளைப் போல் கடவுள் இல் கொள்கையன்று; இவ்வகையில், இந்நூலுக்கும் நாலடிக்கும் வேறுபாடு உளது" என எழுதுகிறார்.[1]

## சமண் முனிவரும் பால்வரை தெய்வமும்

இவ்வுண்மையைச் சிறிது ஆராய்வோம்: இருவினையுண்மை கொள்ளும் வகையில் சித்தாந்த சைவர்களுக்கும் பிறர்க்கும் – சிறப்பாகப் புத்தர், சமணர், மீமாஞ்சகர்க்கும் ஒரு வேறுபாடு உண்டு. சைவர் வினை, வினையின் பயன், வினையைச் செய்வோன், வினையின் பயனை வினை செய்தோனுக்குச் சேர்க்கும் திருவருள் எனப் பொருள்களை நான்காக வைத்து, வினை உயிர்களைப் பற்றுமாறும் அவை பின்னர் நீங்குமாறும் முன்னெடு பின் முரணாமை ஆய்ந்து முடிபு கூறுவர். ஏனையோர் வினை, வினைப்பயன், வினைசெய்வோன் என்னும் மூன்றொடு அமைந்து, வினைப்பயனை வினை செய்தோனுக்குக் கூட்டும் முதற்பொருளைத் தேறார்; அது வேண்டுவதின்று எனவும் மறுப்பர். சமண முனிவர் மொழியாகிய

*பல்லாவுள் உய்த்து விடினும் குழக்கன்று*
*வல்லதாம் தாய்நாடிக் கோடலைத் – தொல்லைப்*
*பழவினையும் அன்ன தகைத்தேதற் செய்த*
*கிழவனை நாடிக் கொளற்கு*

என்னும் நாலடியை நோக்குக.

"பல ஆக்களிடையே (பசுக்களிடையே) தன் தாய் இருப்பினும், அதனை ஓர் ஆன்கன்று நாடி அடைய வல்லது; அஃதே போல், ஒருவன் முற்பிறப்பில் செய்த வினை இப்பிறப்பில் அவன் இருக்கும் இடம் தேடி அடைந்து, தன் பயனை

1. "And the Rev. Dr. Pope in his short paper on Ethics of Kural holds that Tiruvalluvar bases his ethics on the grand truths of Tripadartha, Pati, Pasu, and Pasa; In fact, his creed is not a Godless creed like that of the Jains or Buddhists. In this respect, there is disparity between the Naladi and this work" - Studies in Saiva Siddhanta by Sri. J. M. Nallaswami Pillai - p, 147.

நுகர்விக்கும்; ஆகலான், வினைப் பயனை விரைந்து வினை செய்தோனுக்குச் சேர்ப்பான் ஒரு முதல்வன் உளன் எனல் வேண்டா என்பது சமண முனிவர் கருத்து.

இப்பாட்டினைத் திருவள்ளுவர் வாய்மொழியாகிய

*வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி*
*தொகுத்தார்க்குந் துய்த்தல் அரிது*

என்பதோடு புணர்ப்ப வைத்து வேற்றுமை காண்க.

## 'வகுத்தான் வகுத்த வகை'

இக் குறளின் பொருள் : "கோடி தொகுத்தார்க்கும் – நுகரப்படும் பொருள்களை அளவின்றித் தொகுத்து வைத்தார்க்கும், வகுத்தான் வகுத்த வகையல்லால் துய்த்தல் அரிது – தெய்வம் வகுத்த வகையால் அல்லது நுகர்தல் உண்டாகாது'', என்பது.

இப்பாட்டு 'ஊழ்' என்னும் அதிகாரத்தின்கண் உள்ளது. அறத்துப்பாலில் 'கடவுள் வாழ்த்து' முதலிய நான்கு அதிகாரங்களால் அறத்திற்குப் பாயிரமாவனவற்றின் இயல் முன் உணர்த்தி, பின் அறத்தின் இயல்பை, இல்நிலை துறவு நிலை என இருவகைப்படுத்து முப்பத்துமூன்று அதிகாரங்களால் உணர்த்தி, இறுதியில், ஒருவன் ஒரு பிறப்பிற் செய்யும் அறம் அவனுக்கு அப்பிறப்பின் மாத்திரமன்றிப் பிற பிறப்புக்களினும் நியதமாய் வந்து பயன் தருமாற்றை வகுத்துணர்த்துவதற்கு எடுத்துக் கொண்டது முப்பத்தெட்டாவதாகிய 'ஊழ்' என்னும் அதிகாரம். அறத்தான் எய்துதற்குரிய பொருளின்பங்களினியல்பை அடுத்த பால்களில் உணர்த்துதற்குத் தோற்றுவாயும் இதுவே ஆகின்றது.

இனி, 'ஊழ்' ஆவது இருவினைப்பயன் அவற்றைச் செய்தோனையே சென்றடைதற்கு ஏதுவாகிய நியதி. அவ்வூழை "வகுத்தான் வகுத்த வகை" என இங்கு எடுத்துக்கொண்ட பாட்டின்கண் வைத்துணர்த்துகின்றார் ஆசிரியர். இதனால் அவ்வவ் வினையின் பயனை அவ்வவ் வினையைச் செய்த உயிரே நுகருமாறு காலம்பெற வகுத்து அமைக்கும் ஆற்றல் வினையின் வேறாய் உள்ளது என்பதும், அது வகுத்த வகையே ஊழாவது என்பதும் எளிதின் விளங்கும். இங்ஙனம் கொள்ளுதலே பண்டைத் தமிழர் மரபு என்பது, இவ்வாற்றலை ஆசிரியர் தொல்காப்பியனார் 'பால்வரை தெய்வம்' என்றமை பற்றி உணரப்படும். ஆண்டுப் 'பால்' என்னும் கிளவி 'பகுப்பு' என்னும் பொருள் தோற்றி 'ஊழ்' என்பதற்குப் பரியாயமாம். ஆகலின், 'வகுத்த வகை' என்னுந் திருவள்ளுவர் தொடர் 'பால்' என்னுந் தொல்காப்பியர்தம் சொற்பொருட் காரணந் தேற்றுதல் காண்க.

## *பால்வரை தெய்வக் கொள்கையும் சைவசித்தாந்தமும்*

திருவள்ளுவர் –, ஏன்? தொல்காப்பியர் தாமும் – சமணமுனிவர் கூறியவாறு போல், "ஊழ்வினை தானே உருவெடுத்து வந்து ஊட்டும்" எனத் துணியும்படி சொற்களை அமைக்க ஒருப்பட்டிலர். மற்று, வினைப்பயனைத் துய்க்குமுன் அதனைத் துய்க்குமாறு வகுக்கும் ஓராற்றல் உளது; அது வகுக்கும் வகையே ஊழாவது! ஒருவன் தான் தொகுத்த பொருள்களை நுகரும் நுகர்ச்சி அத் தன்மைத்தாகிய ஊழ் வயத்தானன்றி உளதாகாது என்பது திருவள்ளுவர் திருவுள்ளக்கிடை. இவ்வுண்மையை ஆழ்ந்து அமைந்து உணர்ந்து கடைப்பிடித்தவர்கள் சைவர்களே.

*"செய்வினையும் செய்வானும்*
*அதன்பயனும் சேர்ப்பானும்*
*மெய்வகையால் நான்காகும்*
*விதித்தபொருள் எனக்கொண்டே*
*இவ்வியல்பு சைவநெறி*
*அல்லவற்றுக்(கு) இல்லையென*
*உய்வகையாற் பொருள் சிவன் என்று*
*அருளாலே உணர்ந்தறிந்தார்"*

எனச் சேக்கிழாரடிகள் திருத்தொண்டர் புராணத்துச் சாக்கிய நாயனார் துணிபாகக் கூறியருளுதல் காண்க.

சைவ சித்தாந்த முதனூல் அருளிச் செய்த மெய்கண்ட முதல்வரும், இருவினை அதிகரணத்தில், "இனி இவ்வான்மாக்களுக்கு இருவினை முதல்வன் ஆணையின் வரும் என்றது, ஒரு நகரியைக் காப்பான் பாடிகாவலிட்டாங்கு அவை அவனது ஆக்கினையாகலான்" என அருளிச் செய்கின்றார்.

இங்ஙனம் கோடல் ஆராய்ச்சிக்கும் பொருந்துவதொன்று! வினை அறிவில்லது; ஆகலின், அது செய்யப்பட்டவுடன் அழிந்தொழிவதன்றி, நிலைத்து நின்று தன்னைச் செய்த உயிர் செல்லுங் கதியில் தானும் புகுந்து பயனை நுகர்விக்கும் ஆற்றல் உடையதன்று. இனி வினையைச் செய்யும் உயிர்தானும் சில்வாழ் நாட் பல்பிணிச் சிற்றறிவுடையதாகலின், அது தான் முன்னைப் பிறப்பிற் செய்த வினைக்கு ஈடாகப் பயன்களைத் தானே அறிந்து நுகரும் என்றலும் பொருந்தாது. நுகரும் எனின், அஃது எப்போதும் தான் விரும்பிய பயனைப் பெறுதலும் விரும்பாததனை நுகராதாதலும் வேண்டும். அங்ஙனமன்றி, "ஒன்றை

நினைக்கின் அது வொழிந்திட்டு ஒன்றாகும்; அன்றி அதுவரினும் வந்தெய்தும்; – ஒன்றை–நினையாத முன் வந்து நிற்பினும் நிற்கும்''[1] என்னும் ஔவையார் வாய்மொழியின் படியே உலக நிகழ்ச்சி இருத்தல் கண்கூடு. இன்னும், ஓர் அறத்தைச் செய்யும்போது, செயப்படுபொருளாயுள்ளனவும், ஏற்றுக் கொள்வோரும், செய்யும் நிலனும் முதலாக உள்ளனவும் அவ் வினைப் பயனைச் செய்வோனுக்குத் தரும் எனல் பொருந்துவதன்று. ஆகலின், ஔவையார் ''எனை ஆளும் ஈசன் செயல்'' என முடித்தபடி, உயிர்கள் செய்யும் வினைகளை அறிந்து, அவை பக்குவம் எய்தும் முறையால், அவற்றுக்குத் தக்க பயனை வகுத்து வரைந்து உதவும் ஆற்றலொன்று உண்டு எனக் கொள்ளுதலே அறிவுக்குப் பொருத்தமான முடிபாகிறது. இக் காரணங்களால் செய்வினையும், செய்வானும், அதன் பயனும், சேர்ப்பானும் என்னும் நாற்பொருள் உணர்வு அறநெறி வாழ்க்கையின் அடிநிலை உணர்வு என உய்த்துணருமாறு உரைத்தலே தெய்வப் புலவர் திருவுள்ளக்கிடை என்பது போதரும். இவ்வடி நிலையுணர்வுக்கு மாறு படாவண்ணம் பொருள் முடிபுகளும் பொருளியல்புகளும் கொண்டுரைக்கும் சிவநெறியே உயிரைப் பிறப்பின் நீக்கி முடிநிலைப் பேரின்ப வீட்டின்கண் உய்க்கவல்ல தென்பதையும், அந்நெறி நின்ற செம்புலச் செல்வர்கள் தலைப்பட்டுணர்ந்து வெளிப்படுத்த ''சிவம்'' எனப்படும் செம்பொருளையன்றி உயிர்க்குப் பற்றுக் கோடாவது பிறிதொன்றில்லை என்பதையுமே ''உய்வகையாற் பொருள் சிவனென் றருளாலே உணர்ந்தறிந்தார்'' எனத் திருத்தொண்டர் புராணத் திருவிருத்தம் தெளித்து உணர்த்துவதாயிற்று.

1. நல்வழி – 27.

# திருக்குறள் காட்டும் ஒழுக்க நெறி

## அறமும் அருளாணையும்

இவ்வாராய்ச்சியால், உயிர்கள் செய்யும் அறத்தின் பயனை வகுத்து அவற்றை நுகர்பிக்கும் வினை முதலாக முதல்வன் உளன் என்பது திருவள்ளுவர் கருத்தென்பது பெறப்படுதலின், அம் முதல்வனது ஆணையாகிய பணியே அறமாவது என்பதும் பெறப்படும். என்னை? வினைகளைப் பணித்தவனை யன்றிப் பிறனொருவன், அவற்றின் பயன்களை வகுத்து நுகர்வித்தல் கூடாமையின், வகுப்பவன் வினையைப் பணித்தவனுமாதல் வேண்டும் என அருத்தாபத்தியால் துணியப்படும். ஆகலின், இங்ஙனம் வினையை இறைவன் வைத்தது எனக் கூறாமல் தன் வயமுடையதெனவே கொள்வேம் எனின், அங்ஙனங் கொள்வார்க்கு அவ்வினை இறைவன் அருளால் நீங்காது எனல் வேண்டும்; அக் கருத்து, "இருள்சேர் இருவினையும் சேரா இறைவன் — பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு" எனவும், "சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச் சார்தரா சார்தரு நோய்" எனவும் கடவுள் வழிபாடுடையார்க்கு அவ் வழிபாட்டால் வினை நீங்கும் எனக் கூறும் ஆசிரியர் முடிபோடு முரணிப் பிழையிற் கொண்டு உய்க்கும்.

இன்னும், திருவள்ளுவர் முதலதிகாரத்திற்றானே, தாம் கூறப்புகும் அறநெறியினைப் "பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்கநெறி" எனக் கூறினமையானும், கடவுளை "அறவாழி அந்தணன்" என்றமையானும், "அறமாவது கடவுளது ஆணையாகிய பணி" எனக் கொள்ளுதல் அவர்தங் கருத்து என்பது உணரப்படும்.

ஆசிரியர் தொல்காப்பியனார் "வினையின் நீங்கி விளங்கிய அறிவின் — முனைவன் கண்டது முதனூ லாகும்" என முதனூலுக்கு இலக்கணங்கூறி, அத்தகைய முதனூலுக்குக் குற்றமின்று என்பதைச் "சிதைவில என்ப முதல்வன் கண்ணே" என எடுத்தோதிப் பாதுகாத்தாராதலின், திருவள்ளுவர், அம் மரபு பற்றி, முதல்வன் கண்ட ஒழுக்க நெறியினைப் "பொய்தீர் ஒழுக்கநெறி" என அடை கொடுத்து ஓதியது கருத்திற்கொள்ளற்பாலது.

இனி 'அறவாழி அந்தணன்' என்றது, "அறக்கடலாகிய அந்தணன்" என்றவாறு. அஃதாவது உயிர்கண்மாட்டு இயல்பாகவுள்ள செந்தண்மையால் அறம் உணர்த்தி, 'அவ்வறமே வடிவாகியோன்' என்றபடி, முதல்வன் அருவாய் உணர்வாயுள்ள பொருளாகலான் அது பற்றி அவனைக் கண்டுணரலுறுவார். அளப்பரிய அவனிலையினை முதற்கண் அவன்றன் அருளாணையாகிய அறங்களின் முதல் எனக் கொண்டு உணர்வில் அமைத்து ஒழுகி, பின்னர் அவ்வற வொழுக்கத்தின் பயனாக அவன்றன் உண்மைநிலையை உணர்தற்கு உரிய மெய்யுணர்வைப் பெறுதற்குரியர் ஆகலான், அக் கருத்துப்பற்றி முதல்வனை "அறக்கடல்" என உருவகித் தருளினார் எனக்கொள்க. இங்ஙனம் முதல்வனை முதற்கண் 'அறக்கடல்' என உணர்தல் எதுபோலும் எனின், அளப்பரிய பேரொளி மண்டிலமாகிய ஞாயிற்றினை முன்னர் ஒவ்வொருவரும் அதன் ஒளிக் கதிர்க்கற்றைகளால் அக் கதிர்களின் முதலாக—ஒரு சிறு ஒளிவட்டமாகக் கண்டறிந்துவருமாறு போலும் என்க. பின்னர் ஞாயிற்றின் உண்மை நிலையுணர்வைப் பெறுதற்கு முதற்கண் உள்ள இப்பொதுநிலை அறிவே காரணமாதல் போலக் கடவுளின் உண்மைநிலை யுணர்விற்கு இப்பொது நிலை அறிவே அடிப்படை என்பது இதனால் உணர்க. இக் கருத்துக்களெல்லாம் யாம் உணர்ந்து உய்யும் பொருட்டன்றே, கடவுளின் பொதுநிலைபற்றிய இயல்புகளை முதலதிகாரமாகிய கடவுள் வாழ்த்தின்கண்ணும், ஏனை உண்மைநிலைப்பற்றிய சிறப்பியல்பை அறத்தின் முடிநிலைப் பயன் உணர்த்தும் 'துறவு', 'மெய்யுணர்வு' முதலிய அதிகாரங்களிலும் உய்த்துணர வைத்தருளினார் ஆசிரியர்!

இது நிற்க, "அறவாழி" என்றதற்குத் "தரும சக்கரம்" என்று பொருள் கூறுவாரும் உளரே எனின், இவ்விடத்து 'ஆழி' என்னும் சொல் 'சக்கரம்' எனப் பொருள்படாது. என்னை? பாட்டினை முழுதும் நோக்குக:

*"அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்கு அல்லால்*
*பிறவாழி நீந்தல் அரிது"*

என்பது பாட்டு. இதில் (தாள் சேர்ந்தார்க்கு அல்லால்) 'நீந்தல் அரிது' என்றது உருவகம். ஆகலின், "நீந்தல்" என்னும் வினை நீந்துதற்குத் தகுதியுடைய நீர்நிலை ஒன்றனை அவாய் நிற்கும். அது இரண்டாவது அடியில் வந்துள்ள "பிறவாழி" என்பதிலுள்ள ஆழி என்னும் சொல்லால் பெறப்படும்; படவே, 'பிற ஆழி' என்றது பிறகடல்கள் எனவே பொருள்படும்; 'பிற சக்கரங்கள்' எனப் பொருள் படாது. ஆகலின், அத்தொடரில் உள்ள 'பிற' என்னும் சொல்லாற்றலால் முன்னர் வந்த 'அற ஆழி' என்னுந் தொடரிலுள்ள 'ஆழி'யும் 'கடல்' எனவே பொருள்படுமன்றிச் சக்கரம் எனப் பொருள்படாது. அன்றியும், அறம், பொருள்,

இன்பம் என்னும் மூன்றனுள், அறத்தினை 'அற ஆழி' என முன்னர்ப் பிரித்தமையின், பின்னர்ப் 'பிற ஆழி' என்பதில் வரும் 'பிற' என்னும் சொல் ஏனைப் பொருள் இன்பங்களைக் குறிக்கும். குறித்தலின், அப் பாட்டு,

"அறக்கடலாகிய அந்தணனது தாளாகிய புணையைச் சேர்ந்தார்க்கு அன்றி, அதனிற் பிறவாகிய பொருளின்பக் கடல்களை நீந்தல் அரிது; அஃதாவது, அப்புணையைச் சேராதார் பொருளின்பக் கடல்களின் கரைகாணாது அவற்றுள்ளே அழுந்துவர்," எனப் பொருள்படுமாறு கண்டு கொள்க.

## அருளாணையே சைவசித்தாந்தம்

இதனால், பொருளும் இன்பமும் அறத்தின் வழிப்படின் அல்லது உயிர்க்கு உறுதியாகா என்பதும், அறந்தானும் முதல்வனது அருளாணையாய் நிகழ்வதென்னும் அதன் இயல்புணர்ந்து ஒழுகுவார்க்கு அன்றிப் பயப்பாடு உடையதன்றாம் என்பதும் விளங்குதல் காண்க.

இக் கருத்தினையே, சைவசித்தாந்த ஞானநூல்களின் முடிபுதெரிக்கும் 'சிவஞானசித்தி' என்னும் அருணூலின்கண்,

*"ஒழுக்கமன் பருளாசாரம் உபசாரம் உறவு சீலம்*
*வழுக்கிலாத் தவந்தா னங்கள் வந்தித்தல் வணங்கல், வாய்மை*
*அழுக்கிலாத் துறவடக்கம் அறிவொடர்ச் சித்தல் ஆதி*
*இழுக்கிலா அறங்களானால் இரங்குவான் பணிய றங்கள்*

எனவும்,

*"காண்பவன் சிவனே யானால் அவனடிக் கன்பு செய்கை*
*மாண்பறம்; அரன்றன் பாதம் மறந்துசெய் அறங்களெல்லாம்*
*வீண்செயல்"*

எனவும்,

"மறைகள் ஈசன் சொல்"

எனவும் அருணந்தி சிவனார் அருளிச் செய்வாராயினர்.

அற்றேல், திருவள்ளுவர், 'அறம் வேறு', 'கடவுள் வேறு' எனக் கொள்ளாது, 'அறத்தையே கடவுள்' எனக் கொண்டார் எனக் கொள்வோம் எனின், அது பொருந்தாது; அறம் சட்டமும், கடவுள் அதனை இயற்றும் தலைவனும் என வேறுபாடு உணர்ந்து கொள்ளுதற் பொருட்டு,

"பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க நெறி" என ஒழுக்கநெறியை முதன்வன் விதியாகவைத்துக் கூறினமையாலும், முதல்வனை 'வினை முதல்' எனத் தெளியும்படி 'ஆதிபகவன்', 'ஐந்தவித்தான்', 'அந்தணன்', 'எண்குணத்தான்' '[redacted]றாற்போல ஆடூஉ வறிசொல்லாற் கூறலானும், முதல்வன் அறத்தை விதித்தோன், அறம் விதியாம் என்பது தெளியப்படும். 'அறவாழி அந்தணன்' என முதல்வனை அறக்கடல் என்றது உருவகம் எனவும், முதல்வன் அருவப் பொருளாயிருந்தே அறத்தை விதிப்போனாய், அறத்தின் பயனாய் உளனாதல் பற்றி அங்ஙனம் உருவகித்தார் எனவும் மேலே உரைத்தாம்.

அற்றேல் அஃதாக:

*"என்பி லதனை வெயில்போலக் காயுமே*
*அன்பி லதனை அறம்"*

என்றார் ஆசிரியர் ஆகலின், அறமே பயன் தருவதென்பது அவர் கருத்தாமெனின்; அற்றன்று. அறம் தானே பயன் தருமென்பது ஆசிரியர் கருத்தன்று என்பதும் அங்ஙனங் கொள்ளுதல் ஆராய்ச்சிக்குப் பொருந்துவதும் அன்று என்பதும் மேலே விளக்கப்பட்டன. இனிச் செய்வினைப் பயன், பற்றற்றான் பற்றினைப்பற்றி, உலகப்பற்றினை விடுத்து மெய்யுணர்ந்து, அவாவறுத்தார்க்கு அன்றிப் பற்றுள்ளம் உடைய ஏனை யாவர்க்கும் "செய்பவர் செய்திப் பயன் விளைக்கும் செய்யே போல்"[1] முதல்வன் நியமித்துத் தரப் பிறழாமல் வந்து எய்துதல் பற்றி, 'உபசாரம்' எனப்படும் சார்ச்சி வழக்கால், அங்ஙனம் பயன் தருதலை அறத்தின்மேல் வைத்துக் கூறினார் என்க. அவ்வற ஆற்றலை நடாத்துபவன் முதல்வனே எனக் கொள்ளாக்கால், வினையின் நீங்குதல் யாவர்க்கும் உளதாகாது எனப்பட்டுக் கடவுள் வழிபாடு உடையார்க்கு வினை நீக்கம் கூறும் ஆசிரியர் கருத்தோடு முரணும் என்பது மேலே உரைத்தாம்.

சொல்லும் வேறே, அதனால் அறிவுறுக்கப்படும் பொருளும் வேறே; ஆயினும் ஆசிரியர் தொல்காப்பியனார் ஒரோ வழி.

*"அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கம் செய்யும்"*

என்றாற்போல அவ்விரண்டனையும் ஒன்றே என்பதுபடவைத்துக் கூறுவர்; சொல்நிகழ்வுவழிப் பொருளுணர்வும் ஒருவன் அறிவின்கண் உடன் தோன்றும் இயைபு பற்றி அங்ஙனம் கூறினார் எனக் கொள்வதன்றி அதுபற்றிச் சொல்லும் பொருளும் வேறே என்பதில் ஆண்டு ஐயுறுவாரில்லை. ஈண்டும் அதுபோலக் கொள்க.

---

1. சிவஞானபோதம் – சூ.உ, அதி. 2 – உதாரணச் செய்யுள் 1.

## 'பொறிவாயி லைந்தவித்தான்': ஒரு விளக்கம்

அற்றேல் அஃதாக: திருவள்ளுவர் "பொறிவாயில் ஐந்தவித்தான்" என ஒழுக்க நெறி தந்த முதல்வனைக் குறித்தலின், "முதலில் பொறிவாயில் ஐந்து உடையனாயிருந்து, பின்னை அவ்வைந்தவித்த ஒருவனை அவர் 'ஆதிபகவன்' எனப் போற்றியிருக்கின்றார் என்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்குவதொன்று"[1] என்பாரும் உளர் ஆகலின், அத்தொடர் சித்தாந்தச் சைவத்துட் கொள்ளப்படும் முதல்வனைக் குறிப்பதாவது எங்ஙனம் எனின், கூறுதும்: திருக்குறளின்கண் ஐயம் தோன்றின் அதனைத் தீர்த்துக் கொள்ளுதற்குப் பிரமாண நூல்களாகக் கொள்ளத் தக்கவை தொல்காப்பியம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்பனவே. இந் நூல்களின் முடிபுகளோடு மாறுபடாத தமிழ்நாட்டு வழக்கியலும் செய்யுள் மரபும் தெரிக்கும் பகுதிகள் அளவில், பிற்காலத்து எழுந்த சிலப்பதிகாரம் முதலிய காப்பியங்களும் பிரமாணமாகக் கொள்ளப்படும்; பிற கொள்ளப்படா. இவ் வரம்பில் நின்று ஆராயின், சிவபிரான் பண்டைத் தமிழ் நூல்களில் பேசப்படும் கடவுள்; அன்றியும் கலித்தொகை முதலியவற்றின் வரும் கடவுள் வாழ்த்துச் செய்யுள் முதலியவற்றை நோக்கின், சிவபிரான் முழு முதற் கடவுளாகக் கொள்ளப்பட்டவர் என்பதும், மாதொரு பாகமும், தவக் கோலமும் உடையவர் என்பதும், இங்ஙனம் அவருக்கு உள்ளனவாகக் கொண்டு நினைக்கவும், வாழ்த்தவும், வணங்கவும் படும் கோலம் நால்வகைத் தோற்றத்துள்ளும் எழுவகைப் பிறப்பினுள்ளும் பட்டுப் பிறவாத கோலம் என்பதும் குன்றின் மேலிட்ட சுடர்போல் விளங்கிக் கிடப்பவை. இம் முடிபுகளை நுணுகி உணரின், முதல்வன் காணவும் கருதவும் படாதவன் என்பதும், ஆயினும் அவன் தன் இயற்கையைத் தன்னை ஓவாது நினைந்து உருகும் மெய்யன்பர்க்குக் காணவும் கருதவும் ஆம்படி வைத்தற்கும், அவர்க்குப் போகமும் வீடும் உதவுதற்கும் எழுந்த பேரருட்டிறத்தால், அம் மெய்யடியார்களுக்குத் தனது அருட்டிருவுருக் காட்டி ஆண்டருள்வன் என்பதும், அவ்வருட்டிருவுரு நம்மனோர் சிற்றறிவுக்குக் கால்வரம்புபட்டது போற்றோன்றினும், உண்மையில் அதனுட்படாததே என்பதும், அவ்வுருட்டிருவுருவே அம் மெய்யன்பர்களாலும், பின் வருவோராலும் நினைக்கவும், வாழ்த்தவும், வணங்கவும் படும் என்பதும் தொன்று தொட்டு வரும் தமிழ்மரபு என்பது புலனாம். சிவபிரான் திருவுரு இத் தன்மையதாதல் பற்றியே தொன்றுதொட்டு இன்றுவரை செந்தமிழ் நாட்டில், வழக்கு, செய்யுள் என்னும் இரண்டினும், அப்பெருமான் பிறப்பிலி இறப்பிலி, பிறவா யாக்கைப் பெரியோன் எனப் பேசப்படுகின்றனன். இத்தகைய

1. திருக்குறள் ஆராய்ச்சியும் ஜைன சமய சித்தாந்த விளக்கமும் – அணிந்துரை (திரு. வி. க. எழுதியது). ப. VIII.

திருவுருவங்களுள் ஒன்று அம் முன்னவன் ஆல்நிழலமர்ந்து அருந்தவக் கோலத்தினனாய் அறம் உரைத்த திருக்கோலம் என்பது எல்லாச் சமயத்தினர்க்கும் உடன் பாடாமாகலின், அறம் கூறவந்த ஆசிரியர் திருவள்ளுவனார்க்கு அத் திருக்கோலத்தைக் குறிப்பதே பொருத்தமாதல் பற்றி, அதனைக் குறித்தே "பொறிவாயில் ஐந்தவித்தான்" என்றார் எனவே சித்தாந்த சைவர் கொள்வராகலின், அது சித்தாந்த சைவத்தோடு முரணுமாறு யாங்ஙனம் என்க.

அனைத்துயிர்க்கும் காவலாகிய தவநெறியைச் சிவனது நெறியெனக் கொண்டு வழிபடுதல் தமிழ்நெறி வழக்கே என்பது,

*"எல்லா வுயிர்க்கும் ஏமமாகிய*
*நீரற வறியாக் கரகத்துத்*
*தாழ்சடைப் பொலிந்த அருந்தவத் தோற்கே"* (புறநானூறு–1)

"*அருந்தவ முதல்வன்*" (கலி–100:7)

"*ஆல்கெழு கடவுள்*" (முருகு)

என்றாற் போலப் பாட்டினுந் தொகையினும் அக்கடவுளைக் குறித்து வருவனவற்றால் தெளியப்படும்.

## விருஷப தேவர் அல்லது புத்தரைக் குறிக்குமா?

இனி, "பொறிவாயில் ஐந்தவித்தான்" என்றது சைன சமயத்தவரால் ஆதி முதல்வர் எனப்படும் இடபதேவர் அல்லது புத்தர் எனக் கொள்ளிற் படும் இழுக்கு என்னையோவெனின், அவர் தம்மியல்பால் முத்தர் எனக் கொள்ளப்படாமல், பின்னர் முத்தராயினர் எனவே அவ்வச்சமயத்தினராலும் கொள்ளப்படுதலின், "நீத்தார் பெருமை" என்னும் மூன்றாம் அதிகாரத்து "உரன் என்னும் தோட்டியான் ஓர் ஐந்தும் காப்பான்" எனவும் "ஐந்தவித்தான்" எனவும் கூறப்படுதலின், ஆண்டே எண்ணப்பட்டு அடங்குவர்; மற்றுக் கடவுள் வாழ்த்தில் அன்னோர் கூறப்பட்டார் எனின், மீண்டும் 'நீத்தார் பெருமை' என வேறு வைத்துக் கூறுதல், கூறியது கூறல் என்னும் குற்றம் ஆம். அன்றியும், திருக்குறளின் சொல்லாட்சி பொருளாட்சிகளை ஐயமும் மருட்கையும் அற உண்மையால் துணியவேண்டின், அதற்குச் சிறந்த கருவிகள் பாட்டும் தொகையும் எனப்படும் சங்க இலக்கியங்களே யாகலின், அவற்றுள் இன்னோர் கடவுளராக் குறிக்கப்பட்டுப் பயிலாமையின், இன்னோரைக் கடவுளர் எனக் கொண்டு வழிபடும் வழக்கம் பண்டைத் தமிழர்க்கு இன்றாம் என்பது தெளிவு. இனி, இடபதேவர் என்னும் பெயரை நோக்கின், அது முன்னர்ப் பண்டைத் தமிழிலக்கியங்களால் முழுமுதற் கடவுள் எனப் பேசப்படும்

சிவபிரானை அல்லது அவன்றன் ஊர்தியைக் குறிப்பதாயிருந்தே, பிற்காலத்துச் சமண சமயத்தவரால் தாம் முதலாசிரியன் எனக்கொண்டு போற்றும் அருகனுக்கு இடப் பட்டு வழங்கியதென்பது விளங்கும். இங்ஙனம் பிற சமயக் கடவுளர் பெயரையெல்லாம் அருகனுக்கு இட்டு வழங்குதல் சைனர்க்கு இயல்பு.

இன்னும், கடவுள் வாழ்த்துள் கூறப்படும் இறைவனை 'அநாதி முத்தன்' எனக் கொள்ளும் தமிழ் மரபு கடந்து, உயிர் இனத்தின் பாற்படுத்தி, "முன்னர்ப் பொறிவாயிலைந்துடையனாயிருந்து பின்னை அவ்வைந் தவித்த ஒருவன்" என, இடைக்கால முத்தனாகக்கொண்டு உரைக்கப்புகின், அவ்வுரை,

*"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்*
*இறைவன் அடிசேரா தார்"*

எனவும்,

*"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்*
*பற்றுக பற்று விடற்கு"*

எனவும் ஆசிரியர் பற்று அறுத்து வீடு பெறுதற்கு நியமிக்கும் விதிகளோடு பொருந்தாதாய் முரணும். இடைக்கால முத்தனெனப் புனைந்து கூறப்படும் 'விருஷப்தேவர்' அல்லது ஆதிபுத்தன் என்போர் எவ்வாற்றான் வீடு எய்தினார்? அவர் இறைவனடி சேர்ந்து பிறவிக்கடல் நீந்தினவரோ, அல்லரோ? பற்றற்றான் பற்றினைப் பற்றிப் பற்று விட்டவரோ, அல்லரோ? எனின், இவ்வினாக்களுக்கு விடை யாது? அவரும் தமக்கு ஆசிரியனாயினான் ஒருவனடி சேர்ந்து, அவன் பற்றினைப் பற்றினார் எனல் வேண்டும்; அல்லது, அவர் தம் முயற்சியினால் முத்தராயினார் எனல்வேண்டும்; இவற்றுள் முன்னைய விடை மேலும் முன்னைய வினாவிற்கே இடந்தந்து, வரம்பின்மை (அநவத்தை) என்னுங் குற்றத்திற் கொண்டுய்க்கும்; பின்னையது இறைவனடி சேர்தலும் அவன் பற்றினைப் பற்றலும் வீடு பேற்றிற்கு நியத சாதனமல்ல எனப்பட்டு, நூ்லுட்கூறியதனோடு மாறு கொளக் கூறலாய் முடிந்து குற்றமாம். இவ்வாற்றானும் அவர் உரைப்பன மாறுகோள் உரையேயாம் என்பது தெளியப்படும்.

## சைவ நூல்கட்கு முரணாகாமை

இனிப் 'பொறிவாயில் ஐந்தவித்தான்' என்னுந்தொடர் சைவ சாத்திர முறைப்படி சொரூபசிவத்தையோ தடத்த சிவத்தையோ குறிக்க வழியில்லை

---

1.திரு. வி. க. (திருக்குறள் ஆராய்ச்சியும் ஜைன சமய சித்தாந்த விளக்கமும் : அணிந்துரை).

எனவும், அது சைன சமயத்தவர் தொழும் விருஷப தேவரையே குறிக்கும் எனவும், இத் தொடரையே திருவள்ளுவர் தாம் வழுத்திய ஆதி பகவனை இன்னான் எனத் தெரிந்து கொள்ளுதற்குத் திறவாக வைத்துள்ளார் எனவும் அறுதியிட்டு எழுதினாரும்[1] உளர்.

திருஞானசம்பந்தப் பெருமான், "**வென்றவன் புலன் ஐந்தும்** விளங்க எங்கும்சென்றவன் உறைவிடம் திரு நல்லமே" என்பதில், சிவபிரானை '**வென்றவன் புலனைந்தும்**' எனக் குறித்தருளுகின்றார்; அப்பமூர்த்திகளும், "அன்றாலின் கீழிருந்தங் கறஞ்சொன்னானை . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
நேரிழையைக் கலந்திருந்தே **புலன்கள் ஐந்தும் வென்றானைத்** திருவீழிமிழலையானைச் சேராதார் தீ நெறிக்கே சேர்கின்றாரே" என அருளிச் செய்துள்ளார். இங்ஙனம் சிவபிரானைப் 'பொறி வாயில் ஐந்தவித்தவன்' என்பதுபட வைத்துக் கூறிய இடங்கள் திருமுறைகளில் பலவுள. இவ்விடங்களில் "வென்றவன் புலனைந்தும்", "புலன்கள் ஐந்தும் வென்றான்", என்பன போன்ற தொடர்கள் சிவபிரானைக் குறிப்பனவாகவும், திருவள்ளுவர் "பொறிவாயில் ஐந்தவித்தான்" என்றது சொரூப சிவத்தையோ தடத்த சிவத்தையோ குறிக்க வழியில்லை என்றல் வீண் பிதற்றலேயாம்.

கடவுள் வாழ்த்துள் முதல்வனைப் "பொறிவாயில் ஐந்தவித்தான்" என்ற ஆசிரியர் தாமே பின்னர் நீத்தார் பெருமையுள் நீத்தாரைக் குறித்தும் "உரன் என்னுந் தோட்டியான் ஓர் ஐந்தும் காப்பான்" எனவும், "ஐந்தவித்தான்" எனவும் கூறியிருத்தல் கருத்திற்கொள்ளத் தக்கது. சிவபிரானைக் குறித்து "வென்றவன் புலனைந்தும்" என்றருளிச் செய்த திருஞான சம்பந்தப் பெருமானும் அடியார்களைக் குறித்துத் "**தொண்டர் அஞ்சு களிறும் அடக்கிச்** சுரும்பார் மலர் – இரண்டை கட்டி வழிபாடு செய்யும் இடம் என்பரால்," என அருளிச் செய்துள்ளார். இவற்றை உய்த்துணரின், "ஐந்தவித்தல்" என்னும் அடை, எஞ்ஞான்றும் பிறப்பிற்படாத முதல்வனுக்கும், முன்னர்ப் பிறப்பிற்பட்டு அம்முதல்வனைச் சார்ந்து பின்னர் பிறவியின் நீங்கும் நீத்தார் (முத்தர்)க்கும் ஒப்ப வழங்கும் என்பதும், வழங்கினும் இடம்பற்றி அதன் பொருளியல்பு விவேகித்து, அறிந்து கொள்ளப்படும் என்பதும் புலனாம். அது பிறப்பில்லாத கடவுளுக்கு வழங்கும் போது, அம்முதல்வன் இயல்பாகவே பாசங்களின் நீங்கி நிற்றலால் எல்லாப் பொருளையும் பற்றி நின்றே பற்றற்று நிற்கும் அவன்றன் உண்மையியல்பையும், அவ்வியல்பைத் தன் அருட்டிருவுருவிற் காட்டியருளுந் தவக்கோலத்தையும் குறிக்கும்; நீத்தாருக்குக் கூறப்படும்போது, அஃது அவர் பற்றற்றான் பற்றினைப் பற்றிப் பற்றுவிட்டமையைக் குறிக்கும் என உணர்தல் வேண்டும்.

---

1. திருக்குறள், மு. கா. நூல்,

"உயிர்கள் சார்ந்ததன் வண்ணமாந்தன்மை யுடையன" என்னும் சைவசித்தாந்தத் துணிபின்படி, திருவள்ளுவர் கடவுள் வாழ்த்துள் பிறப்பில்லாத முதல்வனுக்குக் கூறிய இயல்புகளை நீத்தார் பெருமையுள் நீத்தாருக்குக் கூறியவை இன்னும் பலவுள! எடுத்துக்காட்டாக, கடவுளை "அறவாழி அந்தணன் என்றவர்" நீத்தாரையும் "அந்தணர் என்போர் அறவோர்" எனக் கூறுகின்றார்.

இன்னும் திருவள்ளுவர் தம் உள்ளக்கிடையை வெளிப்படுக்கும் திறவு "பொறிவாயில் ஐந்தவித்தான்" என்னுந் தொடரே என்றமையும் ஆராய்ச்சியில்லார் கூற்றேயாம். திருவள்ளுவர் "ஐந்தவித்தலை" முடிந்த பயனாகக் கொண்டாரில்லை; "மெய்யுணர்வு" ஒன்றனுக்கே முதன்மையும் சிறப்புந் தருகின்றார்:

*"ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே*
*மெய்யுணர்வு இல்லா தவர்க்கு"*

என அவர் கூறியுள்ளமையினையும், அக்கருத்தே திருஞான சம்பந்தர் திருவாக்கில் உடன்பாட்டு முகத்தால்,

*"ஆறினார் பொய்யகத்து ஐயுணர்வு எய்திமெய்*
*தேறினார் வழிபடுந் தென்குடித் திட்டையே"*

என எழுந்தமையும் கருதத் தக்கன.

இக் கருத்துப்பற்றி ஆராய்ந்தால், திருவள்ளுவரது கடவுட் கொள்கையைப் பற்றிய உட்கிடையை வெளிப்படுக்கும் திருக்குறள்கள்

*"கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்*
*நற்றாள் தொழாஅர் எனின்"*

என்பதும்,

*"இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்*
*பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு"*

என்பதும் ஆம் எனப்பட்டு, இவற்றால் 'முதல்வன் இயற்கை மெய்யுணர்வினன்' என்பதும், 'அவன் வழிபாட்டால் வினைநீக்கம் உளதாம், என்பதும் உணரப்படுதலின், இவ்வடிநிலை உணர்வு இல்லாத இவரது விருஷப் தேவர் கொள்கை திருக்குறளுக்குப் புறம்பாய் ஒதுங்கும்.

இவற்றையெல்லாம் சிறிது எண்ணாமல், தாம் சைவ சாத்திரத்தைக் கரைகண்டவர் போலவும், ஆயினும் சமரச ஞானக் குன்றேறி நிற்பார் போலவும் நடித்து,

“தடத்த சிவத்தைப் ‘பொறிவாயில் ஐந்தவித்த ஆதி பகவனாகக் கோடலாகாதோ வெனில், சைவசாத்திர முறைப்படி கோடலாகாதென்க. பிறவியெடுத்தல், பொறிவாயில் ஐந்து பெறல், பின்னே அவைகளை அவித்தல் முதலியன பசு விலக்கணம் எனச் சாற்றுகிறது. தடத்த சிவத்தையும் பசுவர்க்கத்தில் சைவசாத்திரம் சேர்த்ததில்லை. ஆதலால் திருவள்ளுவர் வழுத்திய ஆதிபகவனைத் தடத்த சிவமாகக் கோடற்கும் இடமில்லை”[1] என்றாற் போல்வனவற்றை ‘அணிந்துரை’ என்னுந் தலைப்பின் கீழ் எழுதத் துணிந்தவரின் கருத்தை உண்மைத் தமிழாராய்ச்சியை மேற்கொள்ளும் ஒவ்வொருவரும் முன்னர்த் தெளிதல் வேண்டும். இன்னும் “தடத்த சிவத்தையும் பசு வர்க்கத்தில் சைவசாத்திரம் சேர்த்தில்லை” என்றெழுதிய அவ்வணிந்துரையாளர் பிறவி யெடுத்தல், பொறிவாயில் ஐந்துபெறல், பின்னே அவைகளை அவித்தல் முதலியன உடைய விருஷப தேவரை ஜைன சாத்திரம் பசுவர்க்கத்துள் சேர்த்துள்ளதா? அல்லது பதியாகக் கொண்டுள்ளதா என்பதையும், திருவள்ளுவர் தமது கடவுள் வாழ்த்தில் ‘ஆதிபகவன்’ முதலிய பெயர்களால் பதியை வழுத்துகின்றாரா? அல்லது பசுவை வழுத்துகின்றாரா? என்பதையும் பற்றி ஒன்றுங் கூறாது வாளா யோயிருத்தலும் ஆராய்ச்சியாளர் கருதத் தக்கது.

இன்னும் அவர்,

*“இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து*
*கெடுக உலகியற்றி யான்”*

என்னும் பாட்டில் ‘உலகியற்றியான்’ எனவருந் தொடர்க்கு “இவ்வுலகத்தைப் படைத்தவன்” என நேரே பொருள் கொள்ளின் தமது கொள்கையோடு முரனுதலின், அதன் பொருளை மாற்றி உரைப்பர். அவர் உரைக்குமாறு:

“**உலகியற்றான்**” என்பது ஜைந சித்தாந்தத்துக்கு முரண் செய்வதன்று. ‘உலகியற்றல்’ என்பது சைவத்துக்கும் ஜைநத்துக்கும் பொதுவாக நிற்பது. முறைப்பாட்டில் இரண்டிற்கும் வேறுபாடுண்டு. விருஷப தேவர் உயிர்கட்குத் தொழில் முதலியவற்றை ஒழுங்கு பட இயற்றினார் என்று ஜைந நூல்கள் கூறுகின்றன. திருக்குறள் உரையாசிரியன்மார் சிலர் ஜைந மதம் பற்றியே குறிப்பெழுதியுள்ளார்”[2] – என்பது.

இம் மாற்று உரையில், அவ்வுரையாளர் எவ்வகையில் அமைதி கூறுகிறார் என்பதைத் திட்டமாகக் காணுதல் அரிது.

1. திருக்குறள் ஆராய்ச்சியும் ஜைன சமய சித்தாந்த விளக்கமும், அணிந்துரை, ப. ix.
2. மேலது, பக். ix, x.

ஆயினும்,

"உலகியற்றியான்" என்னுந்தொடர் "உயிர்கட்குத் தொழில் முதலியவற்றை ஒழுங்குபட இயற்றின விருஷப தேவர்" எனப் பொருள்படும் என்று குறிப்பித்தல் அவர் கருத்து எனக் கொள்ளுதல் அமைவுடைத்து. இப் பொருளின் பொருத்தத்தைச் சிறிது ஆராய்வோம்.

"உயிர்கட்குத் தொழில் முதலியவற்றை ஒழுங்குபட இயற்றிய விருஷப தேவர்" என்னும் உணர்வு "உலகு இயற்றியான்" என்றவுடன் சங்கவிலக்கியங்களிற் பயின்ற ஒருவருக்கு உதிக்குமா என்பது கருதற்பாலது. இயற்றுதல் என்னும் சொல் ஆக்குதல் எனவே பொருள்படும். அது "இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த–வகுத்தலும் வல்லது அரசு" என்பதனாலும் உணரப்படும். இனி அது செயப்படுபொருள் குன்றாவினையாகலின், 'உலகு' என்னும் செயப்படுபொருளை உடன்கொண்டு "உலகியற்றியான்" என நின்று, உலகைப் படைத்தோன், ஆக்கியோன், அமைத்தோன் –எனவே பொருள்படும். அங்ஙனம் கொள்ளாது, உலகு என்றதை உலகிற்கு என நான்கன் உருபு விரித்து உரைத்து, "இயற்றியோன்" என்னும் வினைக்கு வேண்டிய செயப்படுபொருளைத் 'தொழில் முதலியவற்றை' என வருவித்துக் கூறி, மேலும் "ஒழுங்குபட" என ஒரு சொல் காரணமின்றி வருவித்து, 'இயற்றியான்' என்னும் சொல்லோடு சேர்த்து, அச்சொல்லையும் 'வகுத்தோன்' எனப் பொருள்படுமாறு வைத்து உரைத்தல் உரையாகுமா எனச் சிந்தித்தல் அறிஞர் கடன்.

இவ்வாறு சொன்முடிபு, பொருண்முடிபு உணராது, நூலாசிரியன் குறிப்பும் உணராமல் புதுவதொன்றைப் படைத்து எழுதித் தமிழ்நாட்டில் நாட்டிவருவது அம்மாற்று உரையாளரின் இயல்பு என்பதனை அறிஞர் அறிதல் வேண்டும்; அவர்–தாமே மற்றோரிடத்து,

"வடமொழிப் 'பிரபோதயம்' 'அஹிம்ஸா பரமோ தர்மா' என்பதையும், தென்மொழிச் 'சந்திரோதயம்' 'அவிசொரிந்தாயிரம் வேட்டலின் – ஒன்றன் உயிர்செகுத்துண்ணாமை நன்று' என்பதையும் ஜைநர் சார்பில் சாற்றியிருக்கின்றன. 'பிரபோத சந்திரோதயம்' தமிழில் பெயர்த் தெழுதப்பட்ட நாளில், திருக்குறள் ஜைந நூல் என்னும் ஆட்சி நாட்டிடை நிலவியிருந்தது போலும்![1]" என எழுதுகிறார்.

"பெயர்த் தெழுதப்பட்ட நாளில் . . . . . . . . . நிலவி இருந்தது போலும்!" என ஐயவுணர்வோடு கூறுதல் நீரில் மூழ்குவோன் தனக்கு ஆதரவாகத் துரும்பையும்

---

1. மு. கா. நூல், ப. vii.

பற்றுவது போல் இதனைத் தம் முடிபிற்கு ஆதரவாகப் பற்றும் அவரது உள்ள நடுக்கத்தினைப் புலப்படுத்தாநிற்கின்ற தன்றோ? இனிப் "**பெயர்த் தெழுதப்பட்ட நாளில்** நிலவி இருந்தது போலும்!" எனின், அதற்கு முற்பட்ட நாட்களில் நிலவவில்லை என்பதன்றே பெறப்படுகின்றது? இது 'யானும் அறியேன், அவளும் பொய் சொல்லாள்' என்னும் பழமொழிக்கு எடுத்துக்காட்டாம். இனி உண்மையில் அதனால் விளங்குவது யாதெனக் காண்போம். தென்மொழிப் பிரபோத சந்திரோதயம் முதனூலில் உள்ள இப்பகுதியினை மக்களுக்கு உபகரிக்க வேண்டும் என்னுங் கருத்தால் கூறலுறின், "அஹிம்சா பரமோதர்மா" என்பதை, அதன்கண் உள்ளபடியே, "இன்னா செய்யாமை தலையாய அறம்" என்றன்றோ மொழிபெயர்த்துக் கூறல் வேண்டும்? அங்ஙனம் கூறவில்லை; அன்றித் திருக்குறளில் அத்தொடரோடு மிக அணுக்கமான பொருளுள்ள "ஒன்றாக நல்லது கொல்லாமை" "அறவினை யாதெனிற் கொல்லாமை" என்றாற் போலும் யாதெனும் ஒரு தொடரையேனும் கூறலாம்; அதையும் விடுத்து "அவிசொரிந்து ஆயிரம்வேட்டலின் ஒன்றன் உயிர்செகுத்து உண்ணாமை நன்று" என்பதைக் குறிப்பதாக வைத்ததில் நயம் உள்ளது. அதனைச் சார்பு பற்றி உரைக்க வருவார் எங்ஙனம் உணர்வர்? சைன சமயக் கூத்தனைத் தம்மால் மறுக்கப்படுபவனாகவே ஆசிரியர் வைக்கிறார்; அவன் தன் சமயத்தில் உள்ள உறுதி பயக்கும் உண்மையைப் பிறர் உள்ளங்கொள்ள இனிமையாக எடுத்துரைக்க அறியாது, வைதிகரைப் பழித்தலையே நோக்கமாகக் கொண்டு, அவர் ஒப்புக் கொள்ளும் நூலிலிருந்தே மேற்கோள் காட்டுவல் என, 'சாத்தான் வேத மேற்கோள் காட்டுமாறு போலக், கூறிவருகின்றான் என, வஞ்சப் புகழ்ச்சியாக நகைச்சுவை தோன்றும்படி தென்மொழி வல்ல பெயர்ப்பாளர் கூறியிருக்கின்றார். இக் குறிப்பு உணராது, அதனைத் தமது கோளுக்கு ஆதரவெனக் காட்டல் எது போலும் எனின், உண்ணும்போது, கற்கறித்து, 'நன்கு அட்டாய்!' என்ற கணவனை, தன் அட்டிற்றொழில் வன்மையைப் புகழ்ந்ததாகக் கொண்டு, "பட்டாடை வேண்டும்" என வேண்டும் இல்லாளின் ஏழைமையே போலும் என்க.

இம் மறுப்புப் பற்றித் திருக்குறளைச் சைன சமயத்தவர் தங்கள் நூலெனக் கொள்ளவில்லை எனவோ, கொள்ளுதல் கூடாது எனவோ கருதுவதாக அறிஞர்கள் எண்ண மாட்டார்கள் என நம்புகிறேன். திருக்குறளை ஒவ்வொரு சமயத்தவரும் தம் தம் சமய நூலாகக் கூறுவதில் எது எவ்வளவு தூரம் பொருந்துகின்றது என்பதே இங்குச் செய்யப்படும் ஆராய்ச்சி. திருக்குறள் எல்லோருக்கும் உரிய பொது நூல் என்பதில் ஐயமில்லை. திருவள்ளுவர், நூலை ஆக்கித் தரும்போது தமிழ்ப் பெருமக்கள் எல்லோரும் அந்நூனெறியை அடிப்படையாகக் கொண்டு ஒழுகி, நலனுறல் வேண்டும் என்றே தந்தருளினார் என்பது துணிபு.

ஆயினும், அதனைப் பிரமாண நூலாகக் கொண்டு உரைக்குமிடத்து அவ்வுரைக்கு உரிய மரபுபற்றி உரைத்தல் வேண்டும். "மரபுநிலை திரியிற் பிறிது பிறிதாகும்,"[1] என்றருளிச் செய்வாராயினர் ஆசிரியர் தொல்காப்பியனார். ஈண்டு மரபாவது தொல்லாசிரியர் சென்ற நெறியானே இலக்கண வரம்பு, அளவை முறை, பிரமாண நூல் மேற்கோள், எடுத்துக்கொண்ட நூலுள்ளும் முன்னொடு பின் முரணின்மை என்றின்ன பண்புகள் வாய்ப்ப உரைத்தல். இங்ஙனமன்றி, "குந்த குந்தாச்சாரியார், ஏலாச்சாரியார் முதலிய பெயர்களால் திருவள்ளுவரை ஜைநர்கள் போற்றி வரல் கண்கூடு"[2], "பகிராத்மன், அந்தராத்மன் என்பவர்களைப் பற்றித் திருக்குறளாசிரியர் ப்ராக்ருத பாஷையில் செய்துள்ள ரயண ஸாரம் 120, 121ஆம் ஸ்லோகங்களில் கூறுகிறார்"[3] என்றாற்போல எழுதிச் செல்வன வெல்லாம் மரபு நிலைதிரியக் கொண்டுரைப்பவை யாகலின், அவையெல்லாம் உரையெனப்படா. இப் பெயர்கள் திருவள்ளுவமாலை முதலிய சான்றோர் செய்யுட்களில் காணப்படாத புனை பெயர்களாதலை அறிஞர்கள் நோக்குவார்களாக.

## *திருக்குறளும் சிவநெறி விளக்கமும்*

இனித் திருக்குறளுக்கு மரபுநிலை திரியாதபடி உரை வகுத்த அறிஞர்களுள் தலைசிறந்தவர் ஆசிரியர் பரிமேலழகர். அவர் சில வரம்புகளை வைத்துக் கொண்டே உரை வகுக்கின்றார். தம் உரையால் பெறும் முடிபுகள் தமிழிலக்கிய இலக்கண மரபு, தமிழ்நாட்டு வழக்கு என்றிவற்றோடு முரணாமை, கூறியது கூறல், முன்பின் மலைவு முதலிய குற்றங்களை நூலின்மே லேற்றாமை, கூடும் இடங்களிலெல்லாம் எல்லாச் சமயத்தார்க்கும் பொதுப்பட உரைக்கும் பொதுநிலை முதலியன அவ் வரம்புகள். அங்ஙனம் உரைக்கும் ஆசிரியர் பல இடங்களில் சித்தாந்த சைவ முடிபு பற்றியே உரைக்கும்படி நேர்கின்றது என்பது கருத்திற் கொள்ளற்பாலது.

*"கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்*
*தாளை வணங்காத் தலை"*

எனக் "கடவுள் வாழ்த்து" என்னும் பகுப்பில் வரும் பாட்டில், கடவுளை "எண்குணத்தான்" எனக் குறிக்கின்றார் ஆசிரியர். குறித்தலின், 'கடவுளுக்குக் குணங்கள் உள்ளன' என்பதும், அவை 'எட்டு' என்னும் எண்ணிக்கையையுடைய

1.தொல். பொருள். 646.

2. திருக்குறள் ஆராய்ச்சியும் ஜைன சமயசித்தாந்த விளக்கமும், ப.vii.

3. மேலது, ப. 137.

என்பதும் பெறப்படுகின்றன. ஆயினும் அக் குணங்கள் இவை என ஆசிரியரால் எடுத்தோதப்படவில்லை. ஆதலின், அவற்றை இவை என விளக்குதல் உரையாசிரியர் கடமையாகின்றது. ஆகவே பரிமேலழகர், "எண் குணங்களாவன தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்ப முடைமை என இவை. இவ்வாறு சைவாகமத்துக் கூறப்பட்டது. அணிமாவை முதலாகவுடையன எனவும், கடையிலா அறிவை முதலாகவுடையன எனவும் உரைப்பாரும் உளர்" என விளக்கந் தருகிறார். இங்ஙனம், தாம் கொண்ட உரையாசிரியர் வரம்பின்படி எல்லாச் சமயங்களுக்கும் பொதுப்பட விளக்கங்காண இயலாமல், சிவநெறி மரபுபற்றியே விளக்கங்காணும் இன்றியமையாமை ஏற்படுதலின், திருக்குறள் தன்னியல்பால் சிவநெறிமரபு பற்றிய விளக்கத்தை அவாய் நிற்றல் புலனாம். பிறவற்றை எண்குணங்களெனக் கொள்ள முடியாமைக்குக் காரணம் என்னை என யாம் உணர்தல் வேண்டும். அணிமா முதலாகச் சொல்லப்படும் எட்டும் யோக முயற்சியால் ஒருவன் பெறும் எண்பெரும்பேறு (அட்டமாசித்தி) என வழங்கலே மரபு ஆகலின், அவற்றைக் குணம் என்றல் மரபு வழுவாம். இனிக் 'கடையிலா அறிவு, கடையிலாக் காட்சி, கடையிலா வீரியம், கடையிலாவின்பம், நாமமின்மை, கோத்திரமின்மை, ஆயுவின்மை, அழியாவியல்பு' என்பவற்றைச் சைனர்கள் எண்குணங்களென வழங்குப; எனினும், அவற்றுட் சிலவே குணமாக, மற்று இன்மை, இன்மை என வருவன வெல்லாம் குணமாகா என்பது அளவை நூற்றுணிபு. அளவை நூல் எல்லாச் சமயத்தார்க்கும் பொது நூல். அந் நூலோர் பொருள்களை உள்பொருள், இல்பொருள் (பாவ பதார்த்தம், அபாவ பதார்த்தம்) எனப் பகுத்துக் கொண்டு, 'குணத்தை' உள்பொருள்களின் உட்பிரிவாக (பாவ பதார்த்தங்களுள்) அடக்குவர்; 'இன்மை'யை உள்பொருள்களின் வேறாக 'அபாவம்' என வைத்து வழங்குவர். ஆகலின், நாமமின்மை, கோத்திரமின்மை, ஆயுவின்மை என்பவற்றைக் 'குணம்' என்றல் அளவை நூல் வழக்கோடு முரணிக் கூறுவார் கூற்றேயாகலின் அவை குணமெனப்படா. அன்றியும் சைவாகமத்துக் கூறப்படும் குணங்கள் எட்டும் 'உலகிற்கு முதல்வனாவான்' ஒருவனுக்கு இன்றியமையாத குணங்கள் எனத் தருக்கித்துப் (ஆராய்ந்து) பெறப்பட்டவை. எட்டென்னும் வரம்புடையவை. முதல்வனுக்கு வேண்டப்படும் எல்லாக் குணங்களும் அவ்வெட்டனுள் அடங்கும்; 'கடையிலா அறிவு' முதலியனவோ, எட்டு வேண்டுமென்று வைத்துக் கொள்ளப்பட்டவையாக உள்ளனவே யன்றித் தருக்கித்துப் பெறப்பட்டவையாக இல்லை; நாமமின்மை, கோத்திரமின்மை, ஆயுவின்மை என மூன்று இன்மைகள் கொண்டபின், அவற்றோடு இயைபுள்ள உருவின்மை, தொழிலின்மை, குலமின்மை, சாத்திரமின்மை, சூத்திரமின்மை,

சாதியின்மை, போகமின்மை; என்றிவற்றைக் கூட்டி எண்ணாமைக்குக் காரணமென்னை என வினவின், அளவை முறையில் விடையிறுத்தல் இயலாது. இத்துணையும் எண்ணியே ஆசிரியர் பரிமேலழகர் சைவாகமத்துட் கூறப்பட்டவற்றையே கொண்டு, ஏனையவற்றைக் "கூறுவாரும் உளர்" என உடன்படாது போயினர் என்பதை உண்மை யாராய்ச்சியில் விருப்புடையோர் உன்னுதல் வேண்டும்.

## *திருவள்ளுவரும் வீட்டு நெறியும்*

ஈண்டுச் சிலர் உள்ளங்களில் ஒரு வினா எழுதல் இயல்பு. திருக்குறள் அறம் பொருள் இன்பம் என்னும் இவற்றின் இயலாகிய உலகியலே கூறுவதாகலின், இதனை 'வீடு' கருதிற்றாக வைத்துரைத்தல் வழுவன்றோ? என்பது அவ்வினா. இது பற்றி ஆராய்வோம்;

ஒழுக்கநெறி, வீட்டுநெறி என்னும் இரண்டும் மக்களுக்குச் சிறப்பாக வேண்டப்படுவன; உண்ண உணவும், பருக நீரும் எல்லாவுயிர்களுக்கும் வேண்டும்; அவையின்றி எவ்வுயிரும் உடம்போடு பொருந்தி நில்லாது. இதனைத் திருவள்ளுவர் தாமே 'வான் சிறப்பு' என்னும் அதிகாரத்தில் வகுத்துக் கூறிப் பின் செங்கோன்மை என்னும் அதிகாரத்தில் "வானோக்கி வாழும் உலகெல்லாம்" எனத் தொகுத்துச் சுட்டி வழிமொழிகின்றார். இவ்விரண்டும் மக்கட் பிறப்பின் வாராத உயிர்கட்குப் போதும்! மக்களுக்குப் போதா. அவர்தம் வாழ்விற்கு மேலும் அரசியல் அமைப்பு, பொருளியல் ஒழுங்கு முதலாயின வேண்டும். அவை இல்லையெனின், அவர் ஒற்றுமையாக அமைந்து வாழாது, கலாய்த்தும் போர் புரிந்தும் மாய்ந்து கெடுவர். இக் கருத்துப் பற்றியே திருவள்ளுவர் "வானோக்கி வாழும் உலகெல்லாம்; (ஆயினும்) மன்னவன் கோனாக்கி வாழும் குடி" என்றருளிச் செய்வாராயினர்.

மக்கட்பிறப்பின் வாராத உயிர்கள் பருவுடம்பைச் சார்ந்த பொறியுணர்வும், நரம்புகளில் அமைந்து வெளிப்படும் உணர்ச்சிகளுமே பற்றித் தொழிற்படும். மக்கள் அவற்றின் மேலும் 'மன உணர்வு' எனப்படும் சிறப்பறிவும் விளங்கப் பெற்றுத் தொழிற்படுவர். இறந்த கால நிகழ்ச்சிகளோடு நிகழுங்கால நிகழ்ச்சிகளைத் தொடர்புபடுத்தி உய்த்துணர்ந்து எதிர்கால நிகழ்ச்சிகளை ஒருவாறு துணியும் ஆற்றல் மக்களினத்திற்கே உண்டு. இவ்வாற்றலைப் பயப்பதே மனவுணர்வு எனப்படும். இவ்வுணர்வைப் பெருக்கிக் கொள்வது மக்களின் தலையாய கடன். இக்கருத்துப் பற்றியே ஆசிரியர் திருவள்ளுவர்,

"*அறிவுடையார் எல்லாம் உடையார்; அறிவிலார்*
*என்னுடைய ரேனும் இலர்*"

என்பாராயினர்.

இனித் தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார் 'அறிவு' என வேண்டுவது ஈண்டு, மனவுணர்வு எனச் சுட்டப்பட்ட இஃதொன்றினை மாத்திரம் அன்று. இதன் மேலும் இரண்டு உணர்வுகளை மக்கட்பிறப்பின் புண்பாகப் பயனாக வேண்டுவர். அவை முறையே அறவுணர்வும் கடவுள் உணர்வும் ஆம். இவற்றையும் அவர் 'அறிவு' என்னும் சொல்லாலே, இயைபு பற்றி உய்த்துணர்ந்து கொள்ளுமாறு குறிக்கின்றார்.

"*சென்ற விடத்தாற் செலவிடா தீ(து)ஒரீஇ*
*நன்றின்பால் உய்ப்பது அறிவு*"

(அறிவாவது ஒருவன் மனத்தை அது செல்லும் இடந்தோறும் செல்லவிடாது, தீயதின் நீக்கி நல்லதன்கண் செலுத்த வல்லதேயாம்) என்றவிடத்து 'அறிவு' என்னும் சொல்லால் குறிக்கப்படுவது அறவுணர்வேயாம்.

இனி,

"*பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்*
*செம்பொருள் காண்பது அறிவு*"

(பிறப்பிற்குக் காரணமாகிய பேதைமை எனப்படும் முனைப்புணர்வு நீங்க, வீட்டிற்கு நிமித்தமாகிய முதற்பொருளை அநுபவமாய்த் தலைப்பட்டுணரும் உணர்வு மெய்யுணர்வு எனப்படும்) என்பதில் உள்ள "அறிவு" என்னும் சொல் கடவுள் உணர்வைக் குறிக்கும்.

மேற்கூறிய அறவுணர்வு, கடவுள் உணர்வு எனப்பட்ட இருவகை யுணர்வும் மக்களுக்குப் பெருகி நலன் பயக்கும்படி சான்றோர்களால் வகுக்கப்படும் நெறிகள் முறையே ஒழுக்கநெறி, வீட்டுநெறி எனக் குறிக்கப்படும். "கேடில் விழுச்செல்வம்" எனப் போற்றப்படும் கல்வியின் பயனாவது அக் கல்வியைப் பெற்றார் இவ்விருவகை நெறிகளினும் நிறையுடன் நிற்கப்பெறுதல் ஆம் என்பது ஆசிரியர் திருவள்ளுவர் திருவுள்ளக்கிடை என்பதை முறையே,

"*கற்க கசடறக் கற்பவை; கற்றபின்*
*நிற்க அதற்குத் தக*"

எனவும்,

*"கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்*
*நற்றாள் தொழாஅர் எனின்"*

எனவும் அவர் அருளிச் செய்தமைபற்றி உணரலாம். இவற்றால், திருவள்ளுவர் கல்வியின் பயனாக, வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொள்வது இவ்விரு நெறியினையும் என்பது பெறப்படுதலின், அவர் வீட்டுநெறியினை உணர்த்தப் போந்தாரில்லை என்றல் பொருந்தாது. வாழ்க்கையின் முடிந்த பயன் வீட்டு நெறியேயன்றோ! ஆகலின், அந்நெறியினைத் திருக்குறள் விளங்கக் கொண்டு உணர்த்துகின்றதென்பதே அந்நூலினை முன்பின் முரணாமை முற்றும் ஓதியுணர்ந்த அறிஞர் யாவர்க்கும் ஒப்பமுடிந்த முடிபாம் என்பது உணர்க.

திருக்குறளைக் கேட்டுணர்ந்த நல்லிசைப்புலமைவாய்ந்த சான்றோர் ஒருவர்,

*"அறன்அறிந்தேம்; ஆன்ற பொருள் அறிந்தேம்; அதன்பின்*
*திறன்அறிந்தேம்; வீடு தெளிந்தேம் : – மறனெறிந்த*
*வாளார் நெடுமாற! வள்ளுவனார் தம்வாயால்*
*கேளா தனவெல்லாங் கேட்டு"*[1]

என்றமை கருதத்தக்கது.

திருவள்ளுவரைப் பற்றி, 'சமயக் கணக்கர் மதிவழி கூறாது' என்ற கல்லாடனார் 'உலகியல் கூறி' என்றேயொழியாது, '**பொருளிதுவென்ற** வள்ளுவன்' என்றமையும் நினைவு கூர்தற் பாலது.

இங்ஙனமாகலின், திருவள்ளுவர், தம் நூலில், அறம் பொருள் இன்பம் என்பவற்றை வெளிப்படையாக எடுத்தோதி வீட்டை அறத்துள் அடக்கிக் குறிப்பாற் பெற வைத்தார் என்பதே தலையாய அறிவினோர் துணிபாம் என்க. ஒழுக்க நெறியின் கனிந்தநிலையே வீட்டுநெறியாம் ஆகலின் அதனை 'ஒழுக்க நெறி'யுள் அடங்கக் கொண்டு, தமது நூல் நுதலிய நெறியினை முதலதிகாரத்திற்றானே "பொறிவாயில் ஐந்து அவித்தான் பொய்தீர் ஒழுக்கநெறி" எனச் சுட்டியருளினார் திருவள்ளுவர் என்பது உணர்தற்பாலது.

## குறிப்பிற் புலப்படுத்தும் பாங்கு

இனி, திருவள்ளுவர் கருத்து அதுவாயின், அவர் வீட்டு நெறியினை வெளிப்படையாகக் கூறாததென்னை யெனின், கூறுவாம்.

இயேசுநாதரைப்பற்றி ஒரு செய்தி கூறப்படுகிறது. அஃது அவர் தம்

1. திருவள்ளுவ மாலை, 50.

மாணாக்கர்களுக்கு உணர்த்த விரும்பிய உறுதிகளை வெளிப்படையாக, இலக்கண வகையாற் கூறாது, உருவகக்கதை (Paraples)களாகக் கூறவந்தார் என்பது, அதற்குக் காரணம் அவர்தம் வாய்மொழியைக் கேட்க வந்தோர் பலதிறத்தினராயிருந்தமையே என்பதும் கூறப்படுகின்றது. சிலர் அவர்தம் உள்ளக்கிடையை நன்கு உணரும் காதலும், அறிவும், உணர்ந்தபின் அவர் குறிப்பின்படி நிற்கவல்ல ஆற்றலும் வாய்ந்தவராயிருந்தனர் ; மற்றும் பலர் அத்தகைய காதல், அறிவு, ஆற்றல் என்பன இலராய் வெறுங்கதை கேட்டு மகிழும் கருத்தினராயிருந்தனர். ஆகலின் இவ்விரு திறத்தார்க்கும் பொதுப்பட, இயேசுநாதர் உருவகக் கதைகள் கூறினர். கதை கேட்க வந்தவர்கள் கதையே கேட்டு மகிழ்ந்து இயேசுவைப் போற்றினர்; ஏனைப் பக்குவம் முதிர்ந்த உணர்வினோர் கதைகளில் உள்ள குறிப்புக்களை நுண்ணிதின் உணர்ந்து, அவர் காட்டிய நெறியினின்று நலன் எய்தினர் என்ப. இதில் அமைந்துள்ள உண்மை ஆசிரியர் திருவள்ளுவர்க்கும் ஒக்கும். திருவள்ளுவர், பொருள்களை மேல்—போக்கில் உணரும் பருவுணர்வுடைய உலகர்க்கும், முடிந்த அடிப்படையுண்மைகளைச் சிறப்பாக ஆய்ந்து உணரவல்ல நுண்ணுணர்வு வாய்ந்த திருவருட்பேறுடையார்க்கும் பொதுவாக நூலை இயற்றி உள்ளார். நூலைக் கைக்கொள்வோர் தம் தம் திறத்திற்கு ஏற்பப் பருப்பொருளோ நுண்பொருளோ கொண்டு உரிய பயனைப் பெறுவர். இங்ஙனம், எவரெவர் எத்திறத்தர் அத்திறத்தராய் நின்று அவரவர்க்கு ஆனவற்றைச் செம்பொருள் குறிப்புப்பொருள் என் றித்திறத்தால் அவர் அவர் உணர்வின் பெருக்கத்திற்கேற்ப உணர்ந்து கொள்ளுமாறு முடிந்த முடிபுகளையும் அடிப்படையுண்மைகளையும் கொண்டு விளங்குதல் பற்றியே திருக்குறள் பொதுமறை எனப்படுவதாயிற்று; மற்று எல்லோரும் கொள்வன இதன்கண் உள என்பது பற்றியன்று. கேட்போர் உணர்வின் தகுதிக்கு ஏற்ப, ஊன்றிப் பயிலுந்தோறும் பயிலுந்தோறும் அரிய ஆழ்ந்த உண்மைகளை வெளிப்படுக்கும் வகையில் நூல்களை இயற்றி மக்களுக்குத் தருதல் சான்றோர் யாவர்க்கும் பொதுவியல்பு; அவ்வுண்மைகளை உணர்ந்து பயனுறுதல், அமைந்த உள்ளமும், நுண்ணுணர்வும் வாய்க்கப் பெற்றோர்க்கே கூடுவதொன்றாம், ஏனையோர், அமைந்து தம் கருத்தை ஆசிரியன் கருத்தின் வழிச் செலுத்த மாட்டாமையின், அவர், தாம் கண்டதே நூலுட்கண்டு, ஆசிரியர் காட்டும் நுண்பொருளைக் காணார்.

*"நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்*
*பண்புடை யாளர் தொடர்பு"*

"நற்குணமுடைய மக்கள் தம்முட் செய்த நட்புப் பயிலுந்தோறும் அவர்க் கின்பஞ் செய்யும்; அஃது எதுபோலும் எனின், நூற்பொருள் கற்குந்தோறும்

கற்குந்தோறும் இன்பஞ் செய்தலை ஒக்கும்" என்னும் ஆசிரியர் வாய்மொழி கருதத்தக்கது.

திரு. சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார் தாம் இயற்றிய 'அற நூல்கள்' என்னும் தொகுதியின் வெளியீட்டின் முன்னுரையில் கீழ்வருமாறு ஒரு குறிப்பு எழுதியுள்ளார். அது,

"இவ்வாறான வாழ்க்கைக்கு வேண்டிய ஞானம், நூல்களைப் படிப்பதனால் மட்டும் உண்டாகாது. நூல்களில் சொல்லப்பட்ட விஷயங்கள் விளங்குவதற்கே, வாழ்க்கையில் சீலமும் பக்தியும் பெற்றிருக்க வேண்டும். இல்லாவிடில் விளங்கிய மாதிரி தோற்றம் காட்டுமே யொழிய உண்மையில் விளங்காது" என்பது. இக்குறிப்புத் திருக்குறளில் கூறப்படும் ஒழுக்கநெறிக்கு முற்றும் பொருந்தும். எடுத்துக்காட்டாக இரண்டொன்றைக் குறிப்பிட விரும்புகிறேன்.

*"கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவன்*
*நற்றாள் தொழாஅர் எனின்"*

என்பது திருவள்ளுவர் வாய்மொழி. இதன் பொருளை எல்லோரும் அறிவர்; பிறருக்கும் எடுத்துரைப்பர். ஆயினும் இவ்வாய்மொழியின்படி ஒழுகும் ஒழுக்கத்தில் தலைநின்ற ஓர் ஆசிரியர் இதன் பொருளை எங்ஙனம் உணர்ந்து உள்ளார் என்பதைக் கீழ்வரும் பாடல்களில் காண்க:

*"உள்ளநிறை கலைத்துறைகள்*
*ஒழிவின்றிப் பயின்று அவற்றால்*
*தெள்ளிவடித் தறிந்த பொருள்*
*சிவன்கழலிற் செறிவு என்றே*
*கொள்ளும்உணர் வினில்முன்னே*
*கூற்றுதைத்த கழற்கன்பு*
*பள்ளமடை யாயென்றும்*
*பயின்றுவரும் பண்புடையார்"*

*"அலகில் கலையின் பொருட்கெல்லை*
*ஆடுங் கழலே எனக்கொண்ட*
*செலவு மிகுந்த சிந்தையினில்*
*தெளிந்தார் சிறிய பெருந்தகையார்"*

(பெரியபுராணம்.)

இவ்வாறே,

*"'வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை' யென்றமையால்*
*வேண்டினஃ தொன்றுமே வேண்டுவது—வேண்டின்அது*
*'வேண்டாமை வேண்டவரும்' என்றமையால் வேண்டிடுக*
*வேண்டாமை வேண்டுமவன் பால்"* —

(திருக்களிற்றுப்படியார் – 40)

என்னும் வெண்பா, சித்தாந்த ஞானச்செல்வர் திருக்கடவூர் உய்யவந்த தேவ நாயனார்,

*"வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது*
*வேண்டாமை வேண்ட வரும்"*

*"வேண்டுதல் வேண்டாமை இலான்அடி சேர்ந்தார்க்கு*
*யாண்டும் இடும்பை இல"*

என்னுங் குறள்களின் செம்பொருட்டுணிபு உணர்ந்து போற்றி ஒழுகி, பிறரையும் அவ்வொழுக்கத்தில் நிற்பிக்கும் பண்பாட்டைச் செவ்விதின் எடுத்துக்காட்டும்.

## *சித்தாந்த சைவரின் பிரமாண நூலாதல்*

இவ்வெடுத்துக் காட்டுக்களால் மற்றோருண்மையும் புலனாகும். அது, திருக்குறளை மறுவறக் கற்றுணர்ந்து அமைந்த ஒருவர், அந்நூலில் வரும் பொருளையும் சொல்லையும் பொன்னேபோற் போற்றி ஆளுகையில், பெரும்பாலும் முடிந்த விழுமிய கருத்துக்களையே ஆள்வர்; அன்றி அவர் ஆசிரியர் கருத்து உணராது சொற்பொருள் மாத்திரையே கொண்டு தங்கொள்கையின் வேறாய கொள்கையுடையாரை மறுக்கவோ, பிறர் முன்னர் இழுத்துக் காட்டவோ திருக்குறளைக் கருவியாகக் கொள்ளார் என்பதே. உண்மைத் துறவில் உண்மையான பற்று உடையார் ஒருவர் அவ்வொழுக்கின் தலைநிற்பாராய், அதற்குரிய வேடத்தைத் தாங்குதல் இயல்பு; அங்ஙனம் அவர் வேடந்தாங்குதல் அது அவரை அவ்வொழுக்கத்திற் றலைப் பிரியாமைக் கொண்டு உய்க்கும் என்னும் பயன்கருதியேயாம். அன்றியும், வேடந்தாங்காமையே அகத்துறவு உடையராய் ஒழுகுபவர் இருத்தல் கூடுமாயினும், ஒழுக்கமுடையாரொருவர் வேடத்தைத் தாங்குதல் குற்றமாகாது. இஃது உலகியல் பற்றியும் உணரப்படும். அரசியல் கட்சிகள் முதலியவற்றில் அவ்வக் கொள்கையினர் அவ்வக் கொள்கையைப் புலப்படுக்கும் அடையாளமும் ஒரே சீரான உடையும் உடையராய் உலவுதலைக் காண்கின்றோம். இங்ஙனம் ஒழுகும் உரிமை 'மக்கள் உரிமை'களுள்

ஒன்றெனவும் கருதப்படுகின்றது. ஆயினும், துறவறத்தில் வெறுப்புடையவர் அல்லது நம்பிக்கையில்லாதவர் ஒருவர்,

"*மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்*
*பழித்தது ஒழித்து விடின்*"

என்னுங் குறளை எடுத்துச் சொல்லி, மழித்தல் நீட்டல்களைப் பழித்தல் காணப்படாத தொன்றன்று: இன்னோர் திருக்குறளை எடுத்து ஆளுதல், அவர்தம் மனநிலையைக் காட்டுவதன்றி, மற்று அவர் திருக்குறளை முற்றும் உடன்பட்டு ஒழுகுகின்றவர் எனவோ, அதனை ஓதியுணர்ந்தவர் எனவோ அறிவியாது அன்றே! தமிழ்ப் பிரபோத சந்திரோதயத்தில் அதன் ஆசிரியர் சைன சமயக் கூத்தனை, இக்கருத்தே பற்றி,

"*அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்*
*உயிர்செகுத் துண்ணாமை நன்று*"

என்னுங் குறட் கருத்தை விளம்பி வந்ததாகக் கூறினார் என்பது முன்னரே விளக்கப்பட்டது. இங்ஙனம், சமயக் கணக்கர்கள் பரபக்கப் பார்வை ஒன்றே உடையராய்ப் பிறர் கொள்கையை இழித்துக் காட்டும் கருத்துடையராய் எடுத்தாளுதலும் உண்டு; அன்னோர் திருக்குறளை எடுத்தாளுதல் பற்றியே திருவள்ளுவர் நெறி அச் சமயக் கணக்கர் மதிவழியாகிவிடாது என்பது கருத்தில் வைத்தற்கு உரியது.

இனி, சிவநெறியினை விளக்கும் அருளாசிரியன்மார்கள் திருக்குறளை எடுத்தாண்டுள்ள இடங்களை நோக்கின், அவ்வாட்சிகள் பரபக்கப்பார்வை சிறிதும் இன்றிச் சுபக்கம் விளக்கும் இடங்களாக அமைதல் கருதத்தக்கது. அவற்றுள் பெரும்பான்மைய அறத்தின் பயன் உணர்த்தும் அதிகாரங்களில் வருவனவாய், மெய்ப்பொருள் துணிபு உணர்த்துவனவாய் உள்ளவை. இவ்வுண்மைதோன்ற முன்னர் எடுத்துக்காட்டுக்கள் சில தரப்பட்டன. இன்னும் சில இங்குத் தரப்படுகின்றன:

"*பற்றை யறுப்பதோர் பற்றினைப் பற்றிலப்*
*பற்றை யறுப்பர்என் றுந்தீபற*
*பாவிக்க வாராரென் றுந்தீபற*" – திருவுந்தி. – 14

"*சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் என்றமையாற்*
*சார்புணர்தல் தானே தியானமுமாம் – சார்பு*
*கெடவொழுகின் நல்ல சமாதியும்ஆம் கேதப்*
*படவருவ தில்லைவினைப் பற்று*". – திருக்களிற்றுப்படி: – 34

*"'தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி*
*வலைப்பட்டார் மற்றை யவர்' என்று – நிலைத்தமிழின்*
*தெய்வப் புலமைத் திருவள்ளுவர் உரைத்த*
*மெய்வைத்த சொல்லை விரும்பாமல் நெஞ்சமே".* – நெஞ்சுவிடுதூது.

## பிற சமயங்களின் நிலை

இங்குக் காட்டியவற்றிற்போல, மெய்ந்நெறி பற்றிய அடிப்படை யுண்மைகளுக்கும் முடிந்த முடிபுகளுக்கும் திருக்குறளை மேற்கோளாகக் கொண்டு போற்றுதல் பிற சமய வழக்கிற் காண்டல் அரிது; இல்லை எனவே கூறி விடலாம். அதற்குக் காரணம் யாது? அவர் எல்லோரும் தம் சமய உண்மைகளுக்கும் முடிபுகளுக்கும் தமிழ் நூல்களைச் சிறந்த பிரமாணமாகக் கொள்ளாமையேயாம். அஃதாவது செந்தமிழ் நூல்களுக்கு முதன்மை கொடாமல் பிறமொழி நூல்களுக்கே முதன்மை கொடுத்தலே யாம். மற்றுச் சித்தாந்த சைவர் யாண்டும் உண்மை அநுபவம் ஒன்றனுக்கே முதன்மை கொண்டு, அவ்வகையில் செந்தமிழ் முதனூல்கள் சிறந்து நிற்பனவாகலின், அவற்றுக்கே முதன்மை கொடுப்பர்.

இதுகாறும் செய்யப்பட்ட ஆராய்ச்சியால், திருக்குறள் செந்தமிழ்ப் பொதுமறை என்பதும், அங்ஙன்மாயினும் அது கருதும் மெய்ந்நெறி, ஏனைச் சமய வழி நிற்பார்க்கு முற்றும் இயைந்து நிற்காமல், சிவநெறிமரபு ஒன்றனுக்கே முற்றும் இயைந்து நிற்கும் சிறப்பியல்பு உடையது என்பதும், ஏனைச் சமயத்தவர் தாம் கொண்டொழுகும் மெய்ந்நெறி முடிபுகளுக்குத் திருக்குறளை உரையாணியாகக் கொள்ளவில்லை என்பதும், சித்தாந்த சைவர் மற்றிதனை எல்லா நூற்பொருள்களுக்கும் உரையாணியெனக் கொண்டு ஒழுகி வந்துள்ளனர் என்பதும் வெள்ளிடை மலையென விளங்கும்.

இனி, திருக்குறளைப் பொதுமறை எனக்கூறியபின் அதனைச் சித்தாந்த சைவர்க்கே உரிய நூல் என்பதுபட மொழிதல் கூடாது எனின், இங்குத் திருக்குறளைச் சித்தாந்த சைவர்க்கே உரிய நூல் என வரம்பு செய்யப் புகுகின்றோம் இல்லை என்பது கருதத்தக்கது. மற்று அதன்கண் கூறப்படும் முடிபுகளும் உண்மைகளும் சித்தாந்த சைவத்தின் முடிபுகளுக்கும் அடிப்படை யுண்மைகளுக்கும் முற்றிலும் ஒத்தவை என்பதும், திருக்குறள் சித்தாந்த சைவர்களால் சிறந்த பிரமாண நூலாகக் கொள்ளப்பட்டு வருகிற தென்பதும், அதனை முழுதும் ஆழ்ந்து முன்பின் மலைவற உணரின், அது சைவ சித்தாந்த ஞான நெறியிற்கொண்டு உய்க்கும் நோக்கு உள்ளது என்பதும் இங்குக் கூறப்படுவனவாம். ஆராய்ந்து பார்க்கின் எந்நூலையும் ஒரு சாரார்க்கே உரியது

எனக்கூற யாரும் ஒருப்படார்; ஒருப்பட்டுக் கூறினும் பொருந்துவதன்று. எல்லா நூல்களும் எல்லோருக்கும் உரியனவே. ஆயினும், சில நூல்களை எல்லோரும் எமது என்பர்; வேறு பலவற்றை அங்ஙனம் இயைந்து கொள்ளார். சிற்சில நூல்கள் பற்பலரால் சிறப்பு நூல்களாகவும் கொள்ளப்படும். இத் திறங்களுள் திருக்குறள் எல்லோராலும் போற்றப்படுந் திறமுடைய தென்பது வெளிப்படை.

இனி, ஆழ்ந்து நோக்கின், 'சித்தாந்த சைவம்' என்னும் சிறப்புப்பெயர் பற்றியே அதனுட் கூறப்படும் முடிந்த முடிபுகள் ஒரு சாரார்க்கே உரியன என்பது தானும் பொருந்துவதன்று. சித்தாந்த சைவம் என்பது யாது? கடவுள், உயிர், உலகு என்னும் முப்பொருள்களின் இயல்பையும் தொடர்பையும் சிறந்தெடுத்துக் கொண்டு, அவற்றை முன் பின் மலைவறக் கொண்டு விளக்குவதே. 'சித்தாந்தம்' என்னும் சொல்லின் பொருள் 'முடிந்த முடிபு' என்பது. முப்பொருள்களின் உண்மையும், இயல்பும் அவற்றுள் உயிர் எய்தியுள்ள பிறப்பின் இயல்பும், அதன் காரணமும், இனி அஃது எய்துதற்கு உரிய வீடு பேற்றின் இயல்பும் அதனைப் பெறுதற்குக் கொள்ள வேண்டும் செய்தி முறைகளும் என்னும் இவற்றைத் தொன்றுதொட்டு வரும் பெரியோர்களின் அநுபவ உரைகள், அளவை, பொருந்துமாறு என்னும் இவற்றால் தெளிந்து விளக்கும் நெறியே சைவ சித்தாந்தம் எனப்படும். எனவே, முடிந்த முடிபாகிய, சித்தாந்தம் 'ஐயத்தினீங்கித் தெளிய'லுறுவார் யாவர்க்கும் பொது உரிமையாவதன்றி, ஒரு சாரார்க்கே உரிய—தென்றல் விரிந்த மனத்தின் துணிபு ஆகாது. ஒருவன் ஒருபோது கடவுள் இல்லை எனக் கருதுகிறான் எனக் கொள்வோம்; அக்கருத்து அவனுக்கு எஞ்ஞான்றும் மாறாதிருப்பது என்று எப்படிக் கொள்ள முடியும்? எத்துணையோ அறிஞர்கள் முன்னர்க் கடவுள் இல்லை என இருந்து, பின்னர் உண்டு எனத் தெளிந்து, அவ்வுண்மையைப் பிறர்க்கும் உணர்த்தி வந்துள்ளனர்; வருகின்றனர். கடவுள் உண்மைக் கொள்கை யுடையோருள்ளும் சிலர் பலர், திண்ணிய மெய்யுணர்வின்மையால், அக் கொள்கையை அழித்துக்கொண்டு, கடவுள் இல்லையே என அழிவழக்குப் பேசுதலையும் காண்கின்றோம். மக்களின் அறிவு மாறா இயல்பின தன்று. அஃது அவர்தம் சூழல், அவரைக் கற்பிப்போர், அவர் கற்கும் நூல்கள் முதலியவற்றால் அவ்வப்பொழுது அலைக்கப்பட்டு அவற்றுக்கு ஏற்பச் சார்ந்ததன் வண்ணமாய் நிகழ்வது என்பது எல்லோருக்கும் ஒத்த முடிபு. இக்கருத்துப் பற்றி யன்றே திருவள்ளுவனார்,

"நிலத்தியல்பால் நீர்திரிந்து அற்றாகும்; மாந்தர்க்கு இனத்தியல்ப தாகும் அறிவு" என்பாராயினர்! ஆகலின், எம் முடிபினையும் 'இஃது இன்னார்க்கே உரியது' எனத் தள்ளி விடாமல், அதன் உண்மை நன்மைகளை ஆய்ந்து உணர்ந்து, கொள்ளுதலோ தள்ளுதலோ செய்வது விரிந்த அறிவுடைமைக்கு

அடையாளமாம்.

> "எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்பது அறிவு"

என்னும் திருவள்ளுவர் வாய்மொழி இங்குக் கருதுதற்கு உரியது.

## சிவநெறியின் பழைமையும் வரலாறும்

இனிச் சிவநெறியின் வரலாற்றை நோக்கின், அது வரலாற்றுக் காலத்தைக் கடந்த பழைமையுடையதென்பது வரலாற்று மூலங்களாலும் புதை பொருள் ஆராய்ச்சியாலும் விளங்கிக் கிடப்பதொன்று. வேத காலத்தின் முற்பட்ட காலத்தின் இருந்ததாய், உயர்ந்த பண்பாட்டினையும் நாகரிகத்தினையும் குறிக்கக் கூடியதாகிய வாழ்க்கையைப் புலப்படுத்தும் மொகஞ்சோதாரோ, அரப்பா என்னும் இடங்கள் பற்றிய புதை பொருள் ஆராய்ச்சியில் விளங்கும் வழிபாடு சிவ வழிபாடாக இருத்தல் இஞ்ஞான்று எல்லோருக்கும் ஒப்ப முடிந்த முடிபு. இச் சிவ வழிபாடு உலக முழுவதும் ஓரோரிடங்களில் அருகியும் பெருகியும் காணப்படினும், நம் இந்திய நாட்டில் இமயம் முதல் குமரி வரை தனிச் சிறப்பு வாய்ந்து வேத காலத்திலும் பிற்காலத்திலும் நிலவிய தென்பதும் எல்லோருக்கும் ஒத்த முடிபே. சங்க இலங்கியங்களினும் தொல்காப்பியத்தினும் சித்தாந்த சைவத்துட் கொள்ளப்படும் வழிபாட்டு முறையும் ஞான நெறியின் அடிப்படை உண்மைகளும் உள்ளன என்பதும் அறிஞர்கள் துணிபேயாம். புத்தம், சைனம், கிறித்துவம், இஸ்லாம் முதலிய பிற சமயங்களெல்லாம் ஒவ்வொரு காலத்தில் ஒவ்வோராசிரியரால் தோற்றி நிறுவப்பெற்றவையாயிருக்க இஃது ஒன்றே ஆதி காணப்படாததாய், வாழையடி வாழை என வந்த சான்றோர் மரபு பற்றி உணரப்படுவதாய் நின்று நிலவி வந்துள்ளது என்பது கருதத்தக்கது. சைன சமயம், விருஷப தேவர் என்ற ஒருவரால் ஆதி காலத்தில் தோன்றியது என இக் காலத்துக் கூறுவோர் சிலர் உளரேனும் அது வரலாற்று முடிபுகளோடு முரணிக் கூறுவார் கூற்றேயாகலின், அதனை ஆராய்ச்சியாளர்கள் உண்மை எனக் கொள்ளார்.

மேற்கூறிய காரணம் பற்றிச் சித்தாந்த சைவம் திருநெறி, மெய்ந்நெறி, நன்னெறி, சிவநெறி எனவே நெறி என்னும் சொல்லால் வழங்கப்பட்டு வந்துள்ளது என்பதும் உணர்தற்கு உரியது. சமயக் கணக்கர்கள் தோன்றாத காலம் சங்க காலம். அசோகர், புத்தர் கொண்ட நெறியை எங்கும் பரவ வைக்க எடுத்துக்கொண்ட முயற்சியினால் அக் கொள்கையைச் சொல்வன்மையுடன் உயர்த்திப் பேசும் சமயக் கணக்கர்கள் தோன்றினர்; அவர் பின்னர், சைன சமயக் கணக்கர்கள் தோன்றினர்; இவர் எல்லோரும் தாம் தாம் கொண்ட கொள்கைகளை அளவை முறையினால் அமைத்துக் கொண்டு பிற கொள்கையினர்களைத் தங் கொள்கைக்கு மாற்றும் நோக்கத்தோடு

பேசும் ஆற்றல் படைத்தவர்கள். அடிப்பட்ட சான்றோர் சென்ற நெறி பற்றி அற உணர்வும் கடவுள் உணர்வும் பெற்று உலகியல் மெய்ந்நெறி என்றிவற்றில் நின்று ஒழுகி அமைதியும், இன்பமும் உடையராய் மக்கள் வாழந்திருந்த தமிழ்நாட்டில் இன்னோர் நிலைக்கத் தொடங்கிய பின்னரே,

*"ஒன்றே பொருளெனின் வேறென்ப, வேறெனின்*
*அன்றென்ப ஆறு சமயத்தார்"*

எனக் கருதப்பட்ட சமயக் கணக்கர்களால் மக்கள் உள்ளத்தில் உலகியல், மெய்ந்நெறி என்னும் இரண்டும் பற்றிக் குழப்பம் ஏற்பட்டது. அக்குழப்பம் நீங்கித் தமிழ்ப் பெருமக்கள் தம் பண்டை நன்னெறியினை உணாநது அக்காலத்துப் புதியனவாய்த் தோன்றிய கொள்கைகளிலும் கொள்ளுவன கொண்டு தள்ளுவன தள்ளி ஒழுகி நலன் பெறற்பொருட்டே திருவள்ளுவர் இவ்வருமந்த நூலை ஆக்கித் தந்தருளினர். தந்தும் பயனென்னை? வேல் முதலிய கருவிகளைக் கொண்டு போர் புரியின், அக் கருவிகள் கூர்மழுங்கும்; ஆனால் சொற்போர் புரிவோர்க்குக் கருவியாகிய நா போர் புரியுந்தொறும் புரியந்தொறும் மேலும் மேலும் கூரிதாக அன்றே ஆகும்! ஆதல்பற்றியே புத்தரும் சமணரும் ஒருவரை ஒருவர் மாறி மாறி வாதிட்டுக் காதி நூல்கள் பல புனைந்து தமிழ் மக்களிடையே பரப்பினார்கள். இவ்வுண்மையை மணிமேகலை, நீலகேசி, சிந்தாமணி என்றின்னவற்றால் தெளியலாம்.

இந்நிலையில், புத்தர்கள் மேம்பட்டு நின்ற காலத்தில்தான் வாதவூர் அடிகள்(மாணிக்க வாசகப் பெருமான்) தோன்றியருளி முன்னெறியாகிய முதல்வன் நெறியினைத் தம் மறுக்கவொண்ணாத உண்மையநுபவம் பற்றிய திருவாசகத்தாலும், தம் அருள் வாழ்க்கையினாலும் அகவிருளுற்று உறங்கிய மக்கள் உள்ளங்களைத் திருவருளொளியால் அலர்த்தி அழகும் அன்பும் இன்பும் பெறச் செய்தருளினார். சில நூற்றாண்டுகள் கழிய மீண்டும் சமணம். புத்தம் என்னும் இச்சமயக் கணக்கரால் திருவருள் நெறிக்கு இடையூறுகள் நிகழ, திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர் என்னும் அருளாசிரியன்மார்கள் தோன்றித் தம் ஒப்புயர்வற்ற அருள் வாழ்கையினாலும் வாய்மொழியாலும் அவ்விடையூறுகளை நீக்கிச் சிவநெறியை விளக்கியருளினர். பின்னர்ப் பல நூற்றாண்டுகள் கழிந்த பின், மெய்ந்நெறி முடிபுகளுக்கு வடமொழி பிரமசூத்திரமே பிரமாணம் என்னும் துணிபு மக்கள் உள்ளங்களில் புகுந்து, அதன் மாறுபட்ட பேருரைகளால் அவர்தம் உள்ளங்கள் மலைவுற்று அலமந்தன. அலமர, அம்மலைவும் அலமரலும் நீங்கத் திருவருளால் மெய்கண்ட தேவர் தோன்றியருளினார். அவர் சிவஞான போதம் என்னும் தலைமணி ஞான நூலினைப் பன்னிரண்டு சூத்திரங்களாக இயற்றியருளி, அதனால் அறிவு நூல்களின் பொருளெலாம்

அடக்கி, அவற்றின் எல்லைகள் இவை இவை எனக்காட்டி மற்று மெய்ந்நெறியாகிய திருவருணெறி இது என உணர்த்தியருளினர். அவர் காலத்திற்றானே அவர்தம் மாணாக்கர் பல்லோருள்ளும் சிறந்த அருணந்தி சிவனார் சிவஞான போதத்தை ஒட்டி அதன் பேருரையாகச் சிவஞானசித்தி என்னும் ஞானநூலினை இயற்றியருளினர். இந்நூல் சிவநெறியின் அடிப்படை உண்மைகளையும் முடிபுகளையும் ஏது எடுத்துக்காட்டு என்னும் இவற்றோடு பொருந்தக் காட்டி, நீதியினால் அளவை முறைப்படி நிறுவும் பரந்து விரிந்த பெருநூலாகும். இவற்றுக்கு முன்னரே சிவநெறியினை மரபு மாத்திரையான் விளக்கியுபகரிக்கும் உபதேச நன்னூல்களாகத் திருவுந்தி, திருக்களிற்றுப்படி என்னும் இரு நூல்கள் உள்ளன; பின்னர் எழுந்த ஞான நூல்கள்யாவும் சிவஞானபோதத்தின் பொருளைப் பலவகையால் விளக்க எழுந்தவையே யாகும். சிவஞானபோதம் எழுந்த காலத்திற்குச் சற்றுமுன் பின்னாகத்தான் சிவநெறி எனப்படுவது 'சமயம்' என்னும் பெயராலும் குறிக்கப் படுவதாயிற்று. இங்ஙனம் உண்மை அனுபவத்தையும் அருளாசிரியன்மார் மரபையுமே தாரகமாகக் கொண்டு பண்டுதொட்டு நிலவுலகில் திருவருளால் நிலவிவரும் திருவருணெறியாகிய சித்தாந்த சைவம் அநாதியாய்ச் செந்தமிழ்ப் பயனாயுள்ளதாகலின், இது சமயக் கணக்கர், தம் விரிவிலா அறிவினால் மதித்து வகுத்த ஏனைச் சமயங்கள் போல் குறுகிய நோக்குள்ளதாகக் கூறப்படுவதொன்று அன்று என்பதைத் தமிழ் மக்கள் உணர்தல் வேண்டும். தமிழ் நாட்டில் தோன்றியருளி, தமிழ் மொழியும் வடமொழியும் உணர்ந்து சமரச நன்னிலை நின்ற அனுபூதிமானாகிய தாயுமான அடிகள் இப்பெரு நெறியை,

*"செப்பரிய சமயநெறி யெல்லாம் தம்தம்*
*தெய்வமே தெய்வமெனுஞ் செயற்கையான;*
*அப்பரிசா ளருமஃதே பிடித்தால் இப்பால்*
*அடுத்த நூல் களும்விரித்தே அனுமா னாதி*
*ஒப்பவிரித் துரைப்பரிங்ஙன் பொய்மெய் என்ன*
*ஒன்றிலை; ஒன் றெனப்பார்ப்பது ஒவ்வா தார்க்கும்*
*இப்பரிசாம் சமயமுமாய் அல்லவாகி*
*யாதுசம யமும் வணங்கும் இயல்பதாகி*
*இயல்பென்றுந் திரியாமல் இயமம் ஆதி*
*எண்குணமும் காட்டி அன்பால் இன்பம் ஆகி*
*.................................*
*......................... மௌன மோலி*

*அயல்வறச் சென்னியில் வைத்து ராசாங் கத்தின்*
*அமர்ந்ததுவை திகசைவம் அழகிது அந்தோ"*[1]

என வியந்து கூறுதல் உளங்கொளற்பாலது.

திருக்குறளை இக்காலத்து அதன் உண்மைக் கருத்துக்கு மாறாக எடுத்தாண்டு வருபவர்கள் இருதிறத்தினர்; ஒருதிறத்தினர் உலகியல் வாதிகள். இவர்களுக்குத் தமக்கென ஆய்ந்து கொண்ட ஒரு முடிபோ பிரமாண நூலோ இல்லை. இன்னோர் அரசியல், இனவியல், கல்வித்துறை முதலிய எல்லாவற்றிலும், விளக்கு அற்றம் பார்த்து நுழையும் இருள்போலச் சமயம் வாய்க்கும்போதெல்லாம், நுழைந்து மக்கள் உள்ளத்தை ஒருநெறிப்பட வொட்டாமல் குழப்பம் மிகுவிப்பர். இவர்கள் தாம் கூறுவதை மக்கள் நம்பவேண்டுமே என எண்ணித் திருக்குறளையும் சங்க இலக்கியங்களையும் இங்கொருபாட்டு அங்கொருபாட்டாக எடுத்து ஆண்டு மரபு நிலை திரியக்கொண்டு விபரீத உரைகள் வழங்குவர். இவர்கள் திருக்குறளை மேற்கோளாக ஆள்வது பொதுமக்கள் தங்களைத் தமிழ் மக்கள் என எண்ண வேண்டுமே என்பது பற்றியேயாம். மற்றொரு திறத்தினர் பண்டு நம் தமிழ்நாட்டில் ஒழுக்க நெறி, மெய்நெறி என்றிவற்றில் குழப்பம் விளைத்த சமயக்கணக்கர்களின் வழித்தோன்றல்கள். இவர்கள் இடையே தோன்றி இடையே மறைந்த தம் கொள்கைகளைத் திருக்குறள் மூலமாகவும் சங்க இலக்கியம் அல்லாத சில நூல்களாலும் மீளவும் தமிழ் மக்களிடையே பரப்ப முயலுவோர். இவர்களும் திருக்குறளுக்கு விபரீத உரை செய்து வருவோரே. இவ்விருதிறத்தினரும் செந்தமிழ்ப் பொதுமறையாகிய திருக்குறளைப் பற்றியும் அதனுட் கூறப்படும் நெறி பற்றியும் பரப்பிவரும் விபரீதக் கருத்துக்களை விபரீதம் எனக் காட்டவே இதுகாறும் எழுதியது. இனி நமது பொது மறையின் முடிபுகள் என்ன என்பது பற்றியும், அவையாவும் சித்தாந்த சைவ நெறிக்கண் கொண்டு உய்க்கும் நோக்கு உடையவாதல் பற்றியும் கூறுவோம்.

இதுவரை செய்த ஆராய்ச்சியால் திருக்குறளின் முடிந்த முடிபுகள் சில விளக்கமாகின்றன: அவை (1) மக்கள் உயிர்க்கு உறுதிப்பயப்பன அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றுமாம் என்பதும், (2) அவற்றுள் பொருளும், இன்பமும் அறத்தை அடிப்படையாகக் கொண்டு ஒழுகின் அல்லது, உறுதியாகா என்பதும், (3) அஃதே போல் அறந்தானும் கடவுள் உண்மைக் கொள்கையும் கடவுள் வழிபாடும் உடையார்க்கன்றிப் பயன் தாராது என்பதும், (4) அறமாவது கடவுளது ஆணையாகிய பணியே என்பதும், (5) ஒருவன் ஒருபிறப்பிற் செய்த அறம் அப் பிறப்பிலே அழிவெய்தாது அவன்றன் உயிருடன் சென்று வேறு பிறப்புக்களினும்

---

1. தாயுமானவர் பாடல்கள் – ஆகாரபுவனம்: 9–10.

பயன் தரும் என்பதும், (6) அங்ஙனம் அது பயன் தருவது முதல்வனது திருவருள் அதன் பயனை வகுத்துத் தருதலால் ஆவது என்பதும், (7) இங்ஙனம் கடவுளை அறத்தின் முதலாகக் கருதி ஒழுகும் ஒழுக்கமே பின் கனிந்து அக்கடவுளைத் தலைப்பட்டுணரும் மெய்யுணர்வுக்கு ஏதுவாகிய மெய்ந்நெறியாக மாறி நின்று வீடு பயக்கும் என்பதும், (8) இங்ஙனமாகலின், கடவுள் எனப்படும் முதற்பொருள் அறத்தின் முதலாயும் பயனாயும் உள்ளது என்பதும் பிறவும் ஆம்.

இம் முடிபுகளால், திருக்குறள் மக்கட்கு இன்றியமையாத ஒழுக்க நெறி, மெய்ந் நெறி என்னும் இரண்டனையும் அவை பயன் தரும் முறையில் இயைத்துக் கூறும் ஒரு பெருநூல் என்பது விளங்கும். இவற்றுள், ஒழுக்க நெறி பற்றிய அடிப்படைகள் சைவசித்தாந்தத்திற் கொள்ளப்படும் அடிப்படைகளாகவே திருக்குறளிற் காணப்படுதல் மேற்காட்டப்பட்டது. இனி, திருக்குறளிற் காணப்படும் மெய்ந்நெறி முடிபுகளும் சைவ சித்தாந்த முடிபுகளாகவே இருத்தலை நோக்குவோம்.

# திருக்குறள் காட்டும் மெய்ந்நெறி

## பொதுவும் உண்மையும்

*"புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்*
*துச்சில் இருந்த உயிர்க்கு"*

*"ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே*
*பேரா இயற்கை தரும்"*

என்னும் குறள்களின் பொருணோக்கைக் கருதுவோம்.

## இவற்றுள் முன்னையதன் பொருள்:

'உடம்புகளுள் ஒதுக்கிருந்தே வரும் உயிர்க்கு என்றும் உள்ளதோர் இல் அமைந்ததில்லை போலும்' என்பது.

## பின்னையதன் பொருள்:

'ஒருகாலும் நிரம்பாத இயல்பினையுடைய அவாவினை ஒருவன் நீக்குவானாயின், அந்நீக்குதல் அவனுக்கு அப்போதே மாறாத இயற்கையைத் தரும்' என்பது.

இவற்றால், உயிர்களுக்கு இருவகை நிலைகள் உள்ளன என்பது குறிக்கப்படுகின்றது: ஒன்று பிறப்புநிலை; அஃதாவது உடம்புகளுள் ஒதுக்கிருந்தே போதரும் நிலை. இந்நிலையில் உயிர் வினைக்கீடாகப் பிறப்பு இறப்புக்களுட்பட்டு உழன்று வரும். மற்றொன்று மாறா இன்பத்தமரும் நிலை; இதுவே வீட்டுநிலை எனப்படுவது. இதனைப் 'பேரா இயற்கை' எனத் திருக்குறள் குறித்தலின், இந்நிலையே உயிர்க்கு இயற்கையாவது என்பதும், மற்றுப் பேரும் நிலையாகிய பிறப்புச் செயற்கையான் ஆயது என்பதும் உணரப்படும். அது செயற்கையாதல் பற்றியே, ஆசிரியர்

*"பொருள்அல் லவற்றைப் பொருள்என்(று) உணரும்*
*மருளான்ஆம் மாணாப் பிறப்பு"*

என்னும் பாட்டால், அது வருதற்குக் காரணம் கூறுவாராயினர் என்பது உணரத்தக்கது. மேலும், இப்பாட்டில் பிறப்பை மாணாப்பிறப்பு (இன்பம் இல்லாத

பிறப்பு) என்றமையின், பேரா இயற்கை எனப்படும் வீடு இன்பம் உள்ளது என்பதும் உணரப்படும். வீட்டு நிலைக்கண் பேரின்ப அநுபவம் உண்டென்பது,

*"இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி*
*மாசறு காட்சி யவர்க்கு"*

*"சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே*
*மற்றின்பம் வேண்டு பவர்"*

என்பவற்றானும் உணரப்படும்.

இக்கருத்துக்கள் யாவும் சித்தாந்த சைவத்தின் அடிப்படை உண்மைகளாம். சித்தாந்த சைவத்தின் செந்தமிழ் முதனூலாகிய சிவஞான போதத்தின் பெரும்பிரிவுகள் இவ்வடிப்படையுணர்வு பற்றியே அமைந்துள்ளன. கடவுள், உயிர், உலகு என்னும் முப்பொருள்களுள், ஏனையிரண்டனையும் சார்ந்து பயனுறுவது நடுவண் உள்ளதாகிய உயிர். உயிரின் இலக்கணம் "இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா"* என்னுந்தொடரால் உணர்த்தப்படுகின்றது. இத்தொடரில் வந்துள்ள 'இருதிறன்' என்பது கடவுள், உலகு என இருவகைப்பட உள்ள பொருள்களைக் குறிக்கும். இவை சித்தாந்த சைவத்தின்கண் முறையே செம்பொருள் (சத்து), நிலையில் பொருள் (அசத்து) என வழங்கும். 'இவ்விருதிறனையும் அறிவதாய் இவற்றின் வேறாய் உள்ளது உயிர்' என்பது எடுத்துக் காட்டிய தொடரின் பொதுப் பொருள். முப்பொருள்களுள் கடவுள் ஒன்றை அறிய வேண்டாமையாலும், உலகு அறிய மாட்டாமையாலும் பொருளாராய்ச்சி உயிருக்கே உரியதாகின்றது. ஆகலின் அது பொருள்களை அறியும்போது தான் நிற்கும் இரு நிலைகளுக்கு ஏற்ப இருவேறு வகைப்பட அறியும். அஃதாவது உயிர்க்குப் பிறப்பு, வீடு என்னும் இருவகை நிலைகள் இருத்தலின், இந் நிலை வேறுபாடு பற்றி அஃது அறிந்துணரும் பொருள்களின் இயல்பும் இருவகைப்படும். எடுத்துக்காட்டாக, கூர்ந்து ஆராயாத நிலையில், நிலவுலகு தட்டை வடிவிற்றாய்த் தோன்றுதலின் அதனைத் தட்டை வடிவினது எனவே உணர்ச்சியிற் கொள்கிறோம். இன்னும் இவ்வுலகை ஞாயிறும் விண்மீன்களும் சுற்றி வருவதாகவும் உணர்கிறோம். இவ்வுணர்ச்சி கூர்ந்து உணராத நிலையில் உளதாவது ஆகலின், இதற்குப் புலனாகும் இயல்பு பொது வியல்பு எனப்படும்; ஆயினும் இவ்வியல்பு பொய்யன்று: மற்றுச் சார்பு பற்றியது. இனிக் கூர்ந்து உணரும் உணர்வுக்கு நில்வுலகு உருண்டை வடிவினது என்பதும், அது நாடோறும் சுழலும் சுழற்சியால் அதன் மீது உள்ள வீண்மீன்களையும்

---

* சிவஞானபோதம், சூ.7.

ஞாயிற்றினையும் கணத்துக்குக் கணம் வேறுவேறு நிலைகளில் கண்டு வருகிறோம் என்பதும் உண்மையியல்பாம். இவ்வாறே, பிறப்பு நிலைபற்றி உணரப்படும் முப்பொருள்களின் இயல்பு பொதுவியல்பு எனவும் வீட்டு நிலைபற்றி உணரப்படும் அவற்றின் இயல்பு உண்மையியல்பு எனவும் கூறப்படும். இவற்றுள் பொதுவியல்பை விளக்கும் முன் ஆறு சூத்திரங்கள் பொது வதிகாரம் எனவும், சிறப்பியல்பு கூறும் பின்னாறு சூத்திரங்கள் உண்மையதிகாரம் எனவும் சிவஞான போதத்துட் பாகுபடுத்தி வைக்கப் பட்டுள்ளன. பிறப்பு, வீடு என்பன முறையே பெத்தம், முத்தி எனவும், பொது வியல்பு உண்மையியல்பு என்பன முறையே தடத்தலக்கணம், சொரூப லக்கணம் எனவும் வழங்கும். நிற்க, 'பேராவியற்கை', "ஈண்டுவாரா நெறி" என வீட்டு நிலையைக் குறிக்கும் திருவள்ளுவர் வாய்மொழியோடு "துறக்குமா சொலப்படாய்" என்னுந் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் திருவாக்கை ஒப்பிட்டு நோக்குக. 'துறக்குமா சொலப் படாய்' என்னும் தொடர் "(பெருமானே!) நின்னை அணைந்தோரை நீக்குகிறாய் எனக் கூறப்படாதாய்?" எனப் பொருள் பயக்கும். பயத்தலின், வீட்டு நிலை எய்திய உயிர் மீளப் பிறப்புக்கு வாராது என்பது கருத்தாயிற்று. இக் கருத்துத் திருவள்ளுவர் கருத்தோடு ஒத்தது. இனி, ஆருகதர்கள் சித்தாந்தத்தின் படி வீடாவது "சீவன் மோக முதலியவற்றின் நீங்கிச் சுதந்திரம் பெற்று உலகங் கடந்து எல்லையின்றி யுளதாகிய ஆகாயத்தில் மேல் நோக்கியே செல்லுதல்" ஆம். இது 'பேரா வியற்கை' என்னும் திருவள்ளுவர் வாய் மொழியோடு முரணுதல் காண்க. தார்க்கிகர் முதலாயினோர் வீட்டு நிலையில் உயிர் உணர்வின்றிப் பாடாணம் போற் கிடக்கும்; இன்புறாது என்பர். இது போல்வனவும் திருக்குறள் முடிபோடு மாறுகோளுடையனவே.

## *கடவுள்*

இனிக் 'கடவுள்' என்பது பற்றிச் சிறிது ஆராய்வோம்: 'கடவுள்' என்னும் சொல் 'கடவுள் வாழ்த்து' என்னும் முதலதிகாரத்தின் பெயரில் அன்றி நூலுள் யாண்டும் வரவில்லை. ஆயினும் முதல் அதிகாரத்தைக் 'கடவுள் வாழ்த்து' என வழங்கி வருவதே தொன்று தொட்ட மரபு; அன்றியும் அவ்வதிகாரத்துள் ஆதிபகவன், வாலறிவன், மலர்மிசை ஏகினான், வேண்டுதல் வேண்டாமை யிலான், இறைவன், பொறிவாயில் ஐந்தவித்தான், தனக்குவமையில்லாதான், அறவாழி அந்தணன், எண் குணத்தான், இறைவன் என வரும் பெயர்கள் பத்தும் காரண ஆக்கக் குறிகளாய் நின்று கடவுளியல்பு உணர்த்துவனவாயுள்ளன. இப் பெயர்களை யாதானும் ஒரு சமய வழக்குப் பற்றி எடுத்தாளப் பெற்ற மரபுப் பெயர்கள் எனக் கொள்வது பொருந்துவ தன்று. இப் பெயர்களுள் எதுவும் ஒரு குறிப்பிட்ட தெய்வத்தின் அல்லது சமய ஆசிரியன்றன் சிறப்புப் பெயரென ஐயமின்றிக்

கொள்ளும்படி அமையவில்லை. ஆயினும், பத்துக் குறள்களில் ஒன்பது பெயர்களே வந்துள்ளமையினையும், (இறைவன் என்பது இருமுறை வந்துள்ளது), அவற்றுள் ஒன்று, 'எண்குணத்தான்' என இருத்தலையும் கூர்ந்து நோக்கின், ஏனை எட்டுப் பெயர்களுள் ஒவ்வொன்று ஒவ்வொரு குணமாக எட்டுக் குணங்களைக் குறிப்பிப்பனவாக அமைக்கப்பெற்றன என எண்ணுதற்கு இடன் உண்டு. இவ்வகையில் எண்ணுமிடத்து, ஆதிபகவன் என்னும் பெயர் உலகின் தொழிற்பாட்டிற்கு முதல் என மேற்கொள்ளும் இடத்தில் வருதலின், அது 'தன்வயமுடைமை' என்னும் குணத்தைக் குறிக்கும்; 'வாலறிவன்' என்பது 'இயற்கையுணர்வினனாதல்' என்னும் குணத்தைக் குறிக்கும்; 'மலர் மிசை ஏகினான்' என்பது, அன்பால் நினைவாரது நெஞ்சக் கமலத்தே அவர் நினைந்த உருவோடு தோன்றியருளுமாற்றைக் குறிப்பதாகலின், அதனால் ''தூயவுடம்பினனாதல்'' என்னும் குணம் உணரப்படும்; 'வேண்டுதல் வேண்டாமை யிலான்' என்பது 'வரம்பில் இன்பமுடைமை' யைக் குறிக்கும். 'இறைவன்' என்பது 'முற்றுமுணர்தல்' என்றதைக் குறிக்கும்; 'பொறிவாயில் ஐந்தவித்தான்' என்பது 'இயல்பாகவே பாசங்களின் நீங்குதலை'க் குறிக்கும்; 'தனக்குவமையில்லா தான்' என்பது 'முடிவிலாற்றலுடைமை'யைக் குறிக்கும். 'அறவாழி அந்தணன்' என்பது 'பேரருளுடைமை'யைக் குறிக்கும். இவற்றுள் 'தனக்குவமையில்லாதான்' என்னும் பெயர் கடவுள் உயிர்களின் வேறாய்த் தான் ஒன்றேயாய் இருக்கும் 'தனிமை'யையும் குறிக்கும். ''எந்தையார் அவர் எவ்வகையார் கொலோ!'' என்னும் திருப்பாசுரமும், ''பந்தமும் வீடும் ஆய பதபதார்த்தங்கள் அல்லான்'' என்னும் சிவஞான சித்தியும் இக் கருத்தே பற்றியவை.

இனி, 'கடவுள்' என்னுஞ் சொல் கடந்து நிற்பது, அஃதாவது, இது எனச் சுட்டி அறியலுறுவார் அறிவு முதலியவற்றைக் கடந்து அப்பாற்பட்டு உள்ள பொருள் எனப் பொருள் தரும். கடவுளாவது 'சார்பினால் தோன்றாது தான் அருவாய், எப்பொருட்கும் சார்பென நின்று இவையெல்லாம் கடந்த முதற்பொருள்' எனக் கொள்வது பண்டுதொட்டுத் தமிழ்ச்சான்றோர் கொள்ளும் வரையறை. இவ்வரையறையே திருவள்ளுவர்க்கும் உடன்பாடு எனக் கொள்ளுதலே சால்புடைத்து. இது திருவள்ளுவர் தாமே துறவு, மெய்யுணர்தல் என்னும் அதிகாரங்களில், முதற்பொருளைப் 'பற்றற்றான்', 'செம்பொருள்', 'உள்ளது', 'சார்பு' என்னும் காரணக் குறிகளால் வழங்குதலானும் உணரப்படும்.

இங்ஙனம் கூறப்படும் முதற்பொருள் மெய்யுணர்வு பெற்றோர்க்குத் தலைப்பட்டுணரும் அனுபவப் பொருளாயும் ஏனையோருக்கு அவர் வாய்மொழியாற் கேட்டு அறியப் பட்டு அளவைகளாலும் பொருந்துமாற்றாலும் உய்த்துணரப்படும் பொருளாயும் இருப்பது என்பது சித்தாந்த நெறிக்கண்

கொள்ளப்படும் அடிப்படை உண்மைகளுள் ஒன்று. இது திருவள்ளுவர்க்குங் கருத்தாதல் எளிதின் உணரப்படும். அவர் முதலதிகாரத்தில் முதற் குறளால் கடவுள் உண்மைக்குப் பிரமாணங் கூறினார் என்பது மேலே காட்டப்பட்டது. அங்ஙனம் அவர் பிரமாணங் கூறியதற்குக் காரணம் பிறப்பு நிலையில் உள்ளார்க்குக் கடவுள் அளவைகளால் உய்த்துணரப்படும் பொருள் என்பது பற்றியேயாம். இனி மெய்யுணர்ந்து வீட்டு நிலை நிற்பார்க்குக் கடவுள் தலைப்பட்டுணரும் அனுபவப் பொருளாம் என்பது அறத்தின் பயன் கூறும் அதிகாரங்களில் உணர்த்தப்படுகிறது.

## *மெய்யுணர்வு*

மெய்யுணர்வு இன்னது என வரையறுக்கும் ஆசிரியர்,

*"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்*
*செம்பொருள் காண்பது அறிவு"*

எனக் கூறுகின்றார்.

இதன் பொருள்: 'மெய்யுணர்வாவது வீட்டிற்கு நிமித்த காரணமாகிய முதற்பொருளை அனுபவமாய்க் கண்டுணரும் உணர்வு' என்பது. சிறப்பு என்றது வீட்டினை. இச்சொல் இப் பொருளில், "சிறப்பீனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்கு ஆக்கம் எவனோ உயிர்க்கு" என்னும் குறளில் வந்துள்ளது. "பாங்கருஞ் சிறப்பின்" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்துச் 'சிறப்பு' என்றது இப்பொருள் பயத்தல் கருதத் தக்கது.

'செம்பொருள்' என்றது மாறுபடுதலின்றி நித்தமாய்த் தூய்தாய் உள்ள முதற் பொருளை. இத் தொடர்ப் பொருளே மெய்கண்ட தேவரால் சிவஞானபோத ஆறாஞ் சூத்திரத்துச் 'சிவசத்து' என்பதனாற் சுட்டப்படுகின்றது. செம்பொருள் சிறப்பிற்கு (வீட்டிற்கு) நிமித்தமாதல் பற்றிச் 'சிறப்பென்னும்' செம்பொருள் என உபசரிக்கப்பட்டது. இவ்வாட்சி பற்றித் திருவிளையாடற் புராண ஆசிரியர் முதற்பொருளைத் 'தனிப்பர முத்தியான முதல்' எனக் காப்புச் செய்யுளுள் வைத்துப் போற்றியுள்ளார். 'காண்பது' என்றதனால் 'அனுபவமாய் உணர்தல்' என்பது விளங்கும். 'அறிவு' என்னும் சொல் அதிகாரம் பற்றி மெய்யுணர்வின் மேல் நின்றது.

முதற்பொருளை வீட்டிற்கு நிமித்தம் என்றல் ஆசிரியர் கருத்தென்பது அவர்,

*"பிறவிப் பெருங்கடல் நீந்துவர்; நீந்தார்*
*இறைவன் அடிசேரா தார்"*

எனவும்,

*"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"*

எனவும் கூறியவற்றால் ஐயமின்றித் தெளியப்படும்.

இனிச் சிறப்புடையதனைச் சிறப்பென்றார் எனினும் அமையும். செம்பொருளுக்குச் சிறப்பாவது தன்னைச் சார்ந்தாரைத் தன்வண்ணமாக்கித் தானாகச் செய்தல்.

இப்பாட்டின் நுண்பொருள் பின்னர் விளக்கப்படும்.

இன்னும் 'துறவு' என்னும் அதிகாரத்து 'முற்றத் துறத்தலாவது இன்னது' என உணர்த்துவார்,

* *"தலைப்பட்டார் தீரத் துறந்தார்; மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்"*

என்கின்றார் ஆசிரியர்.

இதன் பொருள்: தீரத் துறந்தாராவார் முதற் பொருளைத் தலைப்பட்டோரே; தலைப்படாத ஏனையர் எல்லோரும் உலகப் பொருள்களிற் பற்று விடாமையின், அவற்றின் ஈர்ப்புண்டு கட்டுற்று நின்றோரே என்பது.

தலைப்படுதல் என்னும் வினை செயப்படுபொருள் குன்றாததாகலின் அதற்கு உரிய செயப்படுபொருள் வருவித்து உரைக்கப்பட்டது. தீரத்துறத்தல் – முற்றத்துறத்தல்.

இங்குக் காட்டிய பாட்டுக்களால் முதற் பொருள் உலகப் பற்று அற்றார்க்குத் தலைப்பட்டு உணரும் பொருள் என்பதும், அங்ஙனம் அம் முதற்பொருளை அநுபவமாய் உணரும் உணர்வே மெய்யுணர்வாம் என்பதும் இனிது விளங்கும்.

## சார்புணர்ந்து சார்புகெட ஒழுகல்

இனி இங்குக் காட்டிய பாட்டுக்கள், திருவள்ளுவர் கூறும் மெய்ந்நெறியினைச் சங்கரர் முதலாயினார் கூறும் ஒருபொருட் கொள்கையில் (கேவலாத்துவித மதத்தில்) கொண்டு உய்க்காமை உணர்தற்பாலது. சங்கரர் கொள்கையைப் பின்பற்றுவோர் 'மெய்யுணர்வாவது தன்னையே முதற்பொருள் என உணர்ந்து கொள்வது' என்பர். அங்ஙனம் உணரும் நிலையில் உணர்வோனும், உணரப்படுபொருளும், உணர்வும் எனப் பகுக்கும் வழக்கின்றிக் கேவலம் ஞான

மாத்திரையே உள்ளது எனவும், அதுவே மெய்ஞ்ஞானமாதலின், அஞ் ஞானம் கைவல்ய ஞானம் (கேவலசம்பந்த ஞானம்) ஆம் எனவும் கூறுவர். கேவலம்– தனிமை. திருவள்ளுவர் கூறும் மெய்யுணர்வு நிகழ்ச்சியில் உணர்வோனாகிய உயிரும், உணரப்படு பொருளாகிய செம்பொருளும், உணர்வு நிகழ்ச்சியும் உள்ளன என்பதில் ஐயமின்று. சங்கரர் கூறுங் கொள்கையைச் சுருங்கக் கூறின் "பிரமம் ஒன்றே உள்பொருள்; உலகும், அதன்மாட்டு நிகழும் பன்மையுணர்வுகளும் வெறுந்தோற்ற மாத்திரையாகிய பொய்யே; உயிர் பிரம்மே; வேறன்று," என்னுந் தொடர்களில் அடங்கும் என்ப. எனின், இக் கொள்கையின் வாசனைதானும் திருக்குறளில் யாண்டும் காண்டல் அரிது. திருவள்ளுவர் உயிர், உலகு, கடவுள் என்னும் மூன்றனையும் உள்பொருளெனவே கொள்கின்றார் என்பது மேற் செய்து போந்த ஆராய்ச்சியால் இனிது விளங்கும்; சிறப்பாகப்

*"பற்றுக பற்றற்றான் பற்றினை; அப்பற்றைப்*
*பற்றுக பற்று விடற்கு"*

*"சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் மற்றழித்துச்*
*சார்தரா சார்தரு நோய்"*

என்பவற்றை நோக்கின் எளிதின் விளங்கும்.

இவற்றுள் முதற் பாட்டால் கிடைக்கும் திரண்ட பொருளாவது; 'உயிர்க்கு இருவகைப் பற்று உண்டு; ஒன்று அது பிறப்பு நிலையிற் பற்றும் பற்று–அஃதாவது உடம்பும், அது சார்பாக வரும் ஏனை உலகத்துப் பொருள்களும் ஆம்–மற்றையது வீட்டு நிலையிற் பற்றுவது–அஃதாவது பற்றற்றானது பற்று. இவற்றுள் உலகப்பற்றை விடுதற்குப் பற்றற்றானது பற்றைப் பற்றுதல் வேண்டும்; என்பது.

இரண்டாவது பாட்டின் பொருள்; 'பிறப்பாவது உலகச்சார்பால் வருவது. அச் சார்பு அப் பிறப்பின்கண் செய்யப்படும் வினைத் தொடக்குப் பற்றித் தொடர்ந்து விடாது வரும். இங்ஙனம் வரும் இவ்வுலகச் சார்பை விட வேண்டின், எஞ்ஞான்றும் உயிர்க்கு உண்மைச் சார்பாக நிலைத்துள்ளதாகிய முதற் பொருளை (கடவுளை) அநுபவமாய் உணர்ந்து, அதன் திருக்குறிப்பின் வழி நிற்றல் வேண்டும்; இங்ஙனம் ஒருவன் நின்று ஒழுகின், அவனை மேல்வந்து சார்வனவாயுள்ள வினைகள் சாரமாட்டா என்பது.

## உயிரியல்பு பற்றிய கருத்தொற்றுமை

இப் பாட்டுக்களால் விளங்கும் முடிபுகள் யாவை? 'உயிர்க்கு இரண்டு சார்புகள் அல்லது பற்றுக் கோடுகள் உள்ளன; ஒன்று உலகச் சார்பு; மற்றொன்று கடவுட்

சார்பு. உலகச் சார்பு உள்ளவரை அதுபற்றி வரும் வினைகள் தொடரும்; தொடர்தலின், பிறப்பிறப்புட்பட்டு உழலும் கட்டு நிலை நீங்காது.

இனிக் கடவுளை அனுபவமாய் உணர்வதாகிய மெய்யுணர்வால் கடவுட் சார்பு உளதாகும். உளதாயவழியும், ஒருவன் அறிவு புறத்தே சென்று பொருள்களைப் பற்றின் உலகச் சார்பு மீண்டும் மேம்படும். ஆகலின், அது மேம்படாதிருத்தற் பொருட்டு, அவன், தான் உணர்ந்த முதற்பொருளோடு ஒன்றி நின்று அதன் குறிப்பின் வழி நின்று ஒழுக வேண்டும். ஒழுகின் வினைகள் வந்து சாரா. பிறப் பிறப்புட்படுதலும் இன்றாம்'', என்பவையாம்.

இங்குக் கூறிய இருவகைச் சார்புகளில், உலகச் சார்பு உடையராய், முதற்பொருளை உணராத பெத்த ஆன்மாக்கள் அல்லது உலகர்கள், உலகம் ஒன்றையே உள்பொருளாக அறிவர்; தம்மையும் கடவுளையும் அறியார்; தம்மை உடம்பிற்கு வேறாய் உணர்வுடைப் பொருளென்றும் அறியார். எனவே இக்கட்டு நிலையில் நிகழும் பழக்கம் பற்றி, உலகர், உலகம் ஒன்றே உளது எனக்கொண்டு, கடவுளை இல்பொருள் எனக் கூறுவர். தம் உண்மையினையும் தேறார். இன்னோரின் வேறாக, ஆயினும் இவரே போன்று, தம்மை இவ்வுலகப் பொருள்களின் வேறெனப் பிரித்து உணர்ந்து சென்று, முடிவில் தம்மையே நோக்கி உலகை நோக்காது நிற்கும் ஆன்மநிட்டை நிலையினர், அந்நிலையில் தம்மை முதற்பொருளாக உணர்ந்து உலகைக் காணார்; மேலும் அங்ஙனம் உணரும் தம்மையும் முதற் பொருளின் வேறாகத் தேறார். இவர்கட்கு ஆன்ம நிட்டையில் விளங்கும் விளக்கம் முதற் பொருளின் ஒளியேயாம்; ஆயினும் அவ்வொளி தம்பால் ஒளிரக் காண்டலின், அதனைத் தாமே என உலக முகப்படும்போது சொல்லி, அவ்வுணர்விற் பிறிதொன்றும் விளங்காமையின் அதனை 'ஆத்ம ஞானம்', 'பிரம்ம ஞானம்', 'கைவல்ய ஞானம்', எனக் குறியிட்டு ஆள்வர். இன்னோர் அநுபவத்தின்படி இக் கேவல ஞானத்தில் உலகம் புலப்படுதலின்மையின், இவர் உலகைப் பொய் என்று சாதிப்பர். இவர் தாம் 'யாமே கடவுள்' (அகம் பிரம்மாஸ்மி – நான் பிரமம் ஆகிறேன்) என்னுங் கொள்கையினர்.

*''பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்*
*செம்பொருள் காண்ப(து) அறிவு''*

*''பற்றுக பற்றற்றான் பற்றினை; அப்பற்றைப்*
*பற்றுக பற்று விடற்கு''*

*''சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்*
*சார்தரா சார்தரு நோய்''*

என்னுங் குறள்களை நோக்கின், உலகைப் பொய் என்னும் கருத்தோ, அன்றிக் கடவுளைப் பொய் எனக் கொள்ளும் கொள்கையோ திருவள்ளுவர்க்கு உடன்பாடன்று என்பது துணியப்படும். திருவள்ளுவர் கருத்தின்படி உலகும் உள்பொருளே, கடவுளும் உள் பொருளே; இவற்றை முறையே பிறப்பு நிலையினும், வீட்டு நிலையினும் பற்றி நின்று உணர்ந்து, ஒன்றை யுணரும்போது மற்றையதை உணராது நிற்பதாயுள்ள உயிரும் உள்பொருளே. இவ்வடிப்படை முடிபு சித்தாந்த சைவத்தின் சிறப்பு முடிபாகும். இன்னும் உயிர் தான் தலைப்பட்டுச் சாரும் பொருளைப் பற்றி நிற்பது என்பதும், அதுபற்றி, அது ஒரு பொருளைத் தலைப்பட்டுணரும்போது, தானெனத் தன்னை வேறு உணராது, தான் அப்பொருளேயாய் அப்பொருளை அழுந்தி உணர்ந்து, அப்பொருளின் வண்ணமே தம் வண்ணமாக இயல்வது என்பது சித்தாந்த சைவத்துட் கூறப்படும் உயிரினியல்பு. இங்ஙனம் உயிரின் இயல்பை உய்த்து உணரின் அல்லது உலகமே மெய்யெனக் காணும் உலகர்தம் பழக்கத்தையும், முதற் பொருளே மெய்யென உணரும் ஆன்ம நிட்டையினர் அனுபவத்தினையும் ஒற்றுமைப்படுத்தி உளங்கொள்ளுதல் இயலாது. இவ்வொற்றுமைப்பாட்டு அடிப்படையுணர்வு இன்றெனின் "ஒன்றே பொருளெனின் வேறென்ப; வேறெனின் அன்றென்ப" என்னும் சமயக் கணக்கரின் முரண்பாட்டினைத் தீர்த்தலும் இயலாது. இவ்வடிப்படையுணர்வு திருவள்ளுவர் நூலில் உள்ளதென்பது மேற்காட்டிய பாட்டுக்களில் வந்துள்ள 'பற்று', 'சார்பு' என்னும் சொற்களின் இயல்பாலும்,

> *"நிலத்தியல்பால் நீர்திரிந்து அற்றாகும்; மாந்தர்க்(கு)*
> *இனத்தியல்பது ஆகும் அறிவு"*

(நீர், தான் சேர்ந்த நிலத்தின் இயல்பால், தன் தன்மை அந்நிலத்தின் தன்மையாக நிற்கும்; அதுபோல, மக்கட்கு அறிவு, தாம் சேர்ந்த இனத்தின் இயல்பால், தன் தன்மை அவ்வினத்தின் தன்மையதாக நிகழும்; அஃதாவது) அறிவு, சார்ந்ததன் வண்ணமாமியல்பிற்று என உவமை முகத்தாற் கூறியதனாலும் உய்த்துணரப்படும்.

மெய்ந்நெறி ஆராய்ச்சிக்கண் வரும் பிணக்கைத் தீர்க்குந் திறவுகோலாயுள்ள இவ்வடிப்படை உண்மையை மெய்கண்ட தேவர்,

"இருதிறன் அறிவு உளது இரண்டலா ஆன்மா" என்னும் பொருட் செறிவுள்ள திண்ணிய சொற்றொடரால் கிளந்தோதினமை உளங்கொளற்பாலது. இத்தொடரின் பொதுப் பொருள் முன்னர்க் கூறப்பட்டது;[1] உண்மைப் பொருள் இன்னும் ஆழ்ந்தது. 'இருதிறன்' என்றது 'செம்பொருளும்' அஃதல்லதும் (சத்தும்,

---

1. பக்கம் 39, (அடிக்குறிப்பு)

அசத்தும்) என்னும் இரண்டு வகையினை, என முன்னரே கூறப்பட்டது. 'இருதிறன் அறிவு' என்னுந் தொகைநிலைத் தொடர் மூன்று வேற்றுமைப் பொருள்களில் விரியும். அஃதாவது, (i) இரு திறனையும் அறியும் அறிவு, (ii) இருதிறனாலும் அறியும் அறிவு, (iii) இருதிறனின்கண்ணும் உளதாகிய அறிவு என விரியும். விரிதலின், 'செம்பொருளும் அஃதல்லாத உலகும் என்னும் இவ்விரண்டின் வேறாய ஆன்மா (அ) செம்பொருளல்லவற்றை, செம்பொருளல்ல–வற்றால் அறிந்து அவற்றின்கண் உள்ளதாய் நிகழும் அறிவு உடையது; (ஆ) செம்பொருளை, செம்பொருளால் அறிந்து, அதன்கண் உள்ளதாய் நிகழும் அறிவு உடையது என்பது அத்தொடரின் பொருளாம். இக்கருத்தை நமக்கு நிகழும் பழக்கத்தோடு பொருத்திக் காணுமாறு: நாம் ஒரு பொருளைக் காண்கின்றோம்; இக் காட்சி நம் உடம்பும், அதன்கண் சிறப்பாகக் கண்ணும் இல்லையாயின் உண்டாகாது. இங்ஙனமே உலகத்துப் பொருளெனப்பட்ட யாவும் அவற்றின் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பவற்றால் அறியப்படும்போது, அவ்வறிவு நம் உடம்பும் அதன்கண் உள்ள மெய், வாய், கண், மூக்குச், செவி என்னும் புறக் கருவிகளும், மனமும் என்னும் இவை இருப்பவே உண்டாகிறது. உலகத்துப் பொருள்களெல்லாம் நிலையில் பொருள்கள்; உடம்பும் அதன் புறக்கருவி அகக் கருவிகளும் நிலையில் பொருள்களே. ஆகலின், நிலையில் பொருள்களை உயிர் அறியும் போது, நிலையில் பொருள்களே கருவியாக நின்றுகாட்ட, அறிந்து வருகின்றது என்றது விளங்கும். இனி அறிந்து வருகையில் உயிர் உடம்பின் வேறாகத் தன்னைப் பிரித்துக் காண்பது இல்லை; உடம்பே தான் என நிற்கின்றது. அன்றியும் ஒரு பொருளை அறியும் போது அதன் குணங்களில் ஈடுபட்டு அதனால் இன்பம் அல்லது துன்பம் உழக்குமாயின், அவ்வுழத்தற்கண் அப் பொருள் வேறு தான் வேறு என்பதின்றி அதுவே தானாய் அதில் அழுந்தும். இதுவே உயிர், நிலையில் பொருள்களை நிலையில் பொருள்களால் அறிந்து, அவற்றின்கண் உள்ள அறிவு உடையது என்றதன் கருத்தாம்.

இனி, அவ்வுயிர் முதற் பொருளை உணரும்போதும், அதன் அறிவு முதற்பொருளின் குணமாகிய திருவருளைக் கண்ணாகப் பெற்று, உலகு, உடம்பு என்னும் தொடர்பு சிறிதும் இன்றி, அத் திருவருளே கண்ணாக முதற்பொருளை உணர்ந்து, அதன்கண் அழுந்தும்; அழுந்த, அம் முதற் பொருளின் எண் குணங்களும் உயிர் அறிவின்கண் மேம்பட்டு விளங்கும்; விளங்க, அவ் விளக்கத்தை அழுந்தி யறிதலே பேரின்ப நுகர்ச்சியாகலின், அந்நுகர்ச்சியின் அமர்ந்து, தான் வேறு முதற்பொருள் வேறு என்பதின்றிச் செம்பொருளேதானாய் நிற்கப் பெறும். இப்பேறே வீடு பேறு. இந் நிலைக்கண், உயிர் செம்பொருளைச் செம்பொருளால் (அதன்குணமும், உண்மை இயல்புமாகிய திருவருளால்) அறிந்து,

செம்பொருளின்கண் உள்ளதாய அறிவுடையதாய் நிற்கும். இங்ஙனம் கட்டு, வீடு என்னும் இருவகை நிலையின்கண்ணும் உயிர் முறையே உலகத்துப் பொருளையும், செம்பொருளையும் அழுந்தி யறிந்துவருமாற்றை 'இருதிறன் அறிவுளது' என்னுந் தொடரால் மெய்கண்டதேவர் உணர்த்தியருள்வாராயினர்.

இவ்வடிப்படையுணர்வு, உலகத்தார் தம் பழக்கம் ஒன்றே பற்றிக் கடவுள் இல்லை எனக் கூறும் முடிபினையும், ஆன்மநிட்டையினர் தம் நிட்டையுணர்வு ஒன்றே பற்றி உலகம் பொய் எனக் கூறும் முடிபினையும் ஒற்றமைப்படுத்தி உளங்கொண்டு மூன்றும் உள்பொருளே என்னும் முழு உண்மையினை உணர்தற்கு ஏதுவாதல் காண்க.

இப்பொழுது,

*"வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்கு*
*யாண்டும் இடும்பை யில"*

*"பற்றுக பற்றற்றான் பற்றினை; அப்பற்றைப்*
*பற்றுக பற்று விடற்கு"*

*"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்*
*செம்பொருள் காண்ப(து) அறிவு"*

*"சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்*
*சார்தரா சார்தரு நோய்"*

என்னுங் குறள்களை நோக்கின் திருவள்ளுவர் மேற்கூறிய அடிப்படையுணர்வைத் தாம் வகுத்த ஒழுக்க நெறியின் அடிநிலையாகக் கொண்டவர் என்பது இனிது விளங்கும்.

## அறிவு பற்றிய விளக்கத்தில் கருத்தொற்றுமை

இன்னும், ஒரு பொருட் கொள்கையினர் "பிரஞ்ஞானம் பிரம்ம" (பிரமமாவது அறிவு) என்னும் உபநிடதச் சொல் பற்றி அடிப்படை முடிபொருளைக் (Ultimate reality) கீழ் வருமாறு கொள்வர்: "அறிவாவது உடம்புதோறும் விளங்கும் தொழிற்பாட்டிற்கும், வழக்கிற்கும் மூலமாக உள்ள உணர்வேயாம்; அவ்வுணர்வே ஆன்ம சொரூபம்; அதுவே பரப்பிரமம்; அதுவே முடிந்த உள்பொருள். அதற்கு வேறாய்த் தோன்றுவன வெல்லாம் அவ்வுணர்வை அடியாகக் கொண்டு தோன்றும் வெறுந் தோற்றமாம் அத்தனையே. ஆகலின், அதற்கு வேறாக ஒரு பொருள் உண்டென்றல் பொருந்தாது".

இக் கொள்கையும் திருவள்ளுவர் கருத்தோடு இசைந்ததன்று. திருவள்ளுவர் அறிவை (i) வாலறிவு (தூய அறிவு), (ii) பேதைமை அறிவு (அறியாமையோடு விரவிய அறிவு) என அடிப்படையில் இரண்டு வகைப்படுத்திக் கூறுகின்றார். இவற்றுள் முன்னையது பிற விளக்கம் வேண்டாது, தானே விளங்கியுணரும் இயற்கையுணர்வாகிய முதற்பொருள்; பின்னையது அவ்வாறு தானே உணர மாட்டாது, உடம்பு, உடம்பிலுள்ள அகப்புறக் கருவிகள், உலகப்பொருள்கள், நூல்கள், உணர்த்துவோர் என்னும் இன்னபிற விளக்கங்களின் உதவியால் விளங்கியுணரும் செயற்கை யுணர்வாகிய உயிர்கள். இங்ஙனம் அறிவுடைப் பொருளை இரண்டாக வைத்துக் கூறுதல் ஆசிரியர் கருத்தென்பது எதனாற் பெறுகின்றோம் எனின், சிறப்பாக,

*"கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்*
*நற்றாள் தொழாஅர் எனின்"*

என்னும் பாட்டாற் பெறுகின்றோம். இதன் பொருள்: "எல்லா நூல்களையும் கற்றவர்க்கு அக் கல்வி யறிவால் ஆய பயன் யாது? அவர், தூய உணர்வினை யுடையானது நல்ல தாள்களைத் தொழாராயின், இல்லையாம்" என்பது.

இங்கே 'வால் அறிவு' என்றது தூய்மையான, மாசு அற்ற அறிவு எனப் பொருள்படுதலின், முதல்வனது அறிவு இயற்கைமெய்யுணர்வு என்பது பெறப்படும். இனிக் 'கற்றதனால்' என்றமையின், உயிர்களின் அறிவு மாசு உடையதாய்க் கல்வி முதலிய விளக்கம் பற்றி விளங்கும் செயற்கை யுணர்வு என்பது பெறப்படும். அஃதாவது, முதல்வன் அறிவை வான்மையுடையதெனவே, உயிர்களின் அறிவு வாலாமையினை உடையதென்பதும், மக்களின் அறிவைக் 'கற்றது' எனச் செயற்கையாகக் கூறினமையின், முதல்வனறிவு இயற்கையானது என்பதும் போதரும் எனக் கொண்டபடி. இங்ஙனமாதலின், உதவி பெற்று விளங்கும் அறிவினையுடைய உயிர்கள், உதவியை வேண்டாது தானே இயல்பின் அறிந்து வரும் முதல்வன் உபகாரத்தைப் பெற்றே பயனுறுவன என்பது உய்த்துணரப்படும். படவே, முதல்வன் உபகரிப்பவனும், உயிர்கள் உபகாரத்தைப் பெறுவனவு மாதலின், முதல்வன் தொழப்படுந்தன்மையன், உயிர்கள் தொழுங் கடப்பாடு உடையன என்பது விளங்கும். விளங்க, ஒருவன் கற்ற கல்வி இவ்வுய்த் துணர்வு பற்றி இவ்வடிப்படைக் கடமை யுணர்வைத் தோற்றி, அவனைக் கடவுளைத் தொழுவிக்க வில்லையெனின், அக்கல்வியாற் பயனில்லை என்பது திருவள்ளுவர் திருவுள்ளக் கிடையாதல் உணரப்படும். இவ்வடிப்படையுணர்வைக் குறிப்பிக்கும் கருத்துப் பற்றியே முதற் குறளின்கண் முதல்வனை 'ஆதிபகவன்' என்னும் பெயரால் குறிப்பிட்டார் ஆசிரியர். 'பகவன்' என்னும் சொல் தொழப்படும் (பூசிக்கப்படும்)

பண்புடையானைக் குறிக்கும் என்றல் ஆரிய நிகண்டு நூலார் கருத்து. வியாச பகவான், வான்மீகி பகவான், கிருஷ்ணபகவான் எனத் தொழப்படுந் தன்மையுடைய பலரையும் 'பகவன்' என்னும் சொல்லால் வழங்குபஆகலின், அவரெல்லோரும் அத் தொழப்படுந் தன்மையைப் பெறுதற்கு மூலமாக அத்தன்மையை இயற்கையிலுடையது முதற் பொருளென்பார், 'ஆதிபகவன்' என்றார் என உணர்ந்து கொள்ளப்படும்.

இனி இங்ஙனம் அறிவை இருவகைப்படுத்து 'வாலறிவு', 'கல்வியறிவு' எனக் கூறியது சித்தாந்த சைவத்துட் கொள்ளப்படும் அடிப்படை முடி பொருண்மையோடு முற்றும் இசைவுடையது. என்னை? சித்தாந்த சைவர் (1) தானே எல்லாம் உணர்ந்து உணர்த்தும் பொருளாகிய முதல்வன் (பதி), (2) தானே உணர மாட்டாது, உணர்த்த உணரும் பொருளாகிய உயிர்கள் (பசு) (3) உணர்த்தினாலும் உணரமாட்டாத பொருளாகிய உலகம் (பாசம்) என முப்பொருள் உண்மை கொள்வராகலின், "இனி, '**உணர்த்த உணர்தலின் ஆன்மா உளது**' என்றது 'அவன் அறிந்தாங்கு அறிவன்' என்றறிவிக்க அறிந்து உபதேசியாய் நிற்பது உளதாகலின், அதுவே அவ்வான்மாவாம் என்றது" என்னும் மெய்கண்ட தேவர் வாக்கு, ஈண்டுக் கருதற்பாலது.

## *'தாளை' வணங்குதல்:*
## *குறிப்புப் பொருண்மை விளக்கம்*

இனி, திருக்குறள் மெய்ந்நெறியினைக் குறிப்பாகக் கொண்டு விளக்குவதென்பது எல்லோர்க்கும் உடன்பாடாதலின், அக் குறிப்புப் பொருண்மை ஆராய்தற்கு உரியது. இவ்வாராய்ச்சிக்கு இடமாவது முதலதிகாரமாகிய கடவுள் வாழ்த்தாம். **கடவுள் வாழ்த்துத்** தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனார் திருவுள்ளத் தெழுந்த ஞான வல்லியின் முகமெனத் தகும்; **மெய்யுணர்தல்** அத் திருமகளின் அகமாகும். அகத்து நிகழும் குறிப்புக்களை முகம் புலப்படுக்கும் அன்றே!

"*கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்*
*தாளை வணங்காத் தலை*"

என்னும் பாட்டினை நோக்குவோம்: தமிழ் வழக்கின்படி ஒருவன் தன் வாழ்க்கையின் பயனாக எய்த வேண்டுவது கற்றுணர்ந்தடங்கலே யன்றோ! அதனையே திருவள்ளுவர், அதன் ஆழ்ந்த அடிநிலைக்கருத்தில், இப்பாட்டின்கண் '**எண்குணத்தான் தாளை வணங்காத் தலை குணமில**' எனக் கூறுகின்றார். சைவ சித்தாந்தத்தின் படி, இவ்வடக்கமாவது முதல்வன் திருவடி எனப்படும்

திருவருளை உணர்ந்து, அதன்கீழ் அடங்கி நிற்றல் ஆம். வீடுபேறாவதும் இதுவே. இக் கருத்துப்பற்றியே அதனுட் கூறப்படும் வீட்டுநிலை (பரமுத்திநிலை) **அடிசேர்முத்தி** அல்லது **அருள்சேர் முத்தி** எனக் கூறப்படுகின்றது. ஆகலின், ஈண்டுத் திருவள்ளுவரால் தாளை வணங்கல் எனக் குறிப்பிக்கப் பட்டது, சைவசித்தாந்தத்துட் கூறப்படும் முத்தி நிலையே யாம். இத் தொடர் அதனைக் குறிப்பதாதலை இன்னும் சிறிது ஆழ்ந்து காண்பாம்.

'தாள்' என்பது இறைவனது தூய மெய்யுணர்வும், தடைபடாப் பேராற்றலும் என இருவகைப்பட நிகழும் **திருவருளைக்** குறிக்கும். 'தலை' என்பது உயிரின் அறிவாற்றல், தொழிலாற்றல்களைக் குறிக்கும். ஒருவன் அறிவுக்கும் செயலுக்கும் வாயிலாக உள்ள இருவகை நரம்புகளின் முதல்கள் (Sensory and motor centres) தலையையே இடமாகவுடையவாதல் நினைத்தற்குரியது. இங்ஙனங் குறியிட்டாளுதல் சித்தாந்த சைவ மரபு.

இதனைக்

*''காலுந் தலையும் அறியார் கலதிகள்;*
*கால் அந்தச் சத்தி; அருளென்ப காரணம்*
*பாலொன்று ஞானமே; பண்பார் தலை உயிர்;*
*கால் அந்த ஞானத்தைக் காட்ட வீடாமே''*

என்னுந் திருமந்திரத்தான் உணர்க. இன்னும்,

சிவஞானபோத மங்கல வாழ்த்துள், ''பொல்லார் இணைமலர் நல்லார் புனைவரே'' என்பதற்குச் சிவஞான சுவாமிகள் ''பொல்லாத பிள்ளையாருடைய ஞானசக்தி, கிரியாசத்தி என்னும் இரண்டு திருவடித்தாமரைகளை, கேட்டுச் சிந்தித்துத் தெளிந்த மெய்யன்பர், தம்முடைய ஞானசக்தி கிரியாசத்திகட்கு வியாபகமாகக் கொண்டு 'தாடலை' போல் அடங்கிநிற்பர்'' என உரைவகுத்தருளினமையும்,

திருமுருகாற்றுப்படையில் வரும் 'சேவடிபடரும் செம்மல் உள்ளமொடு' என்பதனுரைக்கண், ஆசிரியர் நச்சினார்க்கினியர்,

''திருவடியே வீடாயிருக்கும் என்றார்; அது 'தென்னன் பெருந்துறையான் – காட்டா தனவெல்லாங் காட்டிச் சிவங் காட்டித் – தாட்டாமரை காட்டித் தன்கருணைத் தேன்காட்டி'*என்பதனாலும், பிறரும் திருவடியைக்

---

* திருவாசகம், திருவம்மானை – 4.

கூறுமாற்றானும் உணர்க" என உரைத்தமையும் இவ்வாராய்ச்சிக்கண் குறிக்கொளத்தக்கவையாம்.

இனி, 'தாளை வணங்காத் தலை **குணமிலதே**' என ஒருமை முடிபாற் கூறவே அமைவதாகவும், அங்ஙனம் கூறாது, 'குணம் **இலவே**' எனப் பன்மை முடிபாற் கூறிய திருவள்ளுவர் திருக்குறிப்பு உணர்தற்கு உரியது. எல்லாம் அறிந்து அறிவித்து வரும் முதல்வன் **ஒருவனே** என்பதும், அவன்றன் திருவருளைப் பெறும் உரிமையுள்ள உயிர்கள் **எண்ணிறந்தன** என்பதும் உணர்த்துதல் அவர் கருத்து. இக் கருத்துப் பற்றியே முதல்வனை '**எண்குணத்தான்**' என ஒருமைச் சொல்லாற் குறித்து, உயிரைக் குறிக்கும் தலை என்னும் பால் விளங்கா அஃறிணைப் பெயரைக் '**குணமிலவே**' எனப் பன்மை முடிபு கொடுத்துப் பன்மையாகக் கொள்ள வைத்தருளினார் என உணர்க. இது இறைவனை ஒருவன் (ஏகன்) எனவும், உயிரை '**அநேகன்**' எனவும் வழங்கும் சிவ நெறி வழக்கிற்கு இயைந்து நிற்றல் காண்க.

வீட்டுநிலைக்கண் உயிரின்மாட்டு மேம்பட்டு விளங்கிப் பேரின்பமாய் விளைவன இறைவனது எண்வகைப்பட்ட குணங்கள் என்பதும், உயிர் அந்நிலைக்கண் **யான் எனது** என்னுஞ் செருக்கற்று, அவன் திருவடி எனப்படும் திருவருளில் அடங்கி நிற்ப, அதனால் இறைவனது எண்வகைப் பட்ட குணங்கள் தன்மாட்டு மேம்பட்டு விளங்க, அவ் விளக்கத்தை அதுவாய் அழுந்தி நின்றறிதலாகிய அறிதல் விசேடமே பேரின்ப நுகர்ச்சியாம் என்பதும் சைவ நூற்றுணிபாம்; திருவள்ளுவர் இப் பாட்டில் முதல்வனை **எண்குணத்தான்** எனவும், உவமையைக் **கோளில் பொறியின்***எனவும் கூறியருளினமை இத் துணிபு தோற்றுவதாதல் குறிக் கொளற்பாலது.

## *இன்ப நுகர்ச்சி – மெய்ப்பொருள் விளக்கம்*

இக் கருத்து இனிது விளங்குதற் பொருட்டுச் சைவ சித்தாந்தத்துட் கூறப்படும் உலகவின்ப வீட்டின் நுகர்ச்சிகளது இயல்பு இங்குத் தந்துரைக்கப்படும்: உலக நுகர்வாவது உலகப் பொருள்களின் குணங்கள் நம் அறிவில் தட்ட, நம் அறிவு அவற்றை அறிந்து அழுந்துதலினால் உண்டாகும் இன்பம், துன்பம், மயக்கம் என்னுந் தன் வேதனையே யாம். இந் நுகர்வு நமக்குப் பொருடோறும்

* 'தம்தம் புலன்களை (பொருள்களை)க் கொள்ளாத (அறியாத) பொறிகளைப் போல' என்பது கருத்து. கோள் – கொள்ளுதல்.

உண்டாகுமாற்றை நம் நாட்டு மன நூன்முறை (Psychology) வாயிற் காட்சி, மனக் காட்சி, தன் வேதனைக் காட்சி (நுகர்ச்சி) என மூவகைப்படுத்து விளக்கி உளங்கொளச் செய்யும். அவற்றுள், **வாயிற்காட்சி** யாவது நமக்கு வேறாகப் புறத்தே உள்ள ஒரு பொருளின் தன்மை, அஃதாவது குணம், மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் வாயில்களுள் யாதானும் ஒன்றையுற அவ்வூற்றினை நம் அறிவு, மனத்தால் அறிந்து, அதற்குக் காரணமாய பொருளை 'இஃதொன்று தோன்றாநின்றது' என அதன் உண்மையளவிற் சுட்டுதலாம். இக் காட்சிபற்றி நமக்கு உளதாகும் உணர்வு பொதுவுணர்வாம். இக் காட்சியின் பின், காணப்பட்ட பொருளின் சிறப்புணர்வு நிகழ்தற்கு முன், நம் உள்ளத்தே நிகழும் தொழிற்பாடுகள் சிலவுள்ளன. அவை, 'இது யாதாகற் பாலது?' என உன்னுதலும் (சிந்தித்தல்), 'இன்னதாகற் பாலது, இன்னதாகற் பாலது' எனப் பலதலைப்பட நினைந்து ஐயுறுதலும் (சங்கற்ப விகற்பம்), 'இதனை இன்னதெனத் துணிவேன்' என நிகழும் எழுச்சியும் (அகங்கரித்தல்) ஆம். இவை இம் முறையே ஒன்றன்பின் ஒன்றாய்க் காரண காரியமாய் நிகழ்ந்த பின், 'இஃது இன்னது' எனத் தெளியும் துணிபுணர்வு அல்லது சிறப்புணர்வு பிறக்கும். இங்ஙனம் உள்ளத்தே தோன்றும் நிகழ்ச்சி காரணமாக எதிர்ப்பட்ட பொருளை 'இஃது இன்னது' எனச் சிறப்பாகக் காணுங் காட்சியே மனக்காட்சி எனப்படும். இதன் பின் நிகழ்வது 'தன் வேதனை' எனப்படும் நுகர்ச்சி. அதன் இயல்பை மேலே காண்பாம்.

நம் அறிவில் தட்டும் பொருள்களின் தன்மை, தட்டும் போது சால்பு (அமைதி), எழுச்சி, மயல் (கலங்கிய நிலை) என்னும் முக்குணங்களுள் ஒன்றாக அமையும்; ஆகலின், அவற்றுள் ஒன்று மேற்பட்டு நிற்கும் பொருளை மேற்கூறியவாறு வாயிற்காட்சி, மனக்காட்சி என்பவற்றால் பொதுவாகவும், சிறப்பாகவும் உணர்ந்த உள்ளம் (புத்தி) அக் குணவடிவாக மாறுதல் அடைந்து நிற்கும். அம் மாற்றம் அடைந்த புத்தியை நம் அறிவு அழுந்தி நின்றறிவதே நுகர்ச்சி அல்லது 'தன் வேதனை'யாகும். சால்பு குணம், மேற்பட்டுத் தோன்றும் பொருளை மேற்கூறிய முறையால் துணிந்துணர்ந்து மாற்றம் எய்திய புத்தியை நம்மறிவு அழுந்தியறியின், அக் குணம் நம்மறிவின்மாட்டு மேற்பட்டு விளங்கும்; அவ்விளக்கமே உலக வின்பமாம்; அதனை அதுவாய் அழுந்தி யறிதலே இன்ப நுகர்ச்சியாம். இப்படியே, எழுச்சிக்குணம் மேற்பட்டுத் தோன்றும் பொருளை அழுந்தியறிகையில் துன்ப நுகர்ச்சியும், மயற்குணம் மேற்பட்டுத் தோன்றும் பொருளை அழுந்தி யறிகையில் மயக்க நுகர்ச்சியும் உளவாகும். அநுபவித்தல் எனினும் அழுந்தி அறிதல் எனினும் ஒக்கும்.

இங்ஙனம், உலக நுகர்ச்சிக்கண் உயிர் அறிவு, தனக்கு வேறாகிய மனத்தை (புத்தியை)ச் சார்ந்து, அதனால் சிறப்பாக உணரப்படும் அவ்வப் பொருளின்

தன்மையேயாய் நின்று தன் வேதனையுறும் எனக் கோடல் ஆசிரியர் திருவள்ளுவர்க்குக் கருத்தாதல், அவர்,

*"மனத்து ளதுபோலக் காட்டி ஒருவற்கு*
*இனத்துள தாகும் அறிவு"*

என்றமைபற்றியும்,

*"நிலத்தியல்பால் நீர்திரிந்து அற்றாகும் மாந்தர்க்(கு)*
*இனத்தியல்ப(து) ஆகும் அறிவு"*

என்றமைபற்றியும் உய்த்துணரப்படும்.

சால்பாகிய குணத்தினைச் சாத்துவிகம் எனவும், எழுச்சியை இராசதம் எனவும், மயலைத் தாமதம் எனவும் வட நூலார் வழங்குவர். மணிமேகலையில் பவத்திற மறுகெனப் பாவை நோற்ற காதையில் பன்னிறு நிதானங்கள் அல்லது இயல்பு ஈராறு எனக் கூறப்படுமவற்றுள் ஊறு, நுகர்வு என்பவை முறையே மேற்கூறிய வாயிற்காட்சியும், தன் வேதனைக் காட்சியு மாதல் காண்க.

இவ்வாராய்ச்சியால், நுகர்ச்சி (அநுபவம்) யாவது அதுவதுவாய் அழுந்தி நின்றறியும் அறிதல் விசேடமேயாம் என்பதும், உயிரின் வேறாகிய உலகப் பொருள்களின் கண்ணதாகிய சால்பு குணம் (சாத்துவிகம்) உயிரின்மாட்டு மேற்பட்டு விளங்கும் விளக்கமே உலக வின்பம் ஆம் என்பதும் போதரும். இவ்வாறே, உயிரின் வேறாய் இறைவன்கண்ணே உளவாகிய எண்வகைக் குணங்களும் உயிரின்மாட்டு மேம்பட்டு விளங்கும் விளக்கமே சிவாநந்தவின்பம் எனப்படும் பேரின்பமாம் என்பதும், உயிர் அதுவாய் அழுந்தி நின்று அவ் விளக்கத்தை அறிதலே பேரின்ப நுகர்ச்சியாம் என்பதும் சைவ நூற்றுணிபாம். இத் துணிபு சைவ நூல் பற்றியே உணரப்படுவதாயினும், இது மனநூன் முடிபு, உலகப்பழக்கம், திருவள்ளுவர் வாய்மொழி, பொருந்துமாறு என்னும் இவை எல்லாவற்றிற்கும் ஒப்பக் கிடைக்கும் முடிநிலை முடிபாதல் கருதத்தக்கது.

மேலே எடுத்துக்கொண்ட குறள்வெண்பா வீட்டின்ப நுகர்ச்சியை உலகப் பொருள் நுகர்ச்சியோடு ஒப்பித்து உண்மை தெருட்டுவதாதல் காண்க. ஆசிரியர் திருவள்ளுவர் முதல்வனது எண் குணங்களைக் கொண்டின்புறுதற்குரிய உயிர்களைத் தம் தம் புலன்களைக் கோடற்குரிய பொறிகளோடு ஒப்பித்து, அவை அவற்றைக் கொள்ளாவழிக் குணமில (பயனில) என்றமையும், பொருளினும் உவமையினும் முறையே வரும் வணக்கமும், கோளும் அழுந்தியறிதல் என்னும் பொருள் மேலனவாதலும் கருதியுணரத்தக்கன. இதனால் இப் பாட்டுச் சிவநெறியின் முடிநிலை முடிபுணர்த்துவதாதல் காண்க.

## கடவுள் வாழ்த்தில் கருத்தொற்றுமை

இனிக் கடவுள் வாழ்த்துள் வரும் பத்துப் பாட்டுக்களுள், முதற்பாட்டுக் கடவுள் உண்மைக்குக் கருதலளவை கூறுவதாகவும், ஐந்து ஆறாம் பாட்டுக்கள் இறைவன் பொருள் சேர்புகழ் புரிதலையும் அவனது பொய்தீர் ஒழுக்க நெறி நிற்றலையும் விதிப்பனவாகவும் உள்ளன. எஞ்சிய ஏழு பாட்டுக்களும் நற்றாள் தொழல், மாணடி சேர்தல், அடி சேர்தல், தாள் சேர்தல், தாளை வணங்கல் என இறைவன் திருவடிச் சார்பையே குறித்தல் கருதத்தக்கது. இதுவும் திருக்குறள் சைவசித்தாந்தத்தின்கண் உய்க்கும் நோக்குடையது என்னும் மேற்கோளை வலியுறுத்தும்.

இனி, இறைவனுக்குச் செலுத்தும் வணக்கத்தினை அவன் திருவடிக்குச் செலுத்துவதாகக் கூறும் மரபு எல்லாச் சமயத்தாரிடத்தும் காணப்படுவதேயாயினும், அதன் உட்கிடையை ஆய்ந்து உணர்ந்து பொருள் சேர்ந்த முடிபு கூறிவருபவர் சித்தாந்த சைவரேயாதல் உளங்கொளற்கு உரியது.

நாம் ஒரு கல்லை மேலே செல்லும்படி எறிந்தால், அது முன்னர் மிக விரைவாக மேலேறி, படிப்படியாகத் தன் விரைவு குறையப்பெற்று ஓரளவு உயரத்திற்கு மேல் செல்லமாட்டாதாய் நின்று, பின் நிலத்தை நோக்கி மீண்டு, படிப்படியாகத் தன் விரைவு மிகப்பெற்று இறங்கி, நிலத்தில் விழுவது பண்டு தொட்டு யாவரும் கண்டுவரும் காட்சி. ஆயினும், இதன் காரணத்தை உய்த்துணர்ந்து நிலவுருண்டைக்கு 'ஈர்ப்பு ஆற்றல்' (Gravitational Force) உண்டெனத் துணிந்து, அது தொழிற்படுமாறும், அதனை அளக்குமாறும் உணர்ந்து வகுத்து உணர்த்தியவர் நியூட்டன் என்னும் பொருட் பெற்றியியல் ஆசிரியரே யன்றோ! அது போல நம் அறிவினைக் கடந்து நிற்றல்பற்றிக் கடவுள் என முடித்துக் கூறப்பட்ட முதற் பொருள் யாண்டும் நம் அறிவினைக் கடந்ததே எனவும், நம்மறிவு பற்றற்று மெய்யுணர்ந்து அப்பொருளைத் தலைப்பட்டுணரும் வீட்டு நிலையினும், அஃது அதனை அளந்தறிய மாட்டாதாய், அதன் குணமாகிய திருவருளையே தலைப்படும் எனவும், அத் திருவருள்தான் எல்லாம் அறிந்தாங்கு அறியும் அறிவாற்றலும், எல்லாம் இயற்றவல்ல தொழிலாற்றலும் என இருவகைப்பட உணரப்படுதலின், அவற்றை முறையே வலத்திருவடி, இடத்திருவடி என வழங்குவது மரபு எனவும், மாசறு காட்சியாற் கண்டுணர்ந்து, வகுத்துணர்த்திய சான்றோர்கள் சித்தாந்த நெறித்தலைவர்களே யாதல் உன்னுதற்கு உரியது.

*"கடல் அலைத்தே ஆடுதற்குக் கைவந்து நின்றும்*
*கடல்அளக்க வாராதாற் போலப் – படியில்*
*அருத்திசெய்த அன்பரைவந் தாண்டதுவும் எல்லாம்*
*கருத்துக்குச் சேயனாய்க் காண்"*

என்னும் திருக்களிற்றுப்படியும்,

*“நின்னளந் தறிதல் மன்னுயிர்க் கருமையின்*
*நின்னடி யுள்ளி வந்தனென் நின்னொடு*
*புரைகுநர் இல்லாப் புலமையோய்”*

என்னுந் திருமுருகாற்றுப்படை அடிகளும் ஈண்டுக் கருத்திற் கொள்ளத்தக்கவை. இக் கருத்துப்பற்றி நோக்கின், இறைவன் திருவடியே உயிர்கள் அடைதற்குரிய சிறந்தபேறும், அப் பேற்றுக்கு வாயிலுமாதல் உணரப்படும். “அவன் அருளாலே அவன்றாள் வணங்கி” என்னும் திருவாசகமும் இக் கருத்துப் பற்றியதே யாதல் காண்க.

இனி, கடவுள் வாழ்த்துள், “கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன் – நற்றாள் தொழாஅர் எனின்”, என்பதனாலும் “கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான், தாளை வணங்காத்தலை” என்பதனாலும் “இறைவன் தாள் தொழலை முடிந்த பேறாகவும்”, “பிறவிப் பெருங்கடல் நீந்துவர்; நீந்தார் – இறைவன் அடிசேரா தார்” என்றாற் போல்வனவற்றால் அடிசேர்தலை முடிந்தபேற்றிற்கு வாயிலாகவும் வைத்துக் கூறுதல் பகுத்து உணர்ந்து கோடற்கு உரியது. இதனால் அடிசேர்தல், தாள் தொழல் என்னும் ஆட்சி சித்தாந்த சைவர்க்கே பொருண்மை யுடையவாதலும் ஏனையர்க்குப் போலியாதலும் விளங்கும்.

“வழிபாடு” என்னுஞ் சொற்குப் பொருள் “பின்னிற்றல்” என்பதாம்; அது பிற்றைநிலை என வழிபாட்டினைக் குறித்தல் பற்றியும் உணரப்படும். இக் கருத்துப் பற்றி நோக்கின், கடவுள் வழிபாடாவது இரு திறப்படும் என்பது விளங்கும். ஒன்று, இறைவனது அருளாணையாகிய ஒழுக்க நெறிபற்றி ஒழுகும் பொது வொழுக்கம்; மற்றொன்று, அவன்றன் உண்மையாம் பெரிய நல்லருட் குணங்களை வாழ்த்தியும், நினைந்தும், அவை நம்பால் மேம்பட்டு விளங்கும்படி ஒழுகும் சிறப்பொழுக்கம். இவற்றுள் பொதுவொழுக்கம்,

*“பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க*
*நெறிநின்றார் நீடுவாழ் வார்”*

என்பதனாலும், சிறப்பொழுக்கம்,

*“இருள்சேர் இருவினையுஞ் சேரா இறைவன்*
*பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு”*

என்பதனாலும் பிறவற்றாலும் குறிக்கப்பட்டன. சைவ நூல் வழக்கில்

பொதுவொழுக்கம் பொதுவாக அறம் (பசு, பாச நல் வினைகள்) எனவும், சிறப்பொழுக்கம் கடவுள் நல்லறம் (பதி நல்வினை அல்லது சிவபுண்ணியம்) எனவும் குறிக்கப்படும். இவற்றுள் பொதுவறம் திருவருளை நினைந்து அடிவழிநிலையாய் இயற்றப்படாமல், 'யான் செய்கின்றேன்' என்னும் முனைப்புணர்வு நீங்காமையே இயற்றப்படுவதாகலின், அது நல்வினை எனப்படினும், தீவினையோடொப்பப் பிறவிக்குக் காரணமாய் உள்ள தென்பதும், அதற்குத் தீவினையோடு உள்ள வேறுபாடாவது பொன் விலங்கிற்கு இருப்பு விலங்கோடு உள்ள வேறுபாடு போல்வதேயாம் என்பதும் சைவநூற்றுணிபு. இத் துணிபும் "இருள்சேர் இருவினையும் சேரா" என்றமை பற்றி உணரப்படும்.

இதன்கண் இருவினையும் சேரா என நல்வினையும் தீவினையோடு ஒப்ப வைத்து வேண்டாததாகக் கூறப்படுதலும், அங்ஙனம் அவை வேண்டாதனவாதற்குக் காரணம் அவை அகவிருள் காரணமாக நிகழ்வதே என உணரும்படி 'இருள்சேர்' என்னும் கருத்துடை அடைபுணர்க்கப்பட்டமையும் குறிக்கொண்டு உணரத்தக்கவையாகும்.

இன்னும், உயிர் தன்னைத் தோற்றமில் காலமாய்த் தொடர்ந்து பற்றிவரும் 'யான் எனது என்னுஞ் செருக்கு' அறுத்தற்குரிய செவ்வியாவது 'இருவினையொப்பு' எனவும், அஃதாவது நல்வினை தீவினை என்பவற்றின் பயன்கள் தன் அறிவில் வேறுபடத் தோன்றாமல் ஒப்பத் தோன்றல் ஆம் எனவும், அவ் வொப்பை எய்துவிப்பது கடவுள் நல்லறமேயாம் எனவும் சைவ நூல்கள் முடித்துக் கூறும். இம் முடிபும் 'இறைவன் பொருள்சேர் புகழ்புரிந்தார்மாட்டு இருவினையும் சேரா' என்றமைபற்றியே பெறப்படும். மேலும் இறைவன் புகழ் பொருள் சேர் புகழ் எனப்பட்டமையால் இறைவனுக்கு அருட் குணங்களும், அருட் செயல்களும் உள்ளன என்பதும், அவற்றை எடுத்தோதி வாழ்த்தலும் நினைத்தலுமே புகழ் புரிதல் ஆம் என்பதும் விளங்கும்! விளங்கவே, ஆசிரியர் தோத்திரம் விதித்தார் ஆயிற்று! அன்றியும், 'ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்கநெறி நின்றார்' என்பதனால் சாத்திரங் கூறப்பட்டது. சாத்திரம் என்னும் சொல் சாசனம்– ஆணை, ஒழுங்கு – என்னும் அடியிற்றோன்றியதாகலின், அச்சொற்குப் பொருள் இறைவனது ஆணையாகிய விதி விலக்குத் தெரிக்கும் நூல் என்பதாம்; தோத்திரம் இறைவனுக்கு உள்ளனவாய பண்புகளைச் சொல்லித் துதித்தல் அல்லது வழுத்துதல். இங்ஙனம் கடவுள் வழிபாட்டினை மேற்கொள்வார்க்கு உரிய சாத்திரம், தோத்திரம் என்னும் இரண்டற்கும் மூலம் கடவுளே யாதலை அப்ப மூர்த்திகள் "தோத்திரமும் சாத்திரமும் ஆனார் தாமே. . . செல்லும் நெறிகாட்ட வல்லார் தாமே, திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே" என விளக்கியருளினமை காண்க.

இங்ஙனம் கடவுள்வாழ்த்தில் உள்ள சொல்லமைப்பு, பொருளமைப்பு என்பவற்றாற் பெறப்படும் அரிய நுண்ணிய கருத்துக்களையும், அவையாவும் சைவசித்தாந்துத்துக் கொள்ளப்படும் முடிபுகளே யாமாற்றையும் மேலும் விளக்கப்புகின் மிக விரியும்; ஆகலின், அவற்றைக் கூறிய கொண்டு உய்த்துணர்ந்து கொள்ளுமாறு விடுத்து, இவ்வாராய்ச்சி இவ்வளவில் நிறுத்தப்படுகின்றது.

திருக்குறள் மறையாகலின் அதன் உண்ணின்று அகலும் உரை மிகவிரிதல் வியப்பன்று. இதனைக் காணலுறுவோர் கருதி யுணரத்தக்க உண்மை ஒன்று உளது; அது திருக்குறளின் சொல்லும், பொருளும், வாய்பாடுகளும் மணிமேகலை, சிந்தாமணி போலும் நூல்களிற் காணப்படுகையில், அவை ஆண்டு வாய்பாட்டு அளவில் கூறப்பட்டு, உயிரற்ற உடம்பிற்குச் செய்த பூச்சும், உடையும், அணியும் போலப் பயனற்று வாளாகிடத்தலும், மற்று அவைதாமே சித்தாந்த நெறித் தலைவர்களால் தம் அருணூல்களுள் அவற்றின் நுட்பமும் மாண்பும் விளங்க அமைக்கப்பெறும் இடங்களில் சுற்றுவல்ல கணவனைக் காதல் மணம்புணரும் கற்பரசியின் வதுவைக் கோலமாய் அழகும், இன்பமும், உணர்வும் பயப்பனவாய்ச் சிறந்து விளங்குதலுமாய வேறுபாடேயாம். இது நுண்ணுணர்வாற் கண்டுகொள்ளத் தக்கது.

திருக்குறளின் முகமாகிய கடவுள் வாழ்த்தினை இங்குக் காட்டியவாறு நல்லாற்றான் நாடியுணரின், அதன் குறிப்புச் சைவசித்தாந்தச் செந்நெறியின் மேலதே யாதல் இனிது விளங்கும். ஆகலின், அது மெய்ந்நெயினைப் பொது வாய்பாடுகளால் உணர்த்துதல் பற்றி அல்லது திருமுறைகள், மெய்கண்ட நூல்கள் என்றின்னவற்றில் வரும் மரபுச் சொற்களால் உணர்த்தாமை பற்றித் திருவருட்பேறுடையார் அதன் முடிநிலை முடிபுபற்றி ஐயமோ மருட்கையோ கொள்ளார்.

*"ஏதிலார்போலப் பொதுநோக்கு நோக்குதல்*
*காதலர் கண்ணே யுள"*

எனவும்,

*"கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்*
*என்ன பயனும் இல"*

எனவும் குறிப்பு அறியுமாற்றை வகுத்துரைத்தவர் திருவள்ளுவரேயன்றோ! ஆகலின், அதனை அவர்தம் நூல் மேலேற்றி அதன் உட்கிடையைத் தெளிதல் அவர்க்கு ஒத்த கருத்தேயாம் என்க.

இனி, திருக்குறள் அறத்துப்பாலில் பாயிரமாக வைக்கப்பட்டுள்ள கடவுள் வாழ்த்து முதலிய நான்கு அதிகாரங்களுள் முதல் மூன்று அதிகாரங்களைத் திருவள்ளுவர் இயற்றியவையல்ல எனக்கூறி, அவற்றை இடைக்காலப் பாயிரம் எனப் பதித்த நாட்டுத் தொண்டரும் உளர். அவர் அங்ஙனம் கொள்ளுதற்குத் தக்க காரணம் ஒன்றையேனும் எடுத்துக் காட்டினாரில்லை. கடவுள் வாழ்த்துள் வரும் சில கருத்துக்கள் மெய்யுணர்தலில் வரும் கருத்துக்களோடு மாறுபடுகின்றன என்பது போலப் பொதுவாக, இன்னதென விளங்காவண்ணம் சில கூறினர். அவர் கொள்கை,

"*வீடொன்றும் பாயிரம் நான்கு . . .*"[1]

எனவும்,

"*பாயிர நான்கு இல் லறமிருபான் பன்மூன்றே*
*தூய துறவறம்ஒன் றூழாக – ஆய*
*அறத்துப்பால் நால்வகையா ஆய்ந்துரைத்தார் நூலின்*
*திறத்துப்பால் வள்ளுவனார் தேர்ந்து*"[2]

எனவும்,

"*ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்*
*பாயிரத்தி னோடு பகர்ந்ததற்பின் – போயொருத்தர்*
*வாய்கேட்க நூலுள்வோ*"[3]

எனவும் வரும் இன்னோரன்ன சான்றோர் செய்யுட்களோடும், உரையாசிரியர்கள் எல்லோரும் ஒப்புக் கொண்ட முடிபோடும் மரபோடும் முரணுதலின், அதனை அறிஞர் கொள்ளார் என்க. தொல்காப்பிய உரையாசிரியர்கள், இலக்கண ஆராய்ச்சி நூலாசிரியர்கள், மணிமேகலை, சிந்தாமணி, பெரியபுராணம், கம்பராமாயணம், யசோதர காவியம், சூளாமணி முதலிய காவிய ஆசிரியர்கள் என்றின்ன சான்றோர்களெல்லோரும் முதன் மூன்று அதிகாரங்களுள் வரும் பாட்டுக்களைத் திருவள்ளுவர் வாய்மொழியெனவே கொண்டு எடுத்துக்காட்டாகவும், மேற்கோளாகவும் ஆண்டுள்ளமை கருதத்தக்கது.

## மெய்யுணர்வு பற்றிய கருத்துக்களில் ஒற்றுமை

இனி மெய்யுணர்தல் அதிகாரத்துப் பெறப்படும் உண்மைகளை ஆராயப்

1. திருவள்ளுவமாலை, 20.
2. மேலது, 25.
3. மேலது, 16

புகுவோம். மேலே திருவள்ளுவர் வெளிப்படக் கிளந்தோதியவற்றைக் கொண்டே அவர் கூறிய மெய்ந்நெறி சைவசித்தாந்தத்தின் அடிநிலையேயாம் என்பதும், அதன்கண் சங்கரர் முதலாயினார் கூறும் ஒரு பொருட் கொள்கையாகிய மாயா வாதம், கடவுளில் கொள்கை முதலியவற்றிற்குச் சிறிதும் இடமின்று என்பதும் கண்டோம். ஈண்டு இதுகாறும் செய்து போந்த குறிப்புப் பொருளாராய்ச்சியாலும் அம் முடிபே வலியுறுவதாகின்றது.

ஆயினும், இக்காலத்து ஒருபொருட் கொள்கை (ஏகான்மவாதம்) யினர் சிலர் கீழ்க்காணும் வகை சில குறட்பாக்களை எடுத்துக்கொண்டு தமக்கு வேண்டியவாறு உரைப்பர்:

''*தன்னுயிர் தானறப் பெற்றானை ஏனைய*
*மன்னுயிர் எல்லாம் தொழும்*''

என்னும் பாட்டுத் 'தவம்' என்னும் அதிகாரத்தின்பாற் பட்டது. இதற்குத் ''தன்னைச் சச்சிதானந்த ரூபப் பரப்பிரமமாகச் சிறிதும் ஐயமின்றி உணர்தலாகிய ஆத்ம ஞானம் பெற்றவனை, அதனைப் பெறாத ஏனைய உயிர்களெல்லாந் தொழும்'' எனப் பொருள் கூறுவர்;

''*பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும்*
*மருளானாம் மாணாப் பிறப்பு*''

என்னும் பாட்டிற்குப் 'பொய்யாகிய உலகத்தை மெய்யெனக் காணுதற்குக் காரணமாகிய அவிச்சையினால் துன்பத்தையுடைய பிறப்பு உளதாகும்' எனவும்,

''*எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்*
*மெய்ப்பொருள் காண்ப தறிவு*'',

என்பதற்குப் ''பெயரும் உருவும் என்னும் கற்பனையால் எப்பொருள் எத்தன்மைத்தாய்த் தோன்றினும், அதன்கண் சத்தாதலும் (உண்மை), சித்தாதலும் (விளக்கம்) இன்பமாதலும் ஆகிய அடிநிலை உண்மையின், அவ்வடி நிலையாகிய பரப்பிரமமாக அதனைக் காண்டலே மெய்யுணர்வாம்'' எனவும் உரை கூறுவர். இவையிரண்டும் 'மெய்யுணர்தல்' என்னும் அதிகாரத்தின்பாற்பட்டவை. இவ்வுரைகளைச் சிறிது ஆராய்வோம்.

இங்கு நாம் நினைவில் இருத்த வேண்டிய கருத்து ஒன்று உண்டு. திருக்குறள் போன்ற நூல்களில் வரும் பாட்டுக்களைத் தனித் தனிக் காணும்போது, அவை பொருளாலும் போலியாலும் சொல்லுவார் சொல்லும் உரையெல்லாம் அடங்கக் கொண்டு பொதுப்பட நிற்கும்; அவற்றை அவ்வவற்றின் அதிகாரப்

பொருண்மையோடும், முன்னும் பின்னும் வரும் பாட்டுக்களின் பொருண்மையோடும் பொருந்தவைத்துப் பொருள் காணும் போது தான், அவை இன்றியமையாத, துளக்கலாகாத, தம் உட்பொருளைத் தோற்றுவிக்கும் என்பது.

இங்கு ஒருபொருட் கொள்கையினர் கூறுவன எனக் காட்டிய உரை முடிபுகள் எல்லாம் மேலே ஐயமின்றித் தெளியப்பட்ட நூன் முடிபுகளோடு மாறுபடுவனவாதல் வெளிப்படை. ஆகலின், இவ்வாறு உரைப்பன எல்லாம் பிழைபாடு உடையன எனவே கருதப்படும்.

இங்குக் காட்டியவற்றுள் முதற் பாட்டைத் 'தவம்' என்னும் அதன் அதிகாரப் பொருண்மையோடு இயையக் கொண்டுரைப்பதே பொருளுரையாகும். அங்ஙனம் உரைப்பின், 'தன் உயிர் தான் அறப்பெறுதல்' என்ற தொடர் 'தவமாகிய தன் கருமம் இயற்றலை'யே குறிக்கும். அதற்கு அவ்வாறன்றித் 'தன்னைச் சச்சிதானந்த ரூபப் பரப்பிரமமாக உணர்ந்துகோடல்' என உரைத்தல் போலி யுரையேயாம்; அத் தொடர் அவ்வாறு பொருள்பட வேண்டின், அது 'மெய்யுணர்தல்' என்னும் அதிகாரத்தின்பாற் பட்டதாதல் வேண்டும். அஃது அதன்பாற் படாமையின், அங்ஙனம் உரைத்தல் ஆசிரியர் கருத்தன்று. ஆகலின்,

"*தன்னுயிர் தானறப் பெற்றானை ஏனைய*
*மன்னுயிர் எல்லாம் தொழும்*"

என்றது "தவமாகிய தன் கருமம் செய்யுமாற்றால், தன்னுயிரைத் தான் தனக்கு உரித்தாகப் பெற்றானை, அது பெறாது ஆசையுட்பட்டு அவஞ் செய்யும் உயிர்களெல்லாம் தொழும்; அஃதாவது, அவன் ஆணைவழி நின்று ஒழுகும்" எனவே பொருள்படும். இங்ஙனம் தவத்தின் உயர்வு தோன்ற உரைப்பதே ஆசிரியர் கருத்தாம்.

இனி, ஏனைய இரண்டு பாட்டுக்களுக்கும் ஒரு பொருட் கொள்கையினர் கூறும் பொருள் அதிகாரப் பொருண்மையோடு இயைபு உடையவாகத் தோன்றினும், அவை ஆசிரியர் கருத்தல்ல. ஆசிரியர் பொருட்பெற்றி கொள்ளும் வகையில், பொருள்களை நிலைத்த பொருளென்றும், நிலையாத பொருளென்றுமே வகைப்படுத்துவர்; ஒரு பொருட் கொள்கையினர் கொள்கைக்கு ஏற்ப அவற்றைப் பொய்ப்பொருள், மெய்ப்பொருள், அன்றி உள்பொருள், இல் பொருள், எனப் பகுத்துக் கூறுகின்றிலர். 'நிலையாமை' என்னும் அதிகாரத்தில்,

"*நில்லாத வற்றை நிலையின என்றுணரும்*
*புல்லறி வாண்மை கடை*"

எனக் கூறுகின்றார் ஆசிரியர். இதனால் நம் வழக்கிற்குட்படும்

பொருள்களெல்லாம் உள் பொருள்களே என்பதும், அவை நில்லாதன, நிலையின என இருவகைப்படும் என்பதும் பெறப்படும். மெய்யறிவிற்குப் புலனாகும் பொருள்களெல்லாம் உள்ளன; ஆயினும், அவற்றுள் எஞ்ஞான்றும் ஒருபடித்தாயுள்ள செம்பொருளை யொழித்து, எஞ்சிய உலகப் பொருள்களெல்லாம் தோன்றி நின்று அழிவன; அஃதாவது, அவை காரண அருநிலை, காரிய உருநிலை என இரு நிலையின் பாற்பட்டவையாய், புலப்படாதும், புலப்பட்டும் வருவனவாம். நமக்குப் புலனாகும் தண்ணீர் ஆவியாய், அருவாய் மறைதலும், பின்னர், அந் நிலையில் புலனாகாதிருந்த ஆவி, தண்ணீராய் உருநிலைப்பட்டுப் புலனாதலும் யாவர்க்கும் ஒப்ப முடிந்த முடிபு. இங்ஙனமே எல்லாப் பொருள்களும் காரண அருநிலையில் புலனாகாமல் மறைந்திருந்து, காரிய உருநிலை எய்திப் புலனாகும்போது, அவற்றை நாம் 'தோன்றின' எனவும், அவை அக்காரிய உருநிலையில் நீடு நிற்பின், 'நிற்கின்றன' எனவும், அங்ஙனம் நின்றவை அக்காரிய உருநிலையின் நீங்கிக் காரண அருநிலை எய்தின், 'அழிந்தன', 'மறைந்தன', அல்லது 'கரந்தன' எனவும் உணர்ந்து, வழங்கி வருகின்றோம். இவ்வாறு காரியமாய்ப் புலனாவனவெல்லாம் தத்தம் காரண வடிவில் அருவாய்ப் புலனாகாமல் உள்ளனவே என ஆய்ந்து முடிபுகூறும் பேச்சு (ஆய்வுரை) சற்காரியவாதம் எனப்படும். சத்–உள்ளது; காரியம்–ஆக்கப்படுவது. வாதம்–பேச்சு. பொருட் பெற்றியை இங்ஙனம் கூறுவதே விஞ்ஞான ஆராய்ச்சிக்கும் பொருந்துவதாகவுள்ளது. இதுவே திருவள்ளுவனார்க்கும் உடன்பாடென்பது மேற்காட்டிய குறளால் இனிது விளங்கும். தொல்காப்பியனாரும் "நில்லாவுலகம் புல்லிய நெறித்தே" என்றமையின், அவர்க்கும் இதுவே கருத்தாம்.

இனி ஒரு பொருட் கொள்கையினர் பொருட்பெற்றி கூறுங்கால் மாயாவாதம் பேசுவர்; அஃதாவது, மயங்கிய வழிக் கயிற்றில் அரவு தோன்றி மெய்யுணர்ந்த வழி அவ்வரவு கெட்டுக் கயிறேயாய் நிற்கும்; அது போல, இரண்டாவதொரு பொருளின்றித் தான் ஒன்றேயாயுள்ள பரப்பிரமம், மாயா எனப்படும் அவிச்சை காரணமாக, பிறப்பு நிலையில், உலகென, உயிர்களென, கடவுளெனப் பலவகைப்பட உணரும் பன்மையுணர்வு தோன்ற நிற்கும்; மெய்யுணர்ந்தவழிப் பன்மையுணர்வு கெடப் பரப்பிரமம் ஒன்றே என்றும் உள்ளதாய் நிற்கும் என்னும் பேச்சு. இக்கொள்கை பற்றிப் பொருள்களை வகைப்படுத்த வேண்டின், அவற்றை உள்ளன, இல்லன எனவே பகுத்தல் வேண்டும்.

அவ்வாறு பகுத்துப் பொருட்பெற்றி கூறுதல் ஆசிரியர் கருத்தாயின், நில்லாமை என்னும் அதிகாரப் பெயர் அவ்வாறன்றிப் 'பொய்ம்மை, பொய்ம்மாயம், இல்லாமை என்றாற் போலும் யாதேனும் ஒரு சொல்லாற் குறிக்கப் பெற்றிருக்கும். அன்றியும், மேற்காட்டிய பாட்டுத்தானும்,

*“இல்லாத வற்றை இருப்பவை யென்றுணரும்*
*புல்லறி வாண்மை கடை”*

என்றாதல்,

*“இல்லன வற்றையே உள்ளன வென்றுணரும்*
*புல்லறி வாண்மை கடை”*

என்றாதல் சொற்செய்து யாக்கப் பெற்றிருக்கும்.

ஈண்டு ஒருபொருட் கொள்கையினர் மாயாவாதம் பேசுதற்குக் காரணம் யாதென உணர்தல் பயன் தருவதாம். அன்னோர் தலையாய ஒத்தெனக் கொள்வது “ஏ நல்லோய், சத்தே முதற்கண் இருந்தது; பிரமம் ஒன்றே, இரண்டாவது இல்லை” என்னும் சாந்தோக்கிய உபநிடத வுரையினையே யன்றி, திருக்குறளில் வரும் யாதானும் ஒரு முடிபினையன்று. அங்ஙனம் கொள்ளும்போதும் “பிரமம் ஒன்றே” என்னுந் தொடரின் பயனைக் “கடவுள் ஒன்றே” எனக் கொள்ள மாட்டாராய், “பொருள் ஒன்றே” எனக் கொண்டு இடர்ப்படுதல் கருதத்தக்கது.

இனி, “பொருள் ஒன்றே” எனக் கூறும் முடிபு எல்லா வகை ஆராய்ச்சிகட்கும் அடி நிலையாகவுள்ள காட்சியோடு முரணுவதாய் உள்ளது. காணப்படும் உலகை அடியாகக் கொண்டு ஆராய்ந்து வருகையில், கடவுள், உயிர், உலகு எனவும், பிறப்பு, வீடு எனவும், நிலம், நீர், தீ, வளி, விசும் போடு ஐந்து எனவும் பன்மை வழக்கு உளதாகின்றது. இவ் வழக்கோடு, இவர் சாந்தோக்கிய உபநிடதம் பற்றிக் கூறும் “ஒரு பொருள் வாதம்” முரணுதலின், இவர் தம் ஒரு பொருட் கொள்கையை விடமாட்டாராய்ப் பன்மை உணர்வைப் பயந்து வரும் உலகக் காட்சிக்குக் கீழ் வருமாறு போக்குச் சொல்லி விடுப்பர்:– “பரப்பிரமம் ஒன்றே; ஆயினும், அதனை விட்டுப் பிரியாதுள்ள மாயையினால் பன்மையுணர்வு உளதாகின்றது. இப்பன்மையுணர்வு நீங்கப் பெறுதலே வீடுபேறாவது” என்பர். இங்ஙனமாயின், ‘நீர் கூறும் மாயையாவது பரப்பிரமத்தின் வேறோ, அன்றி அதனின் வேறாகாததோ?’ எனின், ‘அஃது உள்ளதும் அன்று; இல்லதும் அன்று; ஒருபுடையுளதாய் மற்றொருபுடை யிலதாகற்பாலதும் அன்று; மற்றுச் சொல்லொணாதது (அநிர்வசனீயம்)’ என விடுப்பர். இவர் இங்ஙனம் சொற்சாலம் செய்தற்குக் காரணம் மேலைய வினா இவர்தம்மை நெருக்கடியிற் கொண்டுய்ப்பதேயாம். இவர் மாயையை உண்டு எனத் துணிந்து கூறின், மாயை ஒன்று, பரப்பிரமம் ஒன்று–ஆகப் பொருள் இரண்டு என முடிந்து, அக் கூற்று இவர்தம் முதற்றுணிபோடு முரணும். அஃதாவது, இவர்க்கு அஃது அவசித்தாந்தமாம். இனி, இதற்கு அஞ்சி, மாயையை இல்லதெனவே கூறின்

யாவர்தம் காட்சிக்கும் எய்தும் பன்மை வழக்கிற்குக் காரணமின்றெனப்பட்டு, இவர்தம் ஒரு பொருட் கொள்கை நிலையுறாது. இந் நெருக்க நிலையினின்று விடுபடுதற்கு, மேற்கூறியபடி இவர் அளவை முறைக்கு மாறுபட்ட, அல்லது, அளவை முறையுட்படாத பேச்சில் (வாதத்தில்) இறங்குகின்றனர். இங்ஙனம், அளவை முறையை இறந்து மாயையைப் பற்றிப் பேச்சு நிகழ்த்துதல் பற்றி, இவர் வாதம் (பேச்சு) மாயாவாதம் எனப்பட்டது.

இம் 'மாயாவாதம்' திருவள்ளுவர் முடிபு அன்றென்பது அவர்,

*"உலகத்தார் உண்டென்பது இல்லென்பான் வையத்து*
*அலகையா வைக்கப் படும்"*

என்றமைபற்றியும் உணரப்படும். இக்கருத்துப்பற்றி,ஆசிரியர் உமாபதி சிவனார் "மாயாவாதப் பேயா"[1] என்றமை காண்க.

இவ்வாராய்ச்சியால், பொருட்பெற்றி ஆய்வுமுறையில் திருவள்ளுவர் முடிபு "நம் அறிவிற்குப் புலனாய்த் தோன்றுவன யாவும் உள்பொருள்களே எனவும், அவை,தம் உறுப்பமைப்புப்பற்றி, விளங்காத காரண அருநிலை விளங்கும் காரிய உருநிலை என்னும் நிலைவேறுபாடு உடையனவாய், தோற்றமும், நிலையும், இறுதியும் என்னும் வழக்கின்கண் படுகின்றன எனவும் கொள்ளும் சற்காரிய முடிபே என்பது விளங்கும். விளங்குதலின், சற்காரிய முறைக்கு மாறாகத் திருக்குறளுக்குப் பொருளுரைப்பன வெல்லாம் போலியாம் என்பது போதரும். புத்தர், மாயாவாதிகள்,சைனர்கள் ஆகிய இவர்கள் எல்லோரும் அசற்காரியவாதிகள் என்பது உளங்கொளற்பாலது. பொருட்பெற்றி கூறுகையில் புத்தர்கள் உலகை இல்பொருள் என்ப வாகலின் அவரை "அறுவகைத்தோர்"[2] எனவும், சைனர் 'உண்டாம் இல்லையுமாம்' (அத்தி நாத்தி) என்பவாகலின், அவரை 'ஐயுறும் அமணர்', எனவும் ஆளுடைய பிள்ளையார் அருளிச் செய்தமை காண்க. உமாபதி சியனார் சித்தாந்த மெய்யுணர்வைத் "தாவில் சற்காரியத்தாய் மலைவறும் உணர்வு"[3] என்றமை நினைவில் வைத்தற்கு உரியது.

தொல்காப்பியனாரும் "மன்னாப் பொருளும் அன்னவியற்றே" என்புழி மன்னாப் பொருள் என்றதனால் பொருட் பெற்றியைத் திருவள்ளுவர்போல நிலைப்பொருள், நிலையாயப் பொருள் என்றே கூறுங் கருத்தினராதல் தெளியப்

---

1.சங்கற்ப நிராகரணம், மாயாவாத சங்கற்ப மறுப்பு, 253.
2. திருவெழுகூற்றிருக்கை.
3. சிவப்பிரகாசம், 99.

படுதலாலும்,தொழின் முதனிலைகளுள் செயப்படு பொருளையும் ஒன்றாகக் கூறுதலாலும் சற்காரிய முடிபு உடையவராதல் பெறப்படும். தொல்காப்பியரும் திருவள்ளுவரும் சற்காரிய முடிபுடையராகவே காணப்படுதலின், தமிழ் மரபு அதுவே என்பது இனிது விளங்கும்.

இனிச் சற்காரிய முறையோடு முரணாமைத் திருக்குறளின் மெய்யுணர்தல் என்னும் அதிகாரத்து வரும் பாட்டுக்களின் பொருளடைவைக் காணுலுறுவோம்:–

*"பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும்*
*மருளான்ஆம் மாணாப் பிறப்பு"*

என்பது முதற்பாட்டு.

இஃது உயிர்களுக்கு உள்ளன என மேலே துணியப்பட்ட பிறப்பு,வீடு என்னும் இரு நிலைகளுள், பிறப்பின் தொடர்ச்சிக்குக் காரணமாவது இஃது என உணர்த்துகின்றது.

இதன் பொருள்: செம்பொருள் எனக் குறிக்கப்படும் கடவுள் அல்லாத, நிலையில் பொருள்களை 'இஃது இன்னது' எனச் சுட்டியறிந்து வரும் சுட்டுணர்வால் இன்பமில்லாத பிறப்பு உளதாகும்' என்பது.

மருள் என்றது சுட்டுணர்வை யாகலின், உணரும் என்னும் பெயரெச்சம் தொழிற் பெயர் கொண்டது.

மெய்ந்நூல் ஆராய்ச்சிக்கண், 'உயிராவது உடம்பு முதலியவற்றின் வேறாய், யான் என நிகழும் உணர்வுக்குப் பொருளாவது' என வரையறை கூறி, அதன் உண்மையும் இயல்பும் உணர்த்தப்படும். அதுபற்றி உணருங்கால் உயிர்களாகிய நமக்கு உளதாகும் அறிவு நிகழ்ச்சி அகநோக்கு , புறநோக்கு (தன்னோக்கு உணர்வு, பொருணோக்கு உணர்வு) என இருவகைப்படவைத்து உணரப்படும். "யான் இதனை அறிகின்றேன்; இது வீடு; இதுபுத்தகம்" என்றாற்போல் நிகழ்ந்து வரும் நம் உணர்வு நிகழ்ச்சியில், 'யான்' எனத் தன்னையே குறிப்பதாய் நிகழும் உணர்வு அகநோக்கு, அல்லது தன்னோக்கு உணர்வாம் (self consciousness). இத் தன்னோக்கு உணர்வே உயிரல்லாத பொருள்களோடு உயிர்க்கு உளதாகிய வேறுபாடு அறிய நிற்பது. இனி, "இது வீடு", " இதனை அறிகின்றேன்" எனப் பொருள்களை எதிரிட்டு, அவற்றை நோக்கி ஒடுவதாய் நிகழும் அறிவு பொருணோக்கு உணர்வு அல்லது பொருள் உணர்வு (objective consciousness) எனப்படும். இப் பொருள் உணர்வு நமக்கு வேறாகிய பொருள்களை 'இஃது இன்னது' என வேறாகச் சுட்டுவதாய் நிகழ்தலின் சுட்டு அல்லது சுட்டுணர்வு எனப்படும். இச் சுட்டுணர்வினையே ஆசிரியர் திருவள்ளுவர்

'பொருளென்று உணரும் மருள்' என்றார். எனவே, சுட்டு மருள், பொருள் உணர்வு என்பன ஒரு பொருள் மேலன என்றுணர்தல் வேண்டும்.

இருதிணை ஐம்பாற் பொருள்பற்றி உளதாகும் பொருள் உணர்வினைச் சுட்டு எனக் குறியிட்டாளுதல் தமிழ் வழக்கு என்பது ஆசிரியர் தொல்காப்பியனார்,

*"உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே*
*அஃறிணை யென்மனார் அவரல பிறவே;*
*ஆயிரு திணையின் இசைக்குமன் சொல்லே."* [1]

எனக் கூறினமைபற்றி உணரப்படும்.

இச் சூத்திரத்தில், "இவர் மக்கள்" என நிகழும் உணர்வை "மக்கட் சுட்டு" எனக் குறித்தமை காண்க. இத் தொடர்க்குச் சேனாவரையர் உரைத்ததே பொருளுரையாம்; அவர், ஆண்டு, "ஈண்டு மக்கள் என்றது மக்களென்னும் உணர்வை; எனவே, மக்களே யாயினும் மக்களென்று சுட்டாது பொருளென்று சுட்டியவழி உயர்திணை யென்ப் படாதாம்" என உரைத்த விசேடவுரை உளங்கொளற்பாலது.

மெய்கண்ட முதல்வரும், இக் கருத்துப்பற்றி, சுட்டியறியப்படுவதாகிய உலகத் தொகுதியினை '**அவன் அவள் அது வெனும் அவை**'[1] எனவும், சுட்டுணர்வுடைய உயிர்களைச் "**சுட்டுணர்வாகிய பிரபஞ்சம்**"[2] எனவும் கூறினமை காண்க.

இனி, இச்சுட்டுணர்வு உயிர்களை, அகமுகப்பட்டுச் செம்பொருளைத் தலைப்படவொட்டாமல், உலகமுகப்பட்டுப் புறப்பொருள்களையே அறிந்து பற்றச் செய்வதால் அதுபற்றிப் பொருள்களின் மேல் அவாவும், அதுபற்றி இரு வினைகளும், அவைபற்றி மீளப்பிறப்பும் என இவ்வாறு பிறவித் தொடக்கு உளதாம் என்பது ஆசிரியர் கருத்தாம்.

உலகப் பொருள்கள் நம் சுட்டுணர்வுக்குப் புலனாகி வருதல் போலச் செம்பொருளாகிய கடவுள் அவ்வுணர்வால் பற்றப்பட்டு விளங்குவதன்று என்பது ஈண்டு உணர்தற்பாலது.

இக்காரணம் பற்றியே செம்பொருள் கடவுள் எனப்பட்டது. செம்பொருள் சுட்டுணர்வுக்குப் புலனாவதெனின், அஃது அவ்வுணர்வுக்குப் புலனாகும் உலகப் பொருள்களில் ஒன்றாய், அவற்றைப் போலத்தோன்றி நின்று மறையும், நிலையில்

1.சிவஞான போதம், சூத். 1.
2. மேலது, அதி. 3, மேற்கோள்.

பொருளாய் முடியும். இனி அஃது எவ்வகையாலும் உணரப்படாத பொருளும் அன்று; என்னை? பொருண்மையாவது உண்மை; அவ்வுண்மை ஒருவர் அறிவில் தட்டுதல் பற்றியே துணியப்படுமாகலின். எனவே, செம்பொருளை எவ்வாற்றானும் உணரப்படாதது எனக்கொள்ளின் அஃது இல்பொருள் என்றதேயாய் முடியும்; ஆகலின், அது பற்றிய வழக்கும் இன்றாம். இங்ஙனம் ஆகலின் இதனானே செம்பொருளாவது சுட்டுணர்வைக் கடந்து நிற்பதாய், சுட்டிறந்து வேற்ற ஒன்றி நின்று உணரும் மெய்யுணர்வுக்குப் பொருளாய், "மணியினது ஒளியும், மலரினது மணமும்,சந்தனத்துத் தட்பமும் போல உண்ணின்று எழுதரும் ஒரு பேரின்ப வெள்ளத்தது"[1] ஆம் என்பதும் உய்த்துணரப்படும்.[2]

சுட்டிறந்து உணர்ந்து பயன் கொள்ளுமாறு இவ்வதிகாரத்து மேலே கூறப்படுகின்றது.

இங்கு நாம் கடவுளை இல்பொருள் எனக்கொள்ளாது,உள்பொருளே எனக் கோடற்குக் காரணம், அப்பொருளைத் தலைப்பட்டுணர்ந்த சான்றோர்களின் ஐயுறப்படாத வாய்மொழிகளாகிய நேர்ச்சான்றுகளும், அவ் வாய்மொழியினைக் கேட்டுணர்ந்து, கேட்டவாறு கடவுள் உண்மையினையும், இயல்பினையும், வழிபடும் முறையினையும், வழிபாட்டான் எய்தும் பயனையும் கூறும் சான்றோர்களின் செய்யுட்களாகிய அயற்சான்றுகளும் ஆம். தேவாரம், திருவாசகம் போல்வனவெல்லாம் கடவுள் உண்மைத் துணிபிற்கு அசைக்கப்படாத நேர்ச்சான்றுகளாய் நிலவுவன;பிற அயற் சான்றுகளாம்.

இனி உயிர்களின் அறிவைஉள்நோக்கி நிகழவொட்டாமல்உலகமுகப்படுத்தி நிற்பதொரு பொருள் உண்டென்பதும், அஃது இருள் எனப்படும் என்பதும் திருவள்ளுவர் கருத்தென்பது, அவர்,

*"இருள்சேர் இருவினையுஞ் சேரா இறைவன்*
*பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு"*

எனக் கடவுள் வாழ்த்தின்கண்ணும்,

*"இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருணீங்கி*
*மாசறு காட்சி யவர்க்கு"*

என ஈண்டு ஆராய்ச்சிப்பட்டு நிற்கும் மெய்யுணர்தலின்கண்ணும்

---

1. இறையனார் களவியலுரை.
2. சிவஞானபோதம் 6ஆம் சூத்திரப்பொருள் ஈண்டு உளங்கொளற் பாலது.

கூறியருளினமை கொண்டு உணரப்படும். இப்பாட்டுக்களால் அகவிருளின் உண்மையும், இயல்பும் விளக்க மாதல் காண்க.

இருளை ஒளிக்கு மறுதலையாய,ஆயினும் ஒளியின் முன் நிற்கலாற்றாத பொருளென்பாரும், அஃது ஒளியினது இன்மையே யாவதன்றிப் பொருள் அன்று என்பாரும் ஆகப் பல திறத்தர் பெற்றி கூறுபவர். அவர் கூறும் அகவிருட்பெற்றியும் அது. அவர்தம்முள், அதனைப் பொருளென்று கொள்வார் கருத்தே திருவள்ளுவர் கருத்தாதல், இப் பாட்டுக்களானும்,

*"பொருளென்னும் பொய்யா விளக்கம் இருளறுக்கும்*
*எண்ணிய தேயத்துச் சென்று"*

என்பதனாலும்,

*"விளக்கற்றம் பார்க்கும் இருளேபோல் கொண்கன்*
*முயக்கற்றம் பார்க்கும் பசப்பு"*

என்பதனாலும், பிறாண்டும் இருளைப் பொருளாக வைத்தே கூறுதலானும் விளங்கும்.

இவ்விடத்துச் சைவசித்தாந்த நெறிக்கண் பிறப்பிற்கு மூலகாரணம் எனக் கொள்ளப்படும், உயிர்களின் இயற்கைக் குற்றம்பற்றிச் சிறிது நினைவு கூர்ந்தால், திருவள்ளுவர் கருத்து எளிதின் விளங்கும். சைவ சித்தாந்தத்துள் முதல்வன் உலகப் படைப்பை மேற்கொண்டதன் நோக்கம் யாதாதல் வேண்டும் என ஆய்ந்து, அவ்வாய்வின் முடிபாக, உயிர்களின் அறிவை விளங்க வொட்டாமல் மறைத்துச் சிறுமைப்படுத்தும் அகவிருள் ஒன்று உண்டு எனவும், அதன் ஆற்றலை மெலிவித்து உயிர்களின் அறிவைப் படி முறையால் விளக்கி, முடிவில் அவை தன் திருவடி நிழலில் அடங்கி நின்று பேரின்பந் துய்க்குமாறு வைத்தருளும் அருணோக்கே படைப்பின் நோக்கமாவது எனவும் துணிபு கூறப்படும். இங்ஙனம் சைவசித்தாந்தத்துள் துணியப்படும் அகவிருள் மலம், மாசு, ஆணவம் என்னும் சொற்களால் குறிக்கப்படும். அம் மலம் இருவகை ஆற்றல்களால் உயிர்களின் விரிந்த இயல்பைச் சுருக்கிச் சிறுமைப் படுத்திப் பிறப்பின் வீழ்க்கும்; ஒன்று உயிர்களை ஒன்றையும் உணராவண்ணம் தடுப்பது; மற்றொன்று, அங்ஙனம் இருளின்பாற்பட்டுத் தன்னையும் பிற பொருளையும் உணராமல் நிற்கும் உயிர், உடம்பும் அதன்கண் அமைந்த அகப்புறக் கருவிகளுமாய ஒண்தளையை முதல்வனால் பெற்றுச் சிறிது இருள் நீங்கி அறிவு விளக்கம் பெறும்போது, அவ்வறிவை அகமுகப்படவொட்டாமல் புறவுலகை நோக்கிக் கீழே செல்லுமாறு வீழ்ப்பது, இவற்றுள் முன்னையது உயிர்கள் உடம்போடு கூடாதபோது

செயற்படுவது. இதனை நாம் நம் உறக்கத்தின் நிகழும் இயல்பு பற்றி உய்த்து உணரலாகும்; இது, வடமொழியில், ஆவாரக சக்தி (தடுக்கும் ஆற்றல்) எனப்படும். பின்னையது உடம்போடு கூடி அறிவு விளக்கம் எய்தும் போது செயற்படுவது; இதனால் ஆவதே உலகப்பொருள்களை 'இஃது இன்னது' எனச் சுட்டும் சுட்டுணர்வு. இவ்வாற்றல் வடமொழியில் அதோ நியாமிகா சக்தி (வீழ்க்கும் ஆற்றல்) எனப்படும். நுணுகியுணர்வார்க்கு மூல மலத்தின் இவ் விருவகை ஆற்றல்களையே ஆசிரியர் திருவள்ளுவர் முறையே இருள் எனவும், மருள் எனவும் குறித்தருளினர் என்பது விளங்கும். இருள், மருள் என்னும் இம் மரபுக் குறிகள் இப் பொருளில் சைவ நூல்களுள் யாண்டும் வழங்கும். எடுத்துக்காட்டாக,

*"மாயைமா யேய் மாயா வருமிரு வினையின் வாய்மை*
*ஆயவார் உயிரின் மேவு மருளெனின் இருளாய் நிற்கும்;*
*மாயைமா யேய மாயா வருமிரு வினையின் வாய்மை*
*ஆயவார் உயிரின் மேவும் அருளெனின் ஒளியாய் நிற்கும்"*

என்னும் உமாபதி சிவனார் திருவாக்கிற் காண்க.

இன்னும், மூல மலத்தின் இவ்விருவகை ஆற்றல்களின் வயப்பட்டு நிற்கும் உயிர், யான் எனவும், எனது எனவும் செருக்குறுவதாய், நல்வினை தீவினைகளைச் செய்து பிறவியிற்றொடக்குறும் என்னும் முடிபும் சைவ சித்தாந்தமே யாம். இக் கருத்துத் திருவள்ளுவர்க்கும் உரியதாதல்,

*"யான்என தென்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு*
*உயர்ந்த உலகம் புகும்"*

என்றமையால் உணரப்படும். இப் பாட்டால், செருக்கு என்பதும் மூலமலத்திற்குப் பரியாயமாம் என்பது போதரும். போதர, செருக்கு என்னும் சொல், மூல மலத்தையும், இருளென்பது அதன் தடுக்கும் ஆற்றலையும், மருள் என்பது அதன் வீழ்க்கும் ஆற்றலையும் குறிப்பனவாதல் பகுத்து உணர்ந்து கொள்ளப்படும். இக் கருத்து அறியாதார் இருள், மருள், செருக்கு, மயக்கம் என்பவற்றை ஒரு பொருளன எனக்கொண்டு அவை யாவும் அவிச்சையைக் குறிக்கும் என்பர்.

இவ்வாராய்ச்சியால் சைவ சித்தாந்தத்துட் கூறப்படும் மலம், மாயை, வினை என்னும் மூவகைத் தளைகளும் (பாசம்) திருவள்ளுவர் கொண்டுள்ளமை விளங்கும். மருள் என்னும் சொல் மலத்தின் வீழ்க்கும் ஆற்றலைக் குறிக்கும் எனக் கூறினோமாயினும், அது மாயாகாரியமாகிய உடம்பு முதலியவற்றோடு உயிர் கூடிய வழியே செயற்படுவதாகலின், அச் சொல்லே மாயையின் இருப்பையும் குறிக்கும் எனக் கொள்க.

உயிரைத் தளைத்து நிற்கும் மூவகைத் தளைகளின் இயல்பை மேலும் உய்த்துக் கொண்டு உணர்தற் பொருட்டு இத்துணையும் விரிவாகக் கூறினோம்.

இனி, மெய்யுணர்தலின் இரண்டாவது பாட்டு,

"*இருணீங்கி இன்பம் பயக்கும் மருணீங்கி*
*மாசறு காட்சி யவர்க்கு*"

என்பது.

இது வீடாவது பேரின்பத்தது என்பதும், அதனை அடைதற்கு வாயிலாவது மாசறு காட்சி எனப்படும் மெய்யுணர்வு என்பதும் உணர்த்துகின்றது.

இதன் பொருள் : 'மேற்கூறிய சுட்டுணர்வின் நீங்கிக் குற்றமற்ற கடவுட்காட்சி யுடையராயினார்க்கு, அக் காட்சி உயிரின் இயற்கைக் குற்றமாகிய இருளைப் பற்றற நீக்கி, இன்பப் பேற்றினைப் பயக்கும்' என்பது

சைவ சித்தாந்தத்துள் மெய்யுணர்வின் பயன் பாச வீடு, சிவப்பேறு என இருவகைப்படுத்து உணர்த்தப்படும். அவ் வகை இப்பாட்டின்கண் இருள்நீங்கி என்றதனாலும், இன்பம் பயக்கும் என்றதனாலும் பெறப்படுதல் காண்க. ஈண்டு இன்பம் என்றது நிரதிசய வின்பம் எனப் படும் பேரின்பத்தினை. இன்பத்தைச் சிற்றின்பம் (உலகவின்பம்), பேரின்பம் (வீடுபேற்றின்பம்) என இருவகைப் படுத்து உணர்த்துதல் ஆசிரியர் கருத்தென்பது அவர்,

"*சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே*
*மற்றின்பம் வேண்டு பவர்*"

என்றமைபற்றியும் உணரப்படும் என்பது முன்னரே காட்டப்பட்டது. இருள், மருள் என்னுஞ் சொற்கள் மலத்தின் இருவகை ஆற்றல்களைக் குறித்து, வேறு வேறு பொருளுடையவாதல் இதனாலும் உணர்க.

இப் பாட்டின் கருத்தே பற்றிக் குமரகுருபர அடிகள்,

"*கற்றுத் துறைபோய காதலற்குக் கற்பினாள்*
*பெற்றுக் கொடுத்த தலைமகன் போல் – முற்றத்*
*துறந்தார்க்கு மெய்யுணர்விற் றோன்றுவதே இன்பம்;*
*இறந்தவெலாந் துன்பமலாது இல்*"

என்றமை காண்க. இதன்கண் இறந்தவெலாம் என்றது சுட்டுணர்வு (மருள்) காரணமாக நுகர்ந்து வந்த உலகவின்பத்தினை. அது நிலையாததாய், துன்ப மயக்கங்களை உடன் கொண்டு நிகழ்வதாய், தூய்மையில்லதானமை பற்றி, அதனைத் 'துன்பமலாதில்' என்றார்.

இனி, மெய்யுணர்வு எனப்படுவது ஆகமவளவை சார்பாகக் கேட்டுணரும் ஆராய்ச்சியுணர்வும், செம்பொருளின் தலைப்பாடு பற்றி விளங்கும் அனுபவ உணர்வும் என இரு வகைப்படும். அவற்றுள், நூல்கள் பற்றி அறியப்படும் ஆராய்ச்சியறிவு பல தலைப்பட நிகழ்வதாய், இதுவோ அதுவோ என ஒன்றில் துணிவு பிறவாத ஐயுறவோடு கூடியதாம் ஆகலின், அதனை முடிந்த நூல்களும், அளவைகளும், பொருந்துமாறும், யோகப்பயிற்சியும் என்றின்னவற்றால் நீங்கித் தெளிவுணர்வு பெறுமவனே செம்பொருளைத் தலைப்படும் செவ்வியுடையான் என்பதை,

*''ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்*
*வானம் நணியது உடைத்து''*

என்னும் பாட்டு உணர்த்திற்று.

மெய்ந் நூல்களின் முடிந்த முடிபுகளை ஐயந்திரிபு அற உண்மையான் உணர்ந்தார்க்கு அகவிருளின் வலிகெட்டு, இருவினையொப்பு என்னும் செவ்வி அவர் அறிவின்கண் நிகழ்தலின், அவ்வறிவு உலகப் பொருளைப் பற்றலுறாது திருவருளைச் சாரும் பக்குவமெய்தி நிற்றலின் அவர்க்கு வையத்தின் வானம் (வீட்டுலகு எனப்படும் துரிய அருணிலை) அணித்தாதல் உடைத்து எனப்பட்டது. வானம் – பரவெளி; அஃது இப்பொருளது ஆதலை ''மெய்விண் உறுவார்க்கு இல்லை விதி''[1] என்னும் ஔவைப் பிராட்டி வாய்மொழியானும் உணர்க. ஆராய்ச்சி, அநுபூதி என்னும் இருவகை ஞானங்களுள், ஆராய்ச்சி ஞானத்தால் மலம் நீங்கும் என்பதும், அதுபற்றித் திருவருள் கண்ணாகவுணரப்படும் அநுபூதி ஞானம் விளங்கும் என்பதும் சைவ நூற் றுணிபு.

இனி, ஒருவன், யோக முயற்சிகளால், தன்மனம் பொறிகளின் வழிச் செல்லாதபடி காத்துத் தன்வயப்படுத்த வல்லனேல், அதுவே அவன் இம்மைக்கண் எய்தக்கூடிய முடிந்த உறுதி என்பாரும் உளராகலின், அவரை மறுத்து அனுபவ மெய்யுணர்வின் இன்றியமையாமையை உணர்த்துதற்கு எழுந்தது.

*''ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே*
*மெய்யுணர் வில்லா தவர்க்கு''*

என்னும் பாட்டு.

இதன் பொருள்: 'ஒருவர் தம் மனம் பொறிவழிச் செல்லவிடாது அதனைத் தாம் குறித்ததொரு பொருட்கண் நிறுத்தவல்லரே யெனினும், அவர்

1.நல்வழி 37

செம்பொருளைத் தலைப்பட்டுணரும் மெய்யுணர்வினை இலராயின், அதனால் அவர்க்குப் பயன் இல்லதேயாம்' என்பது.

*"ஆறினார் பொய்யகத்து ஐயுணர் வெய்திமெய்*
*தேறினார் வழிபடுந் தென்குடித் திட்டையே"*

என்னும் ஆளுடைய பிள்ளையார் திருவாக்கு இக் கருத்துப் பற்றியதாதல் காண்க. இன்னும், இப்பாட்டு,

"ஈண்டு இவ்வான்மாக்களுக்கு முற்செய் தவத்தான் ஞானம் நிகழும் என்றது, மேற் சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோக்ஷத்தைக் கொடாவாகலான்."

என்னும் மெய்கண்ட சித்தாந்தத்திற்கு மூல மறையாதல் காண்க. தலைமை பற்றி ஐயுணர் வெய்தியக் கண்ணும் என யோகத்தைக் கூறினாரேனும் இனம் பற்றிச் சரியை கிரியைகளும் உடன் கொள்ளப்படும் என்க. எனவே கிரியையென, மருவுமவை யாவும் ஞானம் கிடைத்தற்கு நிமித்தம்'[1] என்றதூஉம் ஆயிற்று.

*"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்*
*மெய்ப்பொருள் காண்ப தறிவு"*

என்னும் பாட்டு அனுபவ மெய்யுணர்வாவது இஃது என அதன் பொதுவியல்பு கூறுகின்றது.

இதன் பொருள்: 'யாதொரு பொருள் யாதொரு தன்மைத் தாயினும், அத் தன்மையினைச் சுட்டி நில்லாது அப் பொருட்கண் நின்று, அதன்கண் அதுவே தானேயாந் தன்மையில் தங்கி நின்று அதனை நடாத்தும் மெய்ப் பொருளைக் காண்பது மெய்யுணர்வாம்' என்பது.

நூலின் தொடக்கத்தில் 'அகரமாகிய முதலையுடைய எழுத்துக்களெல்லாம்; அதுபோல, ஆதிபகவனாகிய முதலையுடைத்து உலகம்' என மெய்ப் பொருளின் உண்மை கூறி, அப்பொருள் இயங்கு திணைக்கண்ணும் நிலைத் திணைக்கண்ணும் அவையே தானேயாந் தன்மையில் தங்கி நிற்குமாற்றை இறைவன் என்னும் காரணக் குறியாற் பெறவைத்தாராகலின், ஈண்டு அவ்விறைமையை மாசறு காட்சியாற் கண்டுணர்வதே மெய்யுணர்வு என வரை செய்து உணர்த்தினார் ஆசிரியர். இறைமை—உலகெலாமாகி வேறாயுடனுமாய் நிற்குந் தன்மை. உலகத்தை முத்தொழிற்படுத்துதற்கண், இறைவனுக்கு

1. சிவப்பிரகாசம், 10.

அதனோடு உள்ள சம்பந்தத்தை இவ்வாறு மூவகைப்பட வைத்து உணர்த்துதல் தமிழ் வழக்கு. இதனை,

*"ஈறாய்முத லொன்றாயிரு பெண்ணாண்குண மூன்றாய்*
*மாறாமறை நான்காய்வரு பூதம்மவை ஐந்தாய்*
*ஆறார்சுவை யேழோசையொ டெட்டுத்திசை தானாய்*
*வேறாயுட னானானிடம் வீழிம்மிழ லையே"*

என்னும் ஆளுடைய பிள்ளையார் மறைவளருந் தமிழால் உணர்க.

இச் சம்பந்தமே வடமொழி உபநிடதங்களால் "**அத்வைதம்**" என்னும் சொல்லால் உணர்த்தப்படுகிற தென்பதும், இச்சம்பந்த ஞானமே வீட்டின்பத்திற்கு நேரே வாயிலெனப்படும் மெய்யுணர்வாம் என்பதும் மெய்கண்ட தேவ நாயனாரால் சிவஞான போதத்தில் இரண்டு, ஐந்து, பதினொன்றாம் சூத்திரங்களில் முறைப்பட விளக்கி யருளப் பட்டுள்ளமை காண்க.

இனி, அம்மெய்யுணர்வு ஆளுடைய பிள்ளையார் போலும் சிலர்க்கு, ஞானாசிரியன் திருமுன்பு, ஒரு காலத்து முழுதொருங்கு நிகழ்தலும், ஏனையோர்க்குப் படிமுறையான் நிகழ்தலும் என இருவகைப்பட நிகழ்தலுடைமையின், அவற்றுள் படிமுறை நிகழ்ச்சியைக் கூறுகின்றார் ஆசிரியர். படிமுறையாவது கேட்டல், ஓர்த்தல் (சிந்தித்தல்), தெளிதல், நிற்றல் என்னும் நான்கு திறத்தான் உணர்தல். அவற்றுள் கேட்டல் உணர்வும், அதன் பயனும்,

*"கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்*
*மற்றீண்டு வாரா நெறி"*

என்பதனால் உணர்த்தப்படுகின்றன.

இதன் பொருள்: 'இப்பிறப்பின்கண்ணே அனுபவம் உடைய ஞானாசிரியன்பால் உபதேசமொழியினைக் கேட்டுப் பயின்று, அதனால் மெய்பொருளாகிய அருளொளியை உணர்ந்தவர் மீண்டு இப்பிறப்பின்கண் வாராமையைப் பயப்பதாகிய வீட்டு நெறியினை எய்துவர்' என்பது.

ஞாயிற்றின் தோற்றத்திற்கு முன் அதன் ஒளி தோன்றும்; அவ்வொளியே தன்னைப்பற்றிய கண்ணுக்குத் தனக்கு முதலாகிய ஞாயிற்றைக் காட்டும். பிற வொளிகள் ஞாயிற்றினைக் காட்டா! அவை ஞாயிற்றின் ஒளிமுன் முனைந்து விளங்கமாட்டாவாகலின். இவ்வாறே முதற்பொருளைத் தலைப்படுவார்க்கு முதற்கண் விளங்கற்பாலது அதன் பேரறிவும் பேராற்றலும் எனப்படும் அருளொளியாம். இவ்வொளி உயிர்களின் உணர்வுக்கு முதலாய் (தம் முணர்வின்

தமி[1]), அவற்றின் அறிவு செயல்களை உண்ணின்று ஊக்கி நிகழ்வித்து வருவதாகலின், இஃது அறிவாற்றல், தொழிலாற்றல் (ஞானசத்தி, கிரியா சக்தி) என இரண்டாகக் கருதப்பட்டு முறையே முதல்வனது வலத்திருவடி, இடத்திருவடி என வழங்கப்படும் என்பது மேலே கூறப்பட்டது. தொன்றுதொட்டு வரும் கேள்வியோடு அனுபவமுடைய தேசிகன் முன்னிலையில், உபதேச நூற்பொருளைக் கேட்டபின், அக் கேள்வியால் 'எனது' என நிகழும் பொருளுணர்வு (மருள்) நீங்க, உள்நோக்கு உணர்வு (யான் என நிகழும் உணர்வு) மேம்படும்; மேம்பட, அந்நிலையில், அவ் யான் என்னும் முனைப்பும் அற, அதனைத் தன்னகப்படுத்தி எழுந்து விளங்குவது, இவ்வருள் ஒளியேயாம். பின்னர் இவ்வொளி பற்றி உள்ளத்தின்கண் ஓர்த்தலால் உணரப்படுவது செம்பொருள். இவ்வருளொளி சார்பாகக் காணுங்காட்சியே இப் பாட்டின்கண் ஈண்டு வாராநெறி எனக் குறிக்கப்பட்டது. இதனை நன்னெறியாகிய ஞானம் என்றார் மெய்கண்டார். நன்னெறி, மெய்யுணர்பு, அடிஞானம், சிவஞானம், திருவருண்ஞானம் என்பன ஒரு பொருளன.

"*பிறவிப் பெருங்கடல் நீந்துவர், நீந்தார்*
*இறைவ னடிசேரா தார்*"

என்னும் கடவுள் வாழ்த்து இறுதிப் பாட்டும்,

"*அணைவுற வந்தெழும் அறிவு தொடங்கின அடியார்பால்*
*இணையில் பவங்கிளர் கடல்களி கந்திட இருதாளின்*
*புணையருள் அங்கணர்*"

என்னும் பெரிய புராணச் செய்யுளும் இக் கருத்துப் பற்றியவாதல் காண்க.

கேள்வியின் பயனெனப் பட்ட அருளொளி அல்லது திருவடி, யான் என்னும் பேதைமையும், எனது என்னும் மருளும் நீங்கிய வழி விளங்குவ தென்பதை,

"*பரை உயிரில் யானெனதென் றற நின்றது அடியாம்*"[2]

"*யானாகிய என்னை விழுங்கி வெறுந்*
*தானாய் நிலைநின்றது தற்பரமே*"[3]

என்பவற்றான் உணர்க.

---

1. சிவஞானபோதம், சூத்.5.
2. உண்மைநெறி விளக்கம், 4
3. கந்தர் அனுபூதி

இப்பாட்டின் கருத்தை,

*“மீண்டு வாரா வழியருள் புரிபவன்*
*பாண்டி நாடே பழம்பதி யாகவும்*

. . . . . . . . . . . . . . . . . .   . . . . . . . . . . . . . . . . . . .

*எப்பெருந் தன்மையும் எவ்வெவர் திறமும்*
*அப்பரி சதனால் ஆண்டுகொண் டருளி”*

என்னும் திருவாசகக் கருத்தோடு ஒப்பிட்டு, இது கேட்டல் மேலதாதல் உணர்க.

இனி,

*“ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்*
*பேர்த்துள்ள வேண்டா பிறப்பு”*

என்னும் பாட்டு ஓர்த்தலுணர்வும் (சிந்தித்தல்), அதன் பயனும் உணர்த்துகின்றது.

இதன் பொருள்: “ஒருவன் மேற்கூறியவாறு கேட்டலாற் பெற்ற திருவருள் கண்ணாகத் தன் உள்ளத்தின்கண் (அறிவின்கண்) நாடி ஆண்டுப் பிரிப்பின்றி உள்ளதாகிய, அவ்வருளுக்கு முதலாகிய பொருளை ஐயமின்றி உணர்ந்தானாயின், அவனுக்கு மாறிப் பிறப்பு உள்ளதாக நினைக்க வேண்டா”எ என்பது.

*“ஓராதார் உள்ளத்து ஒளிக்கும் ஒளியானே”*

என்னுந் திருவாசகம் இப்பாட்டின் உட்கிடையை எதிர்மறை வாய்பாட்டால் விளக்குதல் காண்க.

இப்பாட்டில், ‘உள்ளம்’ என்றது உயிரினை; ‘உள்ளது’ என்றது அறிவுக்கறிவாய்ப் பிரிப்பின்றி உள்ளதாய செம்பொருளை. வடமொழி உபநிடதங்களின் வரும் சத்து என்பதும் இப் பொருளது.

கேட்டற்கண் விளங்குவது முதற்பொருளின் ஒளி என்பதும், பின்னர் அவ்வொளி பற்றி உள்ளத்தின்கண் ஓர்த்தலால் உணரப்படுவது முதற்பொருள் என்பதும் பகுத்து உணர்ந்து கொள்ளுமாறு, மேலே “மெய்ப்பொருள் கண்டார்” எனவும், இங்கு “உள்ளம் ஓர்த்து உள்ளது உணரின்” எனவும் வேறுபட வைத்துக் கூறியதும், பயன்களை வேறு வேறாகக் கூறியதும் காண்க.

இப்பாட்டின் விளக்கமாக,

*“ஊனக்கண் பாசம் உணராப் பதியை*
*ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி;*

*உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்*
*தண்ணிழ லாம்பதி"*

என்னும் சிவஞான போத ஒன்பதாஞ் சூத்திரம் வருதல் காண்க.

இச்சூத்திரத்தில் ஊனக்கண் என்றது குறையறிவாகிய உயிரின் அறிவை; அஃதாவது 'யான் முதல்' என முனையும் அடக்கமில் அறிவை. இதுவே அடுத்த பாட்டில் பேதைமை என்னுஞ் சொல்லால் குறிக்கப்படுகிறது. இனிப் பாசம் என்றது உடம்பும் அதனுள் அமைந்த அகப்புறக் கருவிகளும் துணையா நிகழும் பொருளுணர்வை (எனது). இவை முறையே பசு ஞானம், பாச ஞானம் எனப்படும்; இவையே யான், எனது என்பவற்றாலும், பேதைமை, மருள் என்பவற்றாலும் திருவள்ளுவரால் முறையே குறிக்கப்படுவன. இனி, ஞானக்கண் என்றது திருவடி ஞானத்தை.

சூத்திரத்தின் பிண்டப்பொருள் : "முதற்பொருள் யான், எனது எனப்படும் பசு, பாச ஞானங்களால் உணரப்படாது; ஆகலின் அதனை அதனருளொளியே கண்ணாக அடங்கி நின்றுணரும் அடிஞானத்தால் உன் அறிவில் நாடு. இனி, அடி ஞானம் விளங்கப்பெறுவது எவ்வாறோ எனின், உலகப்பொருள்கள் யாவும் பேய்த் தேர் போலத் தோன்றிச் சடக்கென மறைந்தொழிவன என உணர்ந்து, அவற்றினை அவாவாது ஆசிரியன் காட்டிய குறிவழி நிற்பின், உன் அறிவில் அடிஞானம் பிறவிவெப்பந்தணிக்கும் இன்பத்ததாய் விளங்கி மேம்படும்," என்பது.

சூத்திரத்தில் உள்ள 'பதி' இரண்டனுள், முன்னையது முதற்பொருளையும், பின்னையது அதன் அருளொளியாகிய திருவடியையும் குறிக்கும். சிந்தை என்றது உயிரினை; நாடி—ஏவல் வினைமுற்று.

*"உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்*
*தண்ணிழலாம் பதி"*

என்றது,

*"ஆரா இயற்கை அவா நீப்பின் அந்நிலையே*
*பேரா வியற்கை தரும்"*

என்னும் திருவள்ளுவர் வாய்மொழியோடு ஒப்பிடற்பாலது.

இனி,

*"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்*
*செம்பொருள் காண்ப தறிவு"*

என்னும் பாட்டுத் **தெளிதலும்** அதன் **பயனும்** உணர்த்துகின்றது.

இதன்பொருள் : "பிறப்பிற்குக் காரணமாகிய பேதைமை அற, சிறப்பினையுடைய செம்பொருளைக் கண்டுணர்வது மெய்யுணர்வாம்" என்பது.

இதன்கண் பேதைமை **நீங்க** என்றது மேலைப்பாட்டில் **ஒரு தலையா(க)** என்றதை விளக்குதற்கு. அருளாசான் காட்டும் நெறியானே, **எனது** என்னும் **மருள்** நீங்கும்படி, 'நான் ஆர்?' எனத் தன் உண்மையியல்பை ஓர்த்து உணர்வுழி, உருவுடம்பும், அருவுடம்பும் ஆகிய பாசங்களைத் தனித்தனி 'இது நான் அல்லேன், இது நான் அல்லேன்' எனச் சுட்டி நீங்கிய பின், உயிரின்மாட்டு அதுகாறுந்தோன்றிய, பாசங்களின் சார்பான் ஆய சுட்டறிவாகிய பொதுவியல்பு கழியும்; கழியவே, அந்நிலையில் பாசங்களின் நீங்கித் தூய்தாய் நிற்கும் அதன் அறிவின்கண், அதற்கு எஞ்ஞான்றும் நீங்காச் சார்பாய்ப் பிரிப்பின்றி உள்ளதாகிய செம்பொருளின் ஒளி விளங்கித் தோன்றும்; தோன்றுதலின், அவ் விளக்கத்தை, அந் நிலைக்கண், அது பண்டு தொட்டு யான் எனது என்னுஞ் செருக்கிற் பயின்று வந்த பயிற்சி வயத்தான், தனக்கே உரிய உண்மையியல்பு எனத் திரியக்கொண்டு, **நான் முதல்** (அகம் பிரம்ம) எனவும், **நான் முதற் பொருளுக்குச் சமம்** (சிவசமம்) எனவும் உணர்ந்து செருக்கும்; இம் முறையானே ஓர்த்தற்கண் தோன்றற்பாலதாகிய **யான்** என்னும் இச் செருக்கே ஈண்டுப் **பேதைமை** எனப்பட்டது. இப் பேதைமையுணர்வு, வீட்டு நெறியினைப் படிவழியால் தலைப்படுவார்க்கு இடைநிலையாகப் பசுத்துவ வாதனைபற்றி நிகழ்வதாகலின், **பசுஞானம்** எனப்படும். யான் என்னுஞ் செருக்குப்பற்றி உளதாகும் **இப்பேதைமை** தானும், **எனது** என்னுஞ் செருக்காய **மருளை** மீளவும் தோற்றுவித்துப் பிறப்பின்கண் வீழ்ப்பதேயாகலின், இது **பிறப்பென்னும் பேதைமை** எனப்பட்டது. பிறப்பின் காரணத்தைப் பிறப்பென்றது உபசாரம்.

எனவே, பிறப்பென்னும் பேதைமை நீங்குதற்கு வாயிலாவது, அந் நிலைக்கண் உயிரின்மாட்டு விளங்கித் தோன்றும் திருவருள் விளக்கத்தைத் திருவருளான் ஆயது எனவே தெளிந்து, யான் என்னும் முனைப்பின்றி அதன் வழிப்பட்டு அடங்கி நிற்றலாம் என்பது பெறப்படும்.

இவ்வருள் வழிநிலையே, மேலே கேட்டற்பயன் உணர்த்தும் வழி, ஈண்டு **வாராநெறி** எனக் குறிப்பிக்கப்பட்ட **வீட்டுநெறி**; கடவுள் வாழ்த்துள் பிறவியை அறுத்துக் கோடற்கு வாயிலாக எடுத்தோதப்பட்ட **தாள் சேர்தல், அடிசேர்தல்** என்பவற்றின் தாற்பரியமும் இதுவேயாம். இந்நிலைக்கண் ஒருவர்க்கு உளதாகும் தெளிவுணர்வே **மாசறு காட்சி** எனப்பட்ட **மெய்யுணர்வாம்**. இஃது, இருளினீங்கிய உயிர்க்கு, செம்பொருளின் அருளொளியே காட்டாக நிகழ்வதாகலின், **அருள் ஞானம், சிவஞானம், பதிஞானம், திருவடி ஞானம்** என்றற்றொடக்கத்துக் காரணக் குறிகளான் சைவசித்தாந்தத்தின்கண் வழங்கும்.

இவ் விளக்கத்தால், செருக்கு என்னுஞ் சொல் சைவ சித்தாந்தத்துட் கூறப்படும் பாச, பசு ஞானங்களைக் குறிக்கும் பொதுச் சொல் ஆதலும், மருள், பேதைமை என்பன முறையே பாச ஞானத்தையும், பசு ஞானத்தையும் குறிப்பனவாதலும் இனிது விளங்கும்.

செம்பொருள் சிறப்புடையதாதல் பற்றி அதனைச் சிறப்பென் றுபசரித்தார். செம்பொருளுக்குச் சிறப்பாவது தன்னை அடைந்தாரைத் தன்வண்ணமாக்கி உயர்த்தி மாறாப் பேரின்பம் உறுத்தல். அது,

*"திகழ்ந்தமெய்ப் பரம்பொருள்*
*சேர்வார் தாமே தானாகச் செயுமவன்"*[1]

எனவும்,

*"எவ்வெவர் தன்மையுந் தன்வயிற் படுத்துத்*
*தானே யாகிய தயாபரன் எம்மிறை"*[2]

எனவும்,

*"தித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட*
*அத்தன் . . . . . . . . . . . . . . . . . . . . . ."*[3]

எனவும்,

*"தன்னைக் கண்ட என் வண்ணம் எவ்வண்ணம்*
*அவ்வண்ணமாகிய ஈசனுக்கே"*[4]

எனவும்,

*". . . . . . . . . . . நானெனவொன்று*
*இல்லென்று தானே எனுமவரைத் தன்னடி வைத்து*
*இல்லென்று தானாம் இறை"*[5]

எனவும் – இங்ஙனம் வரும் தோத்திரசாத்திரங்களான் உணரப்படும்.

---

1. ஆளுடைய பிள்ளையார், வியாழக்குறிஞ்சி, திருக்கழுமலம்
2. திருவாசகம், கீர்த்தித் திருவகவல்.
3. மேலது, அச்சோப்பதிகம்.
4. சேரமான் பெருமாள் நாயனார், பொன், 1.
5. சிவஞானபோதம், சூ.10, அதி.1.

இதனால், '**சிறப்பென்னுஞ் செம்பொருள்**' என்னுந் தொடர் பரமுத்தி எனப்படும் வீட்டின் இயல்பைக் குறிப்பாற் பெறுவித்துத் தேற்றுவதாதல் உணரப்படும்; என்னை? மாணிக்கத்தைச் சார்ந்த படிகத்திற்கு மாணிக்கம் தன்னொளியைத் தந்து, அதனைத் தன்னொளியின் அடங்கக் கொண்டு, தானாகச் செய்யுமாறுபோல, செம்பொருளைச் சார்ந்த உயிர்க்குச் செம்பொருள் தன் எண்வகைக் குணங்களைத் தந்து அதனைத் தன் அருள் வியாபகத்துள் அடங்கக் கொண்டு, தானாகத் தரும் என்பது பெறப்படுதலின்.[1]

சிறப்பென்னும் செம்பொருள் என்றது உடம்பொடு புணர்த்தோதிய தாகலின், முதற்பொருளை மாசறு காட்சியாற் கண்டுணரும் வீட்டு நிலைக்கண் அதன் குணங்கள் உயிரின்மாட்டு விளங்கும் என்பதும், விளங்கவே, அவ்விளக்கத்தை அழுந்தி யறிவதாகிய நிரதிசயவின்ப நுகர்ச்சி அக் காட்சியின் பயன் என்பதும் போதரும், இங்ஙனம் ஈண்டு உய்த்துணர்ந்து கோடற்கு ஏற்ப மேலே,

"*இருணீங்கி யின்பம் பயக்கும் மருணீங்கி*
*மாசறு காட்சி யவர்க்கு*"

என்றமை காண்க. இவ் வின்ப விளக்கம் **நிற்றலின்** பயனாக ஓதற்பாலதே யாயினும், தெளிதலுணர்வின் பின் நிற்றற்கு இடையீடு இன்மையின், ஈண்டே பெறுவிக்கப்பட்டது.

வீட்டு நிலையின் மாறா வியல்பு விளங்க, அதனைப் **புக்கில்** எனவும், **பேராவியற்கை** எனவும் குறிக்கும் ஆசிரியர், அதற்கு ஏற்ப ஈண்டு அதன் சார்பும், வினைமுதலும் ஆகிய முதற் பொருளைச் **செம்பொருள்** என்றமை குறிக்கொளற் பாலது.

சார்பு – ஆதாரம்; வினைமுதல் – நிமித்தகாரணம். செம்பொருள் வீட்டிற்கு நிமித்த காரணம் என்பது 'சிறப்பென்னும் அடையாற் பெற்றாம்; அஃது அதற்கு ஆதாரம் என்பது அடுத்துவரும் பாட்டில் 'சார்பு உணர்ந்து' என்பதனாற் பெறுதும்.

ஈண்டுத் "தோற்றக் கேடுகளின்மையின் நிமித்தமாய் நோன்மையால் தன்னையொன்றுங் கலத்தலின்மையின் தூய்தாய்த் தான் எல்லாவற்றையுங் கலந்து நிற்கின்ற முதற் பொருள் விகாரமின்றி எஞ்ஞான்றும் ஒரு தன்மைத்தாதல்

---

1. "*அகளமா யாரும் அறிவரி தப்பொருள்*
*சகளமாய் வந்ததென் றுந்தீபற!*
*தானாகத் தந்ததென் றுந்தீபற*"
என்னும் திருவுந்தியைக் காண்க.

பற்றி, அதனைச் செம்பொருள் என்றார்," என்னும் பரிமேலழகர் விசேடவுரை கருத்தில் வைக்கத் தக்கது. சைவர்கள் முதற்பொருளுக்கு இட்டு வழங்கி வரும் சிவம் என்னும் மறைமொழி இப்பொருளதாதல் கருதற்பாலது.

இப் பாட்டால் நுண்ணிதின் உணர்த்தப்படும் வீட்டு நிலைக்கண் நிகழும் இயல்பைக் கடவுள் வாழ்த்துள்

*"கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்*
*தாளை வணங்காத் தலை"*

என்பதனால் பருப்பொருளாக வைத்துக் குறிப்பித்தமை உணர்ந்து இன்புறுதற் குரியது. பிறவும் இவ்வாறு ஓர்ந்து உணர்ந்து கொள்க.

இங்ஙனம் இவ்வதிகாரம் நுதலும் பொருளெல்லாம் கடவுள் வாழ்த்துக் குறிப்பால் தன்னகத் தடக்கி நின்று, நூலின் அகவுறுப்பாய்ப் பாயிரமாதலை அறியும் அறிவின் மதுகை யில்லாரெல்லாம் அஃது இதனோடு முரணும் எனக் கூறியொழிவர். அவரெல்லாம்,

*"எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்*
*நுண்பொருள் காண்ப தறிவு"*

என்னும் ஆசிரியர் வாய்மொழியை அறிந்திலர் போலும்!

இனி,

*சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்*
*சார்தரா சார்தரு நோய்*

என்னும் பாட்டு **நிற்றலும்** அதன் **பயனும்** உணர்த்துகின்றது.

இதன் பொருள்: "ஒருவன் தனக்கு எஞ்ஞான்றும் சார்பாயுள்ள அச் செம்பொருளை மேற் கூறியவாற்றான் உணர்ந்து, ஆண்டுச் சாரும், காண்பான், காட்சி, காட்சிப்பொருள் எனப்பகுத்துக் காணும் திரிவுக் காட்சி அற அதன்கண் செயலறு அன்பு செய்து ஒழுகின், அவனைச் சாரக்கடவனவாய் உள்ள துன்பங்கள் அவ்வொழுக்கத்தினை அழித்துச் சாரா" என்பது.

நூலின் தொடக்கத்திற்றானே "ஆதிபகவன் முதற்றே உலகு" என்றதனால் முதற்பொருள் உயிர்களின் உணர்வுக்கு முதலாய், பரம ஆதார நிமித்த காரணமாதல் எய்துவிக்கப்பட்டது; ஆண்டுக் கருதல் அளவையானும் ஆகம அளவையானும் அறிந்த உண்மைகளைப் பின்னர்க் கூறிய ஒழுக்க நெறியின் நின்று, முதற்பொருளைத் தலைப்பட்டு உணர்வதே மெய்யுணர்வாகலின், அக்

கருத்தினையே ஈண்டுச் சார்பு என்னுஞ் சொல்லாற் குறித்தருளினார் ஆசிரியர் என்பதுணர்க. எனவே, 'சார்பு உணர்ந்து' என்றது முதற்பொருள் தன்வாழ் முதலாய், உணர்வின் தமியாய்த் தன் அறிவின்கண் பிரிப்பின்றி உடனாய் நின்று உபகரித்து வரும் பேரருட் டிறத்தை மறவாது கடைப்பிடித்து என்றபடி.

'சார்பு கெட' என்றதில் உள்ள சார்பு, சார்வது என்னும் பொருளது; செம்பொருளை உணர்தற்கண் பண்டை மலவாதனை பற்றிச் சார்வது காண்பானும், காட்சியும், காட்சிப்பொருளுமாய்ப் பகுக்கும் திரிவுக் காட்சியே யாகலின், அதுவே அச்சொற்குப் பொருளாக உரைக்கப்பட்டது. அவ்வாறு பகுக்கும் பகுப்புணர்வும் யான் எனது என்னும் செருக்கு எனவே படும் என்பது சிவஞான மாபாடியத்தால் விளங்கும்.*

உணர்வாவது அறிவின் பின்னர்த்தாய், அதன் பயனாய், அன்புருவாய் நிகழ்வதாகலின், அவ்வுணர்வு நிலையே யான் எனது என்னுஞ் செருக்கு முற்றும் நீங்கும் நிலையென்பார் **சார்பு உணர்ந்து, சார்புகெட ஒழுகின்** என்றார். எனவே, '**உணர்ந்து சார்புகெட வொழுகின்**' என்றது அழுந்தி நின்றறியின் என்றபடி. இதனால், மாசறு காட்சியாகிய தெளிதல் நிலையைத் தலைப்பட்டு, அதன்கண் அழுந்தி நிலை பெறலே **நிற்றலாம்** என்பதும், அது முதற்பொருளின் சார்பாந்தன்மையை மறவாது கடைப்பிடித்து அன்பு செய்தலாற் கைகூடற்பாலதென்பதும் உணரப்படும்.

பரமுத்தி நிலைக்கண் உயிர்க்கு உருவுடம்பு, அருவுடம்பு என்பவற்றோடு தொடர்பு சிறிதும் இன்றாயினும், '**உணர்ந்து ஒழுகின்**' என அறிவிச்சை செயல்களின் நிகழ்ச்சி கூறியது ஆண்டு அவை முதற்பொருளின் அருளான் விளங்கி முதற்பொருளை விடயித்து நிற்கும் என்பது உணர்த்துதற் பொருட்டு என்க் கொள்க.

---

* சிவஞான போதம் பத்தாஞ் சூத்திரத்து முதலதிகரண வார்த்திகத்தின் ஏது:

"அவ்வாறு நிற்கவே யானெனதென்னும் செருக்கற்று அவனது சீபாதத்தை அணையு மாகலான்" என வருதலையும், அதன் பொருளை விளக்குமுகத்தான் மாதவச் சிவஞான சுவாமிகள்,

"ஏகனாய் அப்படி நின்றாலே யன்றி **யான் எனப்படும் ஞாதாவும், எனது எனப்படும் ஞானமும், அதற்கு விடயமாய் எனது எனப்படும் ஞேயமும் எனப் பகுத்துக் காணும் மயக்க உணர்விற்கு ஏதுவாகிய மலவாசனை** நீங்காது; அது நீங்கினாலன்றி முதல்வனது திருவடியாகிய சிவாநந்தத்தை அனுபவித்தல் கூடாது" என அருளிச் செய்ததையும் காண்க.

உலகவின்ப நுகர்ச்சிக்கண் நுகர்ச்சிப் பொருளும் அதனை எய்துவிக்கும் பொன்னும் துணையாக இன்பம் நுகரப்படும்; அஃதே போல், வீட்டின்ப நுகர்ச்சிக்கண் முதல்வனது அருளும் அதனை எய்துவிக்கும் உயிரின் அன்பும் துணையாக முதல்வனது திருவடி எனப்படும் வீட்டின்பம் நுகரப்படும். இவ்வுண்மை சங்கத்துச் சான்றோர்களின் துணிபு என்பது,

*"...................... யாஅம் இரப்பவை*
*பொருளும் பொன்னும் போகமும் அல்ல நின்பால்*
*அருளும் அன்பும் அறனும் மூன்றும்*
*உருளிணர்க் கடம்பின் ஒலிதா ரோயே"*

என்னும் பரிபாட்டானும்,

"நின்னை யாம் இரப்பவை நுகரப்படும் பொருள்களும், அவற்றை உளவாக்கும் பொன்னும், அவ்விரண்டானும் நுகரும் நுகர்ச்சியும் அல்ல; எமக்கு வீடு பயக்கும் நின்னருளும், அதனையுண்டாக்க நின்னிடத்து யாம் செய்யும் அன்பும், அவ்விரண்டானும் வரும் அறனுமாகிய இம் மூன்றுமே" எனவரும் அதன் உரையானும் உணரப்படும். இங்கு 'அறன்' என்னும் சொல் முதல்வன் திருவடிப்பேறு எனப்படும் வீட்டின்ப நுகர்ச்சியைக் குறித்து நிற்றல் இடம் பற்றி உணரப்படும்.

**மெய்யுணர்வும் அறம் எனப்படுதலை** "ஆலதன் கீழ் அறம் நால்வர்க்கு அருள் செய்தானை" என்னும் அப்பர் சுவாமிகள் திருமொழியானும், "அறத்தின் விருப்புச் சிறப்பொடு நுந்த" என்னும் ஞானாமிர்த அடிக்கு 'ஞானபாதத்தின்மேற் பிரியம் மிகவும் செலுத்தலாலே' எனவரும் பழையவுரை யானும் அறிக.

இக் கருத்துப்பற்றி நோக்கின், ஆசிரியர் திருவள்ளுவர்

*"அறத்தான் வருவதே இன்பம்"*

எனப் பாயிரவியலின்கண்ணும்,

*"அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்;*
*மறத்திற்கும் அஃதே துணை"*

எனவும்,

*"அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு*
*என்போ டியைந்த தொடர்பு"*

எனவும்,

*“அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்து*
*இன்புற்றார் எய்துஞ் சிறப்பு”*

எனவும் இல்லறவியலின்கண்ணும் கூறிய அறம் அன்பு, இன்பம் என்பவற்றின் இயல்பும், இன்றியமையாமையும் தொடர்பும் உலகவின்ப நுகர்ச்சிக்கு மாத்திரமன்றி வீட்டின்ப நுகர்ச்சிக்கும் ஒப்பப் பொருந்துதல் உணரத்தக்கது. இக் கருத்துப் பற்றியே “இன்புறுநிலை” எனப்படும். நிட்டையின் இயல்பைச் **“சார்பு உணர்ந்து சார்புகெட ஒழுகின்”** என்னுந் தொடரால் கூறியருளினார் ஆசிரியர் என்பது.

இதனால், சைவ சித்தாந்தத்தில், “உயிரின் அறிவிச்சை செயல்கள், பிறப்பு நிலையில் ஏகதேசமாய் விளங்கி உலக போகத்தை விடயித்து வந்தாற்போல, வீட்டு நிலைக்கண் வியாபகமாய் விளங்கி நின்று முதல்வன் திருவடி எனப்படும் வீட்டின்பத்தை விடயித்து நிற்கும்” என, முன் பின் மலைவற, பெத்தமுத்திகளின் ஒருமைப்பாடு துணியும் துணிபு திருவள்ளுவர் துணிபாதல் விளங்கும்.

மருளும் பேதைமையும் கெடுத்து மாசறு காட்சியைத் தலைப்பட்டார்க்கு உடம்புள்ளளவும் அதனை யொட்டி நிற்பது பிராரத்த வினையாகலின் அதன் விளைவைச் **சார்தருநோய்** எனவும், அது விளையுங்கால், ஒளி இருளைத் துரக்குமாறு போலச் சார்புணர்ந்து ஒழுகும் ஒழுக்கம் அஃது உயிரைச் சாரா வண்ணம் துரத்தலின், **அழித்துச் சார்தரா** எனவும் கூறினார். கூறவே, அஃது உடலூழாயே ஒழியும் என்பதும், அதுபற்றி, அஃது அவினாபாவமாய் உடன்கொண்டு வரும் ஆகாமிய வினையும் இன்றாம் என்பதும் பெறப்படும். பிறப்பிற்குக் காரணமாதல் பற்றி நல்வினைப்பயனும் நோய் எனவே அடக்கிக் கூறப்பட்டது.

உணர்தலாற் சார்பு கெடுதலும், கெடவொழுகலான் நோய் சாராமையும் உளவாம் என்க.

சார்புகெட என்றமையான் இருள்மலம் எனப்பட்ட ஆணவ வாதனை நீக்கமும், சார்தரு நோய் சார்தரா என்றமையான் இருள்சேர் இருவினை எனப்பட்ட கன்ம வாதனையின் நீக்கமும், இருவினையின் பற்றுக் கோடாக மருள் எனப்பெறப்பட்ட மாயா வாதனையின் நீக்கமும் பெறப்பட்டன. பிறப்புப் பண்டுதொட்டு வருதலின், உயிரான் அளவின்றி ஈட்டப்பட்ட வினைகளுள் இறந்தவுடம்புகளான் அனுபவித்தனவும் பிறந்த வுடம்பான முகந்தனவும் ஒழிய, மேலும் எஞ்சி நின்றனவாய சஞ்சித கன்மம் என்ன் ஆம் எனின், மேல் ஊழ் அதிகாரத்து,

*“வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி*
*தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது”*

என்பதனால், இருவினை முதல்வன் ஆணையான் வரும் என்பது பெறப்படுதலின், அவை முதல்வன் ஆணையான் அறும் என்றுணர்க. சைவ சித்தாந்தத்தில், முதல்வன் ஆசான் மூர்த்தியாய் நின்று செய்யும் தீக்கையால் சஞ்சிதம் அறும் என்பது இதனோடு ஒத்த முடிபாதல் காண்க.

ஒருவன் ஏறியிருந்து ஆடா நின்ற ஊசல் கயிறற்றதாயின் அவனுக்கு ஆண்டு இடையீடின்றித் தாரகமாவது நிலனேயன்றிப் பிறிதில்லை யாமாறு போல, உயிர் பாசங்களின் நீங்கிய வழி ஆண்டுத் தாரகமாவது முதல்வன் திருவடியாவதன்றிப் பிறிதில்லை என்பது எளிதின் உணரப்படும் என்னுங் கருத்தால் பாசவீடு மாத்திரையே நிற்றலின் பயனாகக் கூறி, இன்பப் பேற்றினை எடுத்தோதா ராயினர்; இதுவே ஆசிரியர் கருத்தென்பது அவர் அடுத்து வரும் அவாவறுத்தல் என்னும் அதிகாரத்து,

*“இன்பம் இடையறா தீண்டும் அவாஎன்னும்*
*துன்பத்துள் துன்பம் கெடின்”*

என்க் கூறுதலானும் உணரப்படும்.

இப் பாட்டின் பொருள்:

*“சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் என்றமையால்*
*சார்புணர்தல் தானே தியானமுமாம்; – சார்பு*
*கெடஒழுகின் நல்ல சமாதியுமாம்: கேதப்*
*படவருவ தில்லைவினைப் பற்று.”*

என்னும் திருக்களிற்றுப்படியார் விளக்கம் பற்றி உரைக்கப்பட்டது.

திருக்குறள் மறை யாகலின், அதனுட் போதரும் உறுதி மொழிகளைக் குறியேறிய எல்லை அறிந்து ஒழுகி மக்கள் உய்ய வேண்டும் என்னும் பேரருளாலே சித்தாந்த நெறித் தலைவர்கள் இங்ஙனம் விளக்கங்கள் செய்து போந்தனர். முதனூற் பொருளை விளக்குவான் வேண்டி, சொற்களை ஆண்டு உள்ளவாறே எடுத்துக் கொண்டு இன்றியமையாத சொற்களைத் தலைப்பெய்து பின்வரும் ஆசிரியன்மார்களான் இயற்றப்பட்டவற்றை வட நூலார் உபப்பிருங்கணம் என்ப. உபப்பிருங்கணம் உள்ள பிரமாண மூலங்களை உபப்பிருங்கணங் கொண்டே பொருள் கொள்ள வேண்டும் என்பது மரபு.

இனி,

*"காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்*
*நாமம் கெடக்கெடும் நோய்"*

என்னும் இறுதிப்பாட்டு, மேலே 'சார்தரா சார்தரு நோய்' என்றதனால் இன்றாம் எனப்போந்த ஆகாமிய வினை இன்றாதற்குக் காரணங் கூறி மேலதனை வலியுறுத்தி. அடுத்த அதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்கின்றது:

இதன் பொருள் : சார்புணர்ந்து ஒழுகுவார்க்கு விருப்பு வெறுப்புத் திரிபுணர்வு என்னும் இக் குற்றங்கள் மூன்றனுடைய பெயருங்கூடக் கெடுதலால், அவற்றான் எய்தும் மேல்வினை (ஆகாமியம்) இன்றாம், என்பது.

உடம்பை யொட்டி நிற்கும் பிராரத்தவினை விளையுங்கால், அவ் விளைவை நுகர்தற்கண் விருப்பு வெறுப்புக்களும், அவை பற்றிப் பொருளல்லவற்றைப் பொருளென்றுணரும் மயக்கமும், அதுபற்றி மன மொழி மெய்களான் இயற்றப்படும் செயல்களான் மேல்வினையும் என இம் முறையான், முன்னைவினை நுகர்ச்சிக்கண் பின்னைவினை ஈட்டம் உளதாகியே வருதலின், பிறப்பு இடையறாது வரும்; ஆகலின்,முற்செய்வினை அனுபவத்தான் ஒழிதற்கண் மேல்வினை ஏறுதற்குக் காரணமாவன அவ்வனுபவத்தின் உடனிகழ்ச்சியாகிய காமம், வெகுளி, மயக்கம் என்னுங் குற்றங்களாம். அக்குற்றங்கள், சார்புணர்ந்து சார்புகெட ஒழுகும் ஞானவொழுக்கத்தின் முன்னர், காட்டுத்தீ முன் பஞ்சுத்துய்போலு மாகலின்,இவை மூன்றன் நாமங்கெட எனவும், இவை முற்றுங் கெடுதலான் இவற்றான் ஏறும் மேல்வினை இன்றாமாகலின், கெடும் நோய் எனவும் கூறினார்.

நாமமும் என்னும் இழிவு சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது; கெட என்பது வினையெச்சத் திரிபு; நோய் ஆகு பெயர்.

குற்றங்கள் மூன்றனுள், காமமாவது இது வேண்டும் என நிகழும் அவாவின் விளைவாய் அப் பொருட்கண் செல்லும் விருப்பு; வெகுளியாவது அதுபற்றி அதன் மறுதலைக்கண் செல்லும் வெறுப்பு; மயக்கமாவது அவ்விரண்டும் பற்றி உலகப்பொருள் காட்சிப்பட, அவற்றைச் சுட்டியறியும் திரிபுணர்வு. எப்பொருள் எத்தன்மைத்தாயினும், அப்பொருட்கண் மெய்ப்பொருளே கண்டிருப்பார்க்கு, அக்காட்சி சலிப்பின், இவை இவ்வாற்றான் வந்து புகுது மாகலின், இவையெல்லாவற்றுக்கும் மூலமாயுள்ள அவாவை அயர்வறு மெய்யுணர்வால் அறுக்குமாறு அடுத்த அதிகாரத்தான் உணர்த்தப்படுகின்றது.

இங்குக் கூறிப்போந்த முறைப்படி மெய்யுணர்ந்து அவாவறுத்தோரே நீத்தார்,

அறவோர், நிறைமொழி மாந்தர் எனப்படுவர். இவரே உலகிற்கு உறுதி கூறவல்ல தலைவராவர் ஆகலின், இவர் பெருமை 'நீத்தார் பெருமை' என வைத்துப் பாயிரத்துட் கூறப்பட்டதென்றுணர்க.

அவாவறுத்தல், நீத்தார் பெருமை என்னும் அதிகாரங்களால் உணர்த்தப்படும் உண்மைகள் சைவசித்தாந்த நூல்களுள் அணைந்தோர் தன்மை என வைத்துக் கூறப்படும்.

'மெய்யுணர்தல்' என்னும் அதிகாரத்தின் பாட்டுக்களை இங்ஙனம் நெறிப்படக் கொண்டு உரையாக்கால், அவை கூறியது கூறல், நின்று பயனின்மை முதலிய குற்றம்பட வெற்றெனத் தொடுத்தலாய் முடிந்து, பயப்பாடிலவாய்ப்போதல் கண்டு கொள்க.

இவ்வாராய்ச்சியால், கடவுள் வாழ்த்து, நீத்தார் பெருமை, நிலையாமை, துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தல், ஊழ் என்னும் இவ்வதிகாரங்களால் உணர்த்ததப்படும் ஆழ்ந்த அடிநிலை விழுப்பொருள்கள் சித்தாந்த சைவத்தின் முடிபுகளாதல் தெளியப்படும்.

இனி, மெய்யுணர்தல் அதிகாரத்துள் கூறப்படும் வீட்டு நெறியினைச் சைனசமய முடிபே என்பாரும், அது புத்தசமய முடிபே என்பாரும் உளர்.

அதனைச் சைன சமய முடிபென்பார் கூறுவன:

"[1] சம்ய தரிசனம் (நற்காட்சி), சம்யக்ஞானம் (நன்ஞானம்), சம்யக் சாரித்ராணி (நல்லொழுக்கம்) ஆகிய இவைகள் மோக்ஷ வழிகளாகும்; இம் மூன்றும் இரத்தினத்திரயம் எனப்படும்.

இவற்றைத் திருவள்ளுவர்,

*"இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி*
*மாசறு காட்சி யவர்க்கு"*

எனவும்,

*"ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்*
*வான நணிய துடைத்து"*

எனவும்,

---

1. திருக்குறள் ஆராய்ச்சியும் ஜைன சமயசித்தாந்த விளக்கமும், பக். 23, 24.

*"சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்*
*சார்தரா சார்தரு நோய்"*

எனவும் விளக்கியிருக்கின்றார்.

'சார்புணர்ந்து' என்பது நற்காட்சி நன்ஞானம் இவ்விரண்டும் உணர்வதாம்.

இதனைத் திருத்தக்க தேவரும்,

*"உள்பொரு ளிதுவென வுணர்தல் ஞானமாம்*
*தெள்ளிதின் அப்பொருள் தெளிதல் காட்சியாம்*
*விள்வற இருமையும் விளங்கத் தன்னுளே*
*ஒள்ளிதிற் றரித்தலை ஒழுக்கம் என்பவே"*

என்று சீவகசிந்தாமணி 2845ஆம் கவியில் கூறுகின்றார்.

இவர் தாம் கூறும் வீட்டு நெறியினைச் 'சார்புணர்ந்து ஒழுகின்' என்னுந்தொடரில் அடங்கியுள்ளதெனவும், அதில் உணர்ந்து எனவருஞ் சொல்லின் பொருள் 'இருணீங்கி', 'ஐயத்தினீங்கி' என்னும் பாட்டுக்களால் விளக்கப்பட்டுள்ளது எனவும் குறிப்பிக்கிறார். உள்பொருள் இது என உணர்தல் ஞானம் என்பதில் உள்பொருளாவது இன்னது என விளக்கினார் இல்லை. அஃது அவர் கூறும் கடவுள் எனின், அக்கடவுளுக்குப் பிறபொருள்களோடு எத் தொடர்பும் இன்மையின், அதனைச் சார்பு என்னும் சொல்லால் திருவள்ளுவர் குறித்தார் என்றல் பொருந்தாது. சார்பு என்னுஞ் சொல் முன் பாட்டுக்களின் மெய்ப்பொருள், உள்ளது, செம்பொருள் எனக் குறித்து வந்த உலக முதற்பொருளை, அஃது உயிர்களின் தாரகமாய் நிற்கும் இயல்பு தோன்ற, குறிப்பதாம் என்பது வெளிப்படை; சைனர் தாம் உள்ளது என்னும் பொருளை அவ்வாறு உலகிற்கு முதல் என்றோ சார்பு என்றோ கூற ஒருப்படார். ஆகலின், சார்புணர்ந்து என்னுந் தொடரின் ஆழ்ந்த விழுப்பொருளை இவர் கூறும் சமயத் தரிசனமும் சம்யக்ஞானமும் பொருளாகக் கொள்ளவில்லை என்பது தெளிவு. இவர் வீட்டு நெறி, இவர் கருத்தின்படி, மேற்காட்டிய மூன்று பாட்டுக்களாலே உணர்த்தக் கூடிய தாயின், அவ்வதிகாரத்துள் வரும் பிற பாட்டுக்கள் எப் பொருள் மேலன என எழுத் தடைக்கு விடை கூற வேண்டும். திருத்தக்கதேவர் தாம் கூறிய வீட்டு நெறியைத் திருவள்ளுவர் கூறியது என எவ்வகையானும் குறிப்பியாமை கருதத்தக்கது,

இனி உண்மையான் நோக்கின், சைன சமய முனிவர்கள் திருக்குறளில் ஞானம் என்னும் பகுப்பில் உள்ள நான்கு அதிகாரங்களுள் நிலையாமை ஒன்றனையே சிறந்தெடுத்துக் கொண்டு, அதனுட் கூறப்பட்ட பொருள்களை

இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை என அவற்றின் இழிவு தோன்ற விரித்துக் கூறி, ஈதல், (புறத்) துறவு, (உடம்பை வருத்தும்) தவம் என்றின்னவற்றையே வலியுறுத்தி நூல்கள் செய்துள்ளமை விளங்கும். மெய்யுணர்தலை அங்ஙனஞ் சிறந்தெடுத்துக் கொண்டு, அதன் இயல்பு, உண்மை, அதனைப் பெறும் வழி, அதனான் எய்தும் பயன், அதனைப் பெறுதற்கு முன் உள்ளதாகிய பண்டைச் சிற்றறிவு நீங்குதற்கு உபாயம், சிற்றறிவால் துன்பங் கலந்த தூயதல்லாத சிற்றின்பமும், மெய்யுணர்வால் துன்பக் கலப்பில்லாத தூய அந்தமில் இன்பமும் பெறுந்திறன், சிற்றறிவுக்கு விடயமாவது இது, மெய்யுணர்வுக்கு விடயமாவது இது என்னும் பாகுபாடு என்றின்ன இன்றியமையாத பொருள்களை விளக்குவனவாய் இவர் செய்துள்ள நூல்களைக் காண்டல் அரிது. ஒழுக்க நெறி பற்றியும் தமிழ் மரபு பற்றார். தமிழ் நாட்டவர் நீராடலை எஞ்ஞான்றுங் கைவிடார்; துறவு நிலையினும் ''புறந்தூய்மை நீரான் அமையும்'' எனத் திருவள்ளுவர் நீராடலைக் கூறுகின்றார்; திருமுகாற்றுப்படையில் துனியில் காட்சி முனிவர்களை மாசுஅற இமைக்கும் மேனியர் என்கின்றார் நக்கீரர். இவ்வொழுக்கத்தினை அருள் என்னுங் குறிக்கோள் காரணமாகச் சைனத் துறவிகள் கை விடுவர்; நீராடாமை இவர்தம் தவத்தின் உறுப்பு: திருநாவுக்கரசர் சமண சமயத்தின் நீங்கிச் சைவஞ் சார்ந்த பின், உடன் பெற்ற பேறுகளுள் ஒன்றாக 'நீராண்ட புரோதாயம் ஆடப் பெற்றோம்' என மறுமாற்றத் திருத்தாண்டகத்துள் கூறுதல் கருதத்தக்கது. இன்னும், துறவு என்னுங் குறிக்கோள் காரணமாக ''அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை'' எனத் திருவள்ளுவரால் புகழ்ந்தோதப்பட்ட இல்லறத்தைத் தீவினை எனக் குறியிட்டு வெறுப்பர்; இசையும், கூத்தும் என்பவற்றைக் காமம் விளைப்பனவே எனக்கூறி விலக்குவர். இவர்தங்கொள்கை இதுவாக, திருவள்ளுவர் காமம், இசை, கூத்து முதலாயின அறமாதலும் உண்டு; பாவமாதலும் உண்டு ஆகலின், அவை அறமாகும் வாயில் அறிந்து கைக்கொண்டு ஒழுகி இம்மை, மறுமை, வீடு என்னும் மும்மைப் பயனையும் முறையான் எய்தியுய்ய வழி காட்டுவர். இக்காரணங்களாலும் பிறவாற்றாலும் சைனர்கள் கூறும் முடிநிலை முடிபுகள் திருவள்ளுவர் நூன் முடிபுகளைச் சொன்மாத்திரையான் ஒருபுடை யொப்பன போற் காணப்படினும், அவை திருவள்ளுவர் நூற்பயனை எம்மருங்கும் பற்றி யுணர்ந்து துணிந்த முடிந்த உண்மைத் துணிபுகள் அல்ல வாதல் பெறப் படுதலின், அவை திருக்குறள் உட்கிடையை உணர்த்தும் வலியிலவாதல் தெளியப்படும்.

ஒருசாரார் திருக்குறட்பாயிரத்தில் உள்ள கடவுள் வாழ்த்து, வான்சிறப்பு, நீத்தார் பெருமை, அறன் வலியுறுத்தல் என்பவற்றை முறையே அருகசரணம், சித்த சரணம், சாது சரணம், தர்ம சரணம் என்னும் துதிகள் என்பர். அக் கூற்று

அவ்வதிகாரங்களுள் ஒன்றேனும் நூலின் புறத்துறுப்பாய்த் தற்சிறப்புப்பாயிரமாய் மங்கல வாழ்த்து நுதலிய தன்றாய், அவையெல்லாம் நூலுட் கூறப்படும் அறத்தின் அகவுறுப்பாய், அறத்தையுணர்தற்கு வாயிலாக இன்றியமையாது உணர்த்தக்கடவ அடிப்படை உண்மைகளை நுதலுவனவாதலை அறியும் நுண்ணுணர்வில்லாதார் கூற்றே யாதல் யாவரானும் தெளியப்படும்.

இனி, திருவள்ளுவர் கூறிய மெய்யுணர்வைப் புத்த சமய முடிபே என்பார் கூறுவன*:–

"பௌத்தமத தத்துவம் பன்னிரண்டு நிதானங்களையுடையது. அவை அவிஜ்ஜை ஸங்க்காரம, விஞ்ஞானம், நாமரூபம், ஷளாயதனா, பஸ்ஸ, வேதனா, தண்ஹா, உபாதானம், பவம், ஜாதி, ஜராமரணம் என்பவை. பாலிமொழியினவாகிய இவற்றைச் சீத்தலைச் சாத்தனார் முறையே பேதைமை, செய்கை, உணர்வு, அருவுரு, வாயில், ஊறு, நுகர்வு, வேட்கை, பற்று, பவம், தோற்றம், வினைப்பயன் என மொழிபெயர்த்துள்ளார். இவை தமிழில் பன்னிரு சார்பு எனப்படும். இவற்றை அறிந்து அறுத்தால் பிறப் பிறப்பின் நீங்கி நிர்வாண மோக்ஷம் எனப்படும் வீடு பேற்றினை அடையலாம். இங்ஙனமாகலின்,

*"சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்*
*சார்தரா சார்தரு நோய்"*

என்னும் பாட்டிற்குப் "பன்னிரு நிதானங்களை உணர்ந்து அவை கெடும்படி ஒழுகின் பிறவிநோய் சாராது என்பதே பொருளாம்" எனவரும்.

மணிமேகலை ஆசிரியர், பன்னிரு நிதானங்களைச் சார்பிற்றோற்றம் எனவும், இயல்பு ஈராறு எனவுங் குறித்துள்ளனரேயன்றிச் சார்பு என்னுஞ் சொற்கு அவை பொருள் எனக் கருதும்படி அச் சொல்லை ஆண்டிலர். டாக்டர் சாமிநாத ஐயர் அவர்கள் குறிப்பும், சென்னைப் பல்கலைக் கழக அகராதியும் அச் சொற்கு அப் பொருளைப் புணர்த்தியுள்ளன. அன்றியும், திருவள்ளுவர் நிதானம் அல்லது இயல்பு என்னுங் குறியீடுகளை ஆளாமையும், பன்னிரண்டு என்னுந் தொகையைச் சார்பென்னுஞ் சொல்லோடு புணர்த்திக் கூறாமையும் கருதத்தக்கன. திருக்குறளை முன்னும் பின்னும் கோவைப் பட நோக்குவார்க்குச் "சார்புணர்ந்து சார்பு கெட வொழுகின்" என மெய்யுணர்தல் அதிகாரத்து வருந்தொடர், துறவு அதிகாரத்துப் பற்று விடற்குக் கூறப்பட்ட 'பற்றுக பற்றற்றான்

* பௌத்தமும் தமிழும் (தெ. சை. சி. நூ. ப. கழக வெளியீடு) பக். 13 முதலாகக் காண்க.

பற்றினை' என்னும் உபாயத்தை வாய்ப்பச் சாதிக்குமாறு உணர்த்தி, முடிந்தது முடித்தலாக (நிகமனமாக) நிலைபெறல் எளிதின் விளங்கும். இதனால், இப்பாட்டைப் புத்தர் கூறும் ஆலய விஞ்ஞானத்தைப் பொருளாகக் கொண்டது என்னும் போலி முடிபு, மணிமேகலையாசிரியர் புத்தமதக் கொள்கைகளை மொழிபெயர்க்கையில் திருக்குறளில் வரும் பேதைமை, வாயில், இருள், மருள் என்றாற்போலும் சொற்களை எடுத்தாண்டுள்ளமை பற்றியும்,

*"யாமேல் உரைத்த பொருள்கட் கெல்லாம்*
*காமம் வெகுளி மயக்கங் காரணம்"*

எனத் திருக்குறளின் சொற்றொடரைக் கொண்டமை பற்றியும் வந்ததேயன்றி, உண்மையாராய்ச்சியால் விளங்கியதன்று என்பது தெளியப்படும்.

இனித் திருவள்ளுவர் கூறிய மெய்யுணர்வின் இயல்பை,

*"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்*
*மெய்ப்பொருள் காண்ப தறிவு"*

*"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்*
*செம்பொருள் காண்ப தறிவு"*

என்பவை கொண்டே துணிதல் வேண்டும். இவற்றை நோக்கியுணரின், அவர் உணர்த்தும் மெய்யுணர்வு மெய்ப்பொருள் அல்லது செம்பொருள் எனப்படும் முதற் பொருளைப் பொருளாக (விடயமாக) வுடையது என்பது விளங்கும். விளங்கலின், பின்னர்ச் "சார்புணர்ந்து" என்னுமிடத்து உணர்ந்து என்னும் வினைக்குச் செயப்படு பொருளாகவுள்ள சார்பு என்பது அம் முதற் பொருளையன்றி அதனின் வேறாய பிறிதொன்றனையுங் குறியாது என்பது மந்த உணர்வினரும் உணர்ந்து கொள்ளக் கூடியது. ஆகலின், அவ்வியைபு அறியாது, சார்புணர்ந்து எனவும் சார்புகெட எனவும் வரும் ஈரிடத்தும் சார்பு என்னுஞ் சொல் ஒரு பொருளையே குறிக்கும் எனக்கொண்டு, அங்ஙனங் குறிக்கப்படுவது பன்னிரு நிதானத் தொகுதியே என்றல் போலியுரையாவதன்றிப் பொருளுரை யாகாது. அன்றியும், அங்ஙனம் உரைத்துக் கொள்ளுதற்கு, பின்னர் வரும் சார்பு, அச் சார்பு எனச் சுட்டோடுங் கூடி வருதல் வேண்டும்.

ஈண்டு, புத்தர் பந்தம் நீங்கிய வழி வேறுபாடின்றித் தொடர்ச்சியாயெழுவது எனக் கூறும் ஆலய விஞ்ஞானம் (ஒடுங்கும் ஞானம்) யாதொன்றனையும் பொருளாக (விடயமாக) உடையதன்றாதலும், திருவள்ளுவர் உணர்த்தும்

மெய்யுணர்வு செம்பொருளைப் பொருளாக (விடயமாக) உடையதாதலும் ஆகிய வேறுபாடு உணரத்தக்கது.[1]

மேலும், மணிமேகலை ஆசிரியர்க்குத் திருவள்ளுவர் கூறிய வீட்டுநெறி, புத்தர் கூறிய துக்க நிவாரண மார்க்கமே என்பது துணிபாயின், அவர், பவத்திற மறுகெனப் பாவை நோற்ற காதையில், பிடக நூற்பொருளை மொழிபெயர்த்துக் கூறாது, திருவள்ளுவர் அருளிச் செய்த மெய்யுணர்தலையே விதந் தெடுத்துக் கொண்டு, அவ்வதிகாரப் பொருளையே முன்பின் மலைவற[2] விரித்துக் கூறியிருப்பர்; அவ்வாறு அவர் கூறத் துணிந்திலர் என்பது கருதற்பாலது.

இவற்றால், வாழ்க்கையின் நிறைநிலையாகிய குறிக்கோளைத் தெரிவிக்கும், "சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின்" என்னுந் திருக்குறள், மேற்போக்காகத் தனிப்படக்கொண்டு நோக்கும்போது, போலியாற் சொல்வார் சொல்லும் பொருட்கெல்லாம் இடந்தருவது போற் றோன்றினும், இயைபும் பொருட்பயனும் நாடி உண்மைப் பொருளைக் கண்டு உரைக்கப் புகுங்கால், தான் நுதலிய உண்மைப் பொருளையே தெள்ளிதிற் பயந்து, திட்பநுட்பம் சிறந்ததாதலும், அங்ஙனம் பயக்கும் பொருள் சைவசித்தாந்தத் துணிபையே தேற்றுவதாதலும் உணர்க.

திருக்குறள் எல்லாச் சமயத்தாரும் நல்ல எனக் கொள்ளும் அறங்களையும், பொருளின்பங்களின் திறன்களையும் உணர்த்துவது என்பது கற்றோர்க்கும் மற்றோர்க்கும் விளங்கிக் கிடக்கும் உண்மை. ஒரு சோலையின் நடுவண், தழைத்தோங்கி வளர்ந்து, தண்ணிழல் பரப்பும் தேமா மரத்தினைக் காண்போர் யாவர்க்கும் முற்படத் தோன்றுவன அதன் பராரையும், கவடும், இலையும், தளிரும், அரும்பும், மலரும், காயுமேயன்றோ? மற்று அதற்குப் பரம ஆதாரமாய், நிலத்தில்

---

1. "மேலைச் சூத்திரத்தின் 'இறைபணி வழுவாது நிற்க' என்ற வழி, .......... அவ்வாறு நிற்கும் ஆன்மாவினுடைய அறிவிச்சை செயல்கள் அவ்விடத் தொன்றனை விடயிக்குமாறில்வழிப் புத்தர் கூறும் ஆலய விஞ்ஞானம் போலச் சூனியமாய் முடியுமா லென்னும் ஆசங்கையை நீக்கி அவற்றிற்கு விடயம் இதுவென்ப துணர்த்து முகத்தானே .......... சிவப்பேறு கூடுமாறுணர்த்தி . ......" (சூ 11. கருத்துரை) எனவருஞ் சிவஞான பாடியம் கருதற்பாலது.

2. "*இந்நால் வகையான் மனத்திருணீங் கென்று*
*முன்பின் மலையா மங்கல மொழியின்*
*ஞான தீப நன்கனங் காட்ட*"

(மணிமேகலை, 30, 360–3)

என்றமை காண்க.

பரந்து உருவிப் புக்கு ஊன்றி நின்று, அதன் சாரத்தை அதற்கு ஊட்டாநிற்கும் வேரைப் பற்றி அக் காட்சியிடை நினைவுகூரவல்லார் எத்துணைப்பேர்? அன்றியும், அதன் உச்சியிற் பழுத்த ஆராவின்ப அருங்கனியைக் கட்புலங் கொள்வாரும் சிலரே யன்றோ? செந்தமிழ்ப் பொதுமறை யாகிய திருக்குறட்கும் அதுவே.

திருவள்ளுவர் தாம் கூறும் அறம் பொருள் இன்பங்களின் அடிநிலையைத் திறம்படப் பாரிக்கும் இடம் பாயிரவியல்; மக்கள் வாழ்க்கையின் முடிநிலைப் பயனைப் படிமுறையான் தெரித்துணர்த்தும் இடம் அறத்துப்பாலில் துறவறவியலின் பிற்பகுதியாகும். நூலின் அமைப்பும் போக்கும் நோக்கும் உணர்ந்து, இவ்விரண்டிடங்களையும் நெறிப்பட ஆராயவல்ல, நுண்மாண் நுழைபுலச் செல்வர் பின்வரும் உண்மையினை அறிவர். அது திருவள்ளுவர் (உண்மைக்) கடவுட்கொள்கையினையும், அதனை அடிப்படையாகக் கொள்ளும் ஒழுக்க நெறியினையும், அவற்றின் விளைவாய் அமையும் ஞான மெய்ந்நெறியினையும் இன்றியமையாச் சிறப்பினவாகத் தம் நூலுள் வைத்து உணர்த்தியுள்ளார் என்பது. இங்ஙனம் திருவள்ளுவர் உணர்த்தும் வீட்டியல், குறிக்கோள் ஒன்றுமில்லாது, கண்டதே காட்சி, கொண்டதே கோலம் எனக் கருதிப் பகுத்தறிவு வாதம் பேசும் உலகியல் வாதிகளின் அறிவு நிலையைக் கடந்தது எனல் கூறவேண்டா. இன்னும், அது பௌத்தம், சைனம், சுமார்த்தம் என எண்ணவரும் சமயக் கணக்கர் மதிவழி எல்லைக்ளையும் கடந்ததேயாம். மற்று அது நந்தமிழகத்தே தோன்றி, இறைவன் திருவருளால் உறுதி உணர்த்தியருளிய திருவருள் நெறித் தலைவர்கள், மெய்யுணர்ந்து, அவாவறுத்து, செம்புலக் காட்சியிற் கண்டு வெளிப்படுத்த திருநெறியாகிய சைவ மெய்ந்நெறியின்பாற்படுவதே ஆம். இவ்வுண்மை மதி நுட்பம் நூலோடு உடையார்க்கு இனிது விளங்கும்.

## *திருமால் வழிபாடு*

திருமால் வழிபாடு, அம்மை, மூத்த பிள்ளையார், திரு முருகன் முதலாயினோர் வழிபாடு போலப் பண்டு நந்தமிழகத்துச் சிவ வழிபாட்டில் அடங்கி நின்றதேயாம். அது பிற்காலத்து, ஆரிய மொழிச்சார்பும் ஆரிய வழக்குச் சார்பும் பெற்றதன்பின்னரே, வைணவம் எனச் சிவநெறியின் வேறுபட வழங்குவதாயிற்று. 'இறை மாட்சி' என்னும் அதிகாரப் பெயர் விளக்கத்தினும், சில குறட்பாக்களின் உரைகளினும் பரிமேலழகர் குறிப்பாக உரைப்பன சில கொண்டு, இக்காலத்துச் சிலர் திருவள்ளுவர் இறைவன் எனக் கொண்டது திருமாலையே எனச் சாதிப்பர். அன்னோர் கூற்றும் விளக்குதற்கு உரியது.

அவர்தம் கூற்றுக்குச் சிறந்த ஆதாரமாகக் காட்டுவன:

*"மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்*
*தாஅய தெல்லாம் ஒருங்கு"*

என்பதும்,

*"தாம் வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்*
*தாமரைக் கண்ணான் உலகு"*

என்பதும் ஆம்.

இக் குறட்பாக்கள் முறையே திருமாலின் லீலா விபூதி நித்திய விபூதி என்பவற்றை உணர்த்தித் திருமாலின் முதன்மை தேற்றுவன என்பர். நுண்ணுணர்வு உடையார்க்கு இரண்டு பாக்களினும் இகழ்ச்சிக் குறிப்பு இருத்தல் விளங்கும்.

இவற்றுள் முன்னையது "மாயோன் மாவலிபால் குறளாகக் கரந்து சென்று, மூவடி மண் இரந்து, பின் நெடியனாய் நீண்டு, தாவி அளந்த பரப்பு முழுவதும் மடியில்லாத அரசன் (தன் தாளாண்மையானே) ஒருங்கே எய்துவன்" என்கின்றது. இதனால் மாயோன்பால் கரந்து சேறலாகிய முறை செய்யாமையும், இரத்தலாகிய இளிவரவும் குறிப்பிக்கப்பட்டு, முயற்சியுடைய மன்னவன் தன் செல்வம் பெருக்கற்கு அவ்விரண்டையும் மேற்கொள்ள வேண்டுவதின்று என மடியின்மையின் பயன் உணர்த்தப்படுகின்றது.

இதனானே,

*"முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு*
*இறையென்று வைக்கப் படும்"*

என்னும் குறட்பாவால் குறிப்பிக்கப்படும் இறை இயல்பு அடியளந்தான் மேற் செல்லாமைப் பொருட்டு முறை செய்து என்னும் அடைபெய்து வைக்கப்பட்டது என்பது உய்த்துணரப்படும். திருமால்நெறியினர், மாயோன் செய்த வஞ்சனை பற்றியே அவற்கு முதன்மை கூறுவதை மரபாகக் கொள்வர். சிவபிரான் பசுக்கள் எனப்படும் உயிர்களைப் பாசத்தின் நீக்கிக் காக்கும் இயல்பு பற்றிப் பசுபதி எனப்படுதலின், திருவள்ளுவர் குறிப்பிக்கும் இறையியல்பு அவர்க்கே உரிய சிறப்பியல்பாய் முடிதல் காண்க. (பதி– காக்கிறவன்; பா – காத்தல், தி–வினை முதற்பொருண்மை உணர்த்தும் விகுதி)

இனி, திருமாலின் நித்திய விபூதி உணர்த்துவது எனப்படும் மற்றையதும் 'பரமபதம் என்னும் தாமரைக் கண்ணான் உலகிற்பெறும் இன்பம் தாம் விரும்பும் மகளிர் மெல்லிய தோள்மேல் துயிலுதலாற் பிறக்கும் இன்பத்திற் சிறந்தது

கொல்லோ?' எனப் புணர்ச்சி மகிழுந் தலைவன் கூற்றாக வருதலின், அஃது அவன் மாயோன் உலகவின்பத்தைச் சிறப்பின்மை கூறிப் பொருட்படுத்தாது இகழும் இகழ்ச்சிக் குறிப்பினையே உடையதாதல் காண்க. இக்கருத்தே பற்றியன்றே கமலை வெள்ளியம்பலவாண முனிவர், முதுமொழிமேல் வைப்பில்,

*"அரன்அடியார் அல்லார் அடைபதந் தானும்*
*இருநிலஇன் பத்திழிவாம் என்று—வருவதிது:*
*தாம்வீழ்வார் மென்றோட் டுயிலின் இனிதுகொல்*
*தாமரைக் கண்ணான் உலகு"*

என்பாராயினர்! செம்புலச் செல்வர்கள் நிரதிசய வின்பமாகிய வீட்டின்பத்தைக் குறிக்கவரும் இடத்து, இக்குறட்பாவிற்போலச் சிற்றின்பத்தை அதனோடு உறழ்ந்து கூறாது, பொருவியே கூறுவர் என்பதை,

*"உணர்ந்தார்க் குணர்வரி யோன்தில்லைச் **சிற்றம்பலத் தொருத்தன்***
***குணந்தான் வெளிப்பட்ட** கொவ்வைச் செவ் வாயிக் கொடியிடைதோள்*
*புணர்ந்தாற் புணருந் தொறும்பெரும் போகம்பின் னும்புதிதாய்*
*மணந்தாழ் புரிகுழ லாளல்குல் போல வளர்கின்றதே"*

என்னும் திருச்சிற்றம்பலக் கோவையான் உணர்க.

இன்னும் திருக்குறளில், சிவபிரானது இறைமையைக் குறிப்பான் உணர்த்தி வரும்

*"கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்*
*ஆற்றல் தலைப்பட் டவர்க்கு"*

என்பதினும்,

*"பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க*
*நாகரிகம் வேண்டு பவர்"*

என்பதினும் இகழ்ச்சிக் குறிப்புச் சிறிதும் இன்மை காண்க.

இவற்றுள் முன்னையது மார்க்கண்டேயனார் வரலாற்றைச் சுட்டி (மணக்குடவர் உரையைக் காண்க), தன்னைத் தவத்தான் வழிபடுவோரை இறப்பு அச்சத்தின் நீக்கி உய்யக் கொள்ளும் இறைவனது ஒப்பற்ற பேராற்றலைக் குறிப்பிக்கின்றது; பின்னையது இறைவன், முன் தன்னை எண்ணாது இகழ்ந்த தேவர்கள் பின் சரண்புகுந்தபோது, அவர்கள்மாட்டுக் கண்ணோடி, நஞ்சுண்டு உய்வித்து அமுதீந்த வரலாற்றைச் சுட்டிக் குற்றமுடையோரையும் நெறிப்படக்

காப்பாற்றி அருளும் அவனது ஒப்பற்றி பேரருளைக் குறிப்பிக்கின்றது. இவை இரண்டும் இறைமைக் குணங்களாதல் காண்க. இவற்றால் அன்னோர் கூறுவனவெல்லாம் போலியாய் முடிதல் தெளியப்படும்.

## அறத்துப்பாலின் தொகைப்பொருள்

இனி, அறத்துப்பாலைப் பொதுப்படநோக்கி அதன்கண் வந்துள்ள அரும் பொருட் பெருமணிகளை ஒருவாறு கோவை செய்து நோக்கின் திருவள்ளுவர் கொண்டுள்ள வாழ்க்கை முடிநிலை உண்மையை (Philosophy of Life) உணரக் கூடும்.

1. திருக்குறள் உயிர்க்கு உறுதி எனச் சுட்டும் குறிக்கோள் உலகியலிறந்த, பொறியுணர்வைக் கடந்த நிலை நிலை (Unsecular ideal) என்பதில் ஐயமின்று. உலகில் இன்பம் உண்டு. ஆயினும் அதனோடு துன்பமும் விரவியுள்ளது; பிறப்பு துன்பத்தைத் தருவதே. ஆகலின், "வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை". அகப் பற்றும் புறப்பற்றும் அற்றார்க்கு அன்றித் துன்பமும் அதன் காரணமாகிய பிறப்பும் அறமாட்டா. "பற்றிவிடாஅ இடும்பைகள் பற்றினைப் பற்றிவிடாஅ தவர்க்கு", "மற்றுந் தொடர்ப்பாடு எவன் கொல்? பிறப்பறுக்க–லுற்றார்க்கு உடம்பும் மிகை".

2. இனி, இடும்பைகளுக்கெல்லாம் காரணமாகிய பற்று அறுதற்கு நேர்வாயில் யாது? அவ்வாயிலாவது இறைவனது உண்மை நிலையைத் தலைப்பட்டுணர்ந்து பற்றி நிற்கும் வழி நிலையேயாகும். 'பற்றுக பற்றற்றான் பற்றினை; அப்பற்றைப் – பற்றுக பற்று விடற்கு,'' "பிறவிப் பெருங்கடல் நீந்துவர்; நீந்தார் – இறைவனடி சேரா தார்"; "பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும் – செம்பொருள் காண்ப தறிவு;" "சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச் – சார்தரா சார்தரு நோய்".

3. இவ்வாறு நமது குறிக்கோளும் அதனை அணைதற்கு வேண்டிய நேர்வாயிலும் பொருளின்பங்களின் வேறாய், உலகியலைக் கடந்து, பொறியுணர்வுக்கு அப்பாற்பட்டனவாயினும், நம்மை இந் நிலையினின்றும் உயர்த்தி அந்நிலைக்கண் உய்க்கவல்ல துணை உண்டு: அதுவே அறம். அறம் இறைவனது அருளாணையாய், அவன்றன் வடிவமாய்ச் செம்பொருளாய்த் திகழ்வது; பொருளின்பங்களைத் தன்வழிப் படுக்கும் சிறப்பினதாய், உயிர்கள் அக் கடல்களில் அழுந்தித் துன்புறா வண்ணம் எடுத்து, முத்திக்கரைக்கு ஏறவாங்குந் தோணியாவது. ஆகலின், அறமே பிறப்பு, வீடு என்னும் இருநிலைக்கண்ணும் உயிர்க்குத் துணையாவது; "அறவாழி அந்தணன் தாள் சேர்ந்தார்க்கு அல்லால் – பிறவாழி நீந்தலரிது!" "வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன் –

வாழ்நாள் வழியடைக்குங் கல்;" "சிறப்பீனுஞ் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்கு – ஆக்கம் எவனோ உயிர்க்கு;" "அறத்தான் வருவதே இன்பம்".

4. இனி, இத்தகைய அறநெறியைக் கடைப்பிடித்து ஒழுகுதற்கு உறுதுணையாவது அன்பே, அன்பான் அறமும், அறத்தான் அன்பும் வளரும்; அவ்விரண்டானும் அழியா இன்பம் பெறலாகும். அன்பு உயிரின் பண்பு. அதனை வளர்த்துக் கொள்ளவே உயிர்க்கு உடம்போடு தொடர்பு உளதாயிற்று. "அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார் – மறத்திற்கும் அஃதே துணை." "அன்பின் வழியது உயிர்நிலை; அஃதிலார்க்கு – என்புதோல் போர்த்த உடம்பு" "அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு – என்போ டியைந்த தொடர்பு".

5. இத்தகைய அன்பு முதற்கண் தாய், தந்தை, மனைவி, உறவினர், நட்பு என்னும் இடங்களில் அவ்வத் தொடர்பு பற்றி நிகழ்ந்து, ஆங்காங்குச் செய்யத் தகும் அறங்களாக உருவெடுத்து வளரும்; வளர்ந்து முறுகும் நிலைக்கண், தொடர்பு பற்றாது எல்லாவுயிர்கள் மாட்டும் செல்லும் அருளாக விளங்கி, உற்றநோய் நோன்று உயிர்க்கு உறுகண் செய்யாத் தவநெறிக்கண் நிற்பிக்கும்.

6. இவ்வாறு அருளும், தவமும், அறமும் நிறைந்த உள்ளமே அழுக்காறு, அவா, வெகுளி, பொய்ம்மை என்னும் மாசுகளைப் பற்றறத் துடைக்கும் உள்ளங்களாம். அவ்வாற்றான் மாசு நீங்கிய உள்ளத்திற் றோன்றுவதே மெய்யுணர்வு; அதனால் தலைப்பட்டுணரப்படுவதே செம்பொருளாகிய முதற்பொருள். அதனை இடைய்றாது உணர்ந்து ஒழுகி இருளும், மருளும், வினையுமாகிய மாசு கழுவி உலகப் பற்றைத் தீர விடுவதே பேரின்ப வீடு.

## முடிபு

மேற்கூறிய தொகைப் பொருளை நோக்கின், திருவள்ளுவர் கொண்ட வாழ்க்கை முடி நிலையியலில் (Philosophy of life) குறிக்கோள் உலகியலை இறந்ததேயாயினும் (Unsecular idealism) அதனைப் பயப்பிக்கும் ஒழுக்க நெறி நடைமுறை மெய்ம்மை (Practical realism)யோடு இயைந்ததாதல் விளங்கும். உலகியலைக் கடந்த குறிக்கோளை இவ்வாறு நடைமுறை மெய்ம்மையோடு இயைத்து, வாழ்க்கை அடிநிலையுண்மையினையும் ஒழுகலாற்றினையும் வகுத்துக் கூறும் சமயம் சித்தாந்த சைவ சமயமன்றிப் பிறசமயங்களாகாமை தமிழ் மாணவர்களாலும் தமிழறிஞர்களாலும் கருதத்தக்க உண்மையாகும். 'எவ்வுயிரும் நீங்காதுறையுமிறை சிவனென்று – எவ்வுயிர்க்கும் அன்பாயிரு" என ஒரே குறட்பாவால் திருவள்ளுவர் கூறிய அறத்துப்பாலின் பிழிவை எடுத்துக்காட்டிக் குறிக்கொள்கஞும் நெறி சைவ சமய நெறியேயாகும். இப்பாட்டால், ஒருவன் தன்

உயிர்க்குறுதி செய்துகொள்ள வேண்டின் எல்லா வுயிர்கள்மாட்டும் அருளுடையனாய் ஒழுகுதல் வேண்டும் என்பதும், அவ்வருளொழுக்கம் எவ்வுயிர்க்கண்ணும் உளனாதல் பற்றி இறைவன் எனப்படும் முதல்வனிடத்து அன்புடையார்க்கே அத்தொடர்பு பற்றி உளதாதல் கூடும் என்பதும் விளங்குதல் காண்க. தொடர்புணர்வு பற்றி நிகழ்தலின் அருளை அன்பெனறார்.

இங்ஙனம் நெறிப்பட நின்று பலவகையானும் ஆராய்ந்து பார்க்கும்போது, கொள்கைவகையில், சைவ நூற்றுணிபுக ளெல்லாம் திருக்குறளில் ஐயமின்றிப் பெறப்படுதலானும், அந்நூல் மெய்ந்நெறி, ஒழுக்கநெறி, உலகியல் என்பவற்றைக் கூறும் இடங்களில் யாதோரிடத்தும் சித்தாந்த சைவக் கொள்கையைக் குறிப்பாகவேனும் மறுக்காமையானும், மரபுவகையில், சைவசித்தாந்த நெறியினை வாழையடி வாழையாகத் தமிழகத்து விளக்கி வரும் திருநெறித் தலைவர்கள் எல்லாரும் செந்தமிழ்ப் பொது மறையாகிய திருக்குறளை அதன் அருமை பெருமைகளுக்குத்தக, உயர்ந்த இடங்களில், மேற்கோளாக எடுத்தாண்டு வருதலானும், இவையெல்லாம் பௌத்தம், சைனம் முதலாகிய பிற சமயங்களுக்குப் பொருந்தாமையானும், திருக்குறளைப் போலவே சித்தாந்த சைவம் உலகியல், ஒழுக்க நெறி, கடவுட் கொள்கை என்னும் மூன்றனையும் முறைப்பட இயையக் கொண்டு விளக்குதலானும், பிற சமயங்கள் இவற்றுள் ஒவ்வொன்றே பற்றிச் சில முடிபுகளைக் கூறிப் பிறவற்றைப் பொருட்படுத்தாமை, பழித்தல் என்றிவ்வகையால் இகழ்தலானும், பண்டுதொட்டு இதுகாறும் சிவநெறி வழக்கில், பிறமொழிகளில் எத்துணை வல்லுநராயினும் தமிழ்ப்பயிற்சி யிலராயினாரை ஆசிரியராகக் கொண்டொழுகாமையும், தமிழ்மொழியில் தமிழ்மரபுபற்றி நூல் ஆக்கியருளிய சான்றோர்களையே ஆசிரியர்களாகக் கொண்டொழுதலுமாகிய மரபு நிலைத்து வருதலானும், திருக்குறள் தனித் தமிழ் முதனூல் என்பது எல்லார்க்கும் உடம்பாடாகலானும், பிறவாற்றானும், **திருக்குறளின் உட்கிடை சைவ சித்தாந்தமே** என்பது யாவரானும் தெளியப்படும்.

இவ்வடிப்படை யுண்மையை மக்கள் உணர்ந்து, திருக்குறளை நுண்ணிதின் நோக்கிக் கண்டு நூற்பயன் கொள்ளுமாறு திருவருள் சுரக்க என இறைவன் திருவடிகளைத் தொழுது இவ்வாராய்ச்சியை முடிக்கின்றேன்.

வாழ்க திருக்குறள்! வாழ்க திருநெறி!!

வாழ்க உலகெலாம்!!!

# அகர நிரல் ( INDEX )